# திருக்குறள் நாடகம்

## காமத்துப்பால்

### களவியல் கற்பியல் இரண்டும்

அழமணிக்ககம் 24|7|3

---


தமிழ்ப்புலவர் திருமயிலை சண்முகம்பிள்ளை
அவர்கள் மாணவர்

மயிலை சீனி. கோவிந்தராசன்

அவர்களியற்றியது




ஆசிரியரவர்களின் மாணவரும்
'கலாசிந்தாமணி' என்னும் மாதப்பத்திரிகையின்

பதிப்பாசிரியருமான
மயிலை க. மாணிக்கவேலு முதலியார்
பதிப்பித்தது

 [விலை ரூ.

1923.

**1–4.**

# சிறுமணவூர் முனிசாமி

முதலியார் சன்ஸ்,

சிவகாமி விலாசம் அச்சுக்கூடம், சென்னை.

## பதிப்புரை

திருக்குறள் என்பது அறம், பொருள், இன்பம் என்னும் முப்பாலுடையது. அவற்றில் இன்பம் காமத்துப்பால் என்று வழங்கப்படுகிறது; இன்பமும் காமமும ஒரே பொருளன வாகையால். இந்தக் காமத்துப் பாலானது தலைவன் தலைவியிடத்தில் அகத்தின்கண் உண்டாகு நிகழ்ச்சியைக் கூறுவது. இதை,

" காதலிருவர் கருத்தொருமித்
தாதரவு பட்டதே யின்பம் "

என்பதா லுணர்க.

'நாடக வழக்கினும்' என்னும் தொல்காப்பியம் அகத்திணையியற் சூத்திரத்தில் இதற்கிலக்கணம் கூறியிருப்பதால், இதைத் தமிழ்ப்புலவர்கள், 'நாடகத் தமிழ்' என்று கூறுவார்கள்.

ஆகையால் அக்காமத்துப் பாலையே, எமது ஆசிரியப் பெருந்தகையரான திருவாளர் மயிலை, சீனி. கோவிந்தராசன் என்னும் தமிழ்ப்புலவர் 'திருக்குறள் நாடகம்' என்னும் பெயரிட்டு வரைந்தனர்.

இதில் காமத்துப்பால் குறட்பாக்களை விடாமலும், பரிமேலழகர் உரையை யாவரும் தெரிந்து கொள்ளக்கூடிய வெள்ளிய நடையில் விளக்கியும்,



இடையில் நிகழும் நிகழ்ச்சிகளை யெல்லாம் விரித்துச் சேர்த்தும், நாடக உறுப்புக்கமைந்த களம, காலம், கூத்தர் முதலாகப் பிரித்து நாடகத் தமிழாக இயற்றியுள்ளார்.

இது அகப்பொரு ளிலக்கணங் கற்பார்க்கு ஓர் விளக்கா மெனச் சொல்லலாம்.

இவருக்குச் சங்கநூற்களில் நிரம்பிய புலமையும், அவற்றுள் பொதிந்து கிடக்கும் நுட்ப திட்பங்களை இனிதுற எடுத்து விளக்கும் பேராற்றலும் இயற்கையின் அமைந்தன. எமது ' கலா சிந்தாமணி ' யின் கண் இவர்கள் வரைந்துள்ள ' தொகைநூல் ', ' முல்லைக்கொடி ' முதலிய பொருட்களைக் காணுவார்க்கு இவரது ஆராய்ச்சித் திறன் தெள்ளிதின் விளங்கும்.

இவரது உரைநடை, சொற்சுவை பொருட்சுவை நிரம்பிப், படிக்குந்தொறும் படிக்குந்தொறும் யாற்றொழுக்கா யின்பம் பயக்கும் சீரியல் பமைந்த தென் பதை அறிஞர் மறுக்கார். உரைநடை போன்றே இவரது பாக்களும் தேனொழுகும் பெற்றியவாம். இவரியற்றிய ' மயிலை நான்மணிமாலை ' என்னும் சிறுநூலைக் காண்பார் எவரும் இவரது இலக்கண இலக்கிய வன்மையையும் உள்ளத்து உதகையூட்டுமாறு செய்யுள் யாத்தலில் அமைந்த அரும் பெற்றியையும் தெள்ளிதிற் காண்பர்.

மிகச் சிறு வயதிற்றானே கல்விக் கடலைக் கரைகண்டவாறே இவர் தம் வாழ்நாளுக்கும் விரைவில் எல்லை

கண்டகன்றார். இவரது பிரிவால், இவரது குடும்பமும் தமிழ்ச்சுவை விழையும் எம்போன்றாரும் துயருழத் தலே யன்றி, மிக ஆய்ந்து அறிந்து கொள்ளற்கும் அரியவாய்ப் பண்டைய நூற்களில் அமைந்து கிடக்கும நம்மவராம் பண்டையோரது சிறந்த பல செய்திகளைத் தமிழுலகுக்கு அளிக்க எண்ணங் கொண்டு இவர்கள் கண்ட அரிய ஆராய்ச்சிகளும் இனி வெளி வருதற்கு இல்லையாயின.

இந்நூல் பலநாட்களுக்கு முன்னரே வெளி வந்திருக்கக் கூடுமாயினும் இடை யிடையே இயைந்த இடற்பாட்டுக்களான் இன்றே வெளி வருகின்றது. முட்டின்றி முடியுமாறு அருள் சுரந்த இறைவன் 'கலா சிந்தாமணி' வாயிலாய் வெளி வந்துள்ள இவரது ஆராய்ச்சிகளை யெல்லாம் இனி வெளியிடக் கருதியிருக்கும் எம்முயற்சிக்குந் திருவருள் புரியும்படி இறைஞ்சு கின்றேம்.

மயிலை
துந்துபி யாண்டு
பங்குனி-உ அ.

மயிலை க. மாணிக்கவேலன்.



# சிறப்புப்பாயிரம்



தமிழாசிரியர் ஸ்ரீலஸ்ரீ
அப்பன் செட்டியாரவர்கள் மாணாக்கரும்,
மருத்துவாசிரியரும் தமிழ்ப்புலவருமான
திருவாளர் மா. வடிவேலு முதலியாரவர்கள்
இயற்றியது

திருவளர் கயிலைச் சிவனருள் பெறீஇப்
பெருவளங் கற்பார் பெறமருந் தியவமுயர்
சால்பிற் றாகத் தந்தனர் குறணூல
பாலமூன் றெனவே பகுத்தனர் பண்டைத்
தமிழ ரவைதாம தனியரம பொருளோ
டமர்கா மத்துப் பாலென வரைவன
இம்மூன் றினிலே யிறுதிப் பாலும்
யம்மா மண்ணில் வாழ்கிருப பினர்க்கு

மதுவென் சுட்டை யறநீத தவாக்கும்
பொதுவாத் தோன்றினும் பொருட்பினை னிருத்தலி
வீட்டின் முன்னர் விளங்கி யிருத்தலின் [ன்
அதனை யடைவா ளணித்தா நெறியெனக்
குதலை மொழிமலைக் கோன்மகள் பங்கர்
அருளா லறிவர் யாவையு மவனருள்
புரிவா லாந்தாம் புரிதொழி லொன்றிலைத்
தனியே யெனுமுறை தபமு ளோர்நேசார்
இப்பா லெப்பா லியக்கும் புலவருந்
தப்பா நெறியிற் சாற்றுவர் நாடகத்
தமிழென வதனைத் தமிழ்மறை யாளர்
அமரிய லித்தமி ழவைதுணை யாக

VI

என்னைப் பெண்ணு ளியற்றிய வருளொடு
அன்பைப பெருக்கி யமமபில போற்றும்
நண்பைப் பெறற நனனசு ருள்ளான்
சண்பை யடிகள் தனியடி வணங்குந்
கண்பெற் றிலங்கு கநதசா மிக்கோன்
மைந்த னுவான பாணிக்க வேலெனும்
பைந்தார வேளாண் பழமைக குலத்தினன்
தனக்குழு தமிழை யிநதரு டளமையன்
கனம் பயில் பொழினிறை கடடழகுறற
மயிலைச் சீனி வாசகா யகனின்

பயிலற மகனுய்ப பார்பிசை யுதித்தோன்
திருமயி லாப்பூர் திகழ்தர வந்த
சண்முகம் பிள்ளை தருமா ணுக்கன்
ஐந்திலக் கணமு மவையமை சங்க நூல்
தந்திர முறையிற் றவிரா துணாநதோன்
கோவிந்த ராஜ குரவன பாலசென
றக்குற எநநக ரமர்மாப் பெரியோன்
அருளவண் மையனெனு பகுறி தோன்றத்
திருவள் ளுவனெனச செப்பிங்க தூயோன்
செய்த தாகுழன் செப்பா பாலே
நாடக முறைபி னவின்றீ கொளண
அன்னை பெரிதுள மன்றே மகிழ்நது
பன்னுள பயின்றுய பாவமையி னமையாப்
பொருளிலக் கணத்தாற் பொருதகி மிகவே
விருப்புட னெவரு மீசகொளு மாற்றல
காலமுங களமும கூததரு மொளவிக
காலத துழுநா களொடு மகிழ
வெளளிய நடையில விளசகிக்
கொள்ளொளாத தநதனன் குவலய மீதரோ

தமிழ்ப்புலவர் திருவாளர்
மா. வடிவேலு முதலியாரவர்கள் மாணவரும்
சிறுமணவூர் முனிசாமி முதலியாரவர்கள் மகனுநமான
திருவாளர் சிறு. முனி. நடேசமுதலியார்
இயற்றியது

உலக முவப்ப வொருநான் முனிவரர்க்
கால நிழற்கீ ழறநான் கீந்து
மயர்வற நந்தி மாமுனி தனக்கு
முயற்சிவ நெறிமறை யுய்யுமா றருளியு
மிருடனை மேனு ளிரீஇய விறைவனே
பொருதிரை யுடுத்த விருநில வரைப்பிற்
றொல்லையின் மக்கள் தோன்றித் திகழு
மெல்லையின் மறைநெறி யெழிலுற் றோங்கும்
வியனுல கெங்கு மேயதாய்த் துணைதரு
முயர்தனித் தமிழ்மொழி யிருந்தொளிர்ந் திலங்கு
மொழுக்கமுஞ் சீர்மையு மோங்கிய தெரிப்பா
னெழுதொல் காப்பிய தொகைகணக் கெண்ணில
பல்கிப் பிறங்கு பல்வளத் தமிழகத்
தில்லடை வான்புக் கினத்தினர் பல்லோர்
மேவா விழிமையின் மிளிர்தம் முறையினைத்
தாவாத் துன்புகூர் தாமுறு நெறியினைப்
பன்னு ளுறவால் பதிவுறக் காண்டலின்
முன்னு ளருநெறி முற்று மிழிந்தே
யூழிவாய்த் துயர்புக் குழற்றுபு மக்களைப்
பாழிவாய் மீட்டுப் பழிச்சுதல் புரிதா
சகலர்க் கருள்கூர் சால்புறு வழக்கா
னகலத் தருமரு ளகற்றுதல் செய்வான்
திருவள் வனுமெனு நுந் திருத்தகு பெயர்கொண்
டொருமா முனிவ னுறுவடி வேற்றிங்
கறம்பொரு ளின்ப மடைதகு வீடெனத்
திறம்பெறு நாற்பொரு டெள்ளிதிற் றொகுத்து

நான்மறை யிதனை நாடுமி னென்னத்
தேன்றரு பொருட் டீதகல் பேறினு
னொளிசுவை யூறுட னோசை நாற்றமென்
றளிதரு பெற்றி யைம்புலன் களுமகிழ்
இருத்தல் பிரித லிரங்க லூடுத
லொருவா தினைதவென் றுளிருங் காமப்
பாலினிற் பிறங்குவ பாங்குறத் தெரிக்கவும்
பொலிதரு மின்பப் புதவந் திறக்கவும்
விழுமியோர் களிக்க விளக்கித் தருகெனப்
பரிதி வானவன் பாங்குறத் தோன்றும்
விரிகட லெழுதிரை விசும்புறக் காலும்
புன்னையங் கானம் புறமெலாந் தளிர்தருந்
தென்னஞ் சோலைகள் தீங்காய் கொழிக்கு
மேறுகொ ளிறைவ னிடங்கொள் மலைமக
ளிருமுலை சுரக்கு மின்னருட் டீம்பா
லின்பவாய் மணக்கு மிருமறைக் குழவி
யென்பு பெண்ணுக்க வினிதெழுந் தருளு
மயில்விழி யிறைவி மயில்வடி வேற்றுநீஇ
யெயிலெரி யிறைவனை யேத்துபு நோற்குந்
துன்னிய பெருமான் றேற்றருள் கோழிக்கும்
நன்னர் வளமலி மயிலைநன் னாட்டில்
மல்லிப் பெருமான் மலரடி பரவி
யெல்லையி லரும்பணி யென்றும் புரிவோன்
வள்ளுவர் வாய்மொழி வாய்ப்பப் போற்றி
யுள்ளுவோ ரொண்கழ லுயரிய தன்மையன்
பெரியார்ப் பேணிப் போற மியற்றுவோ
னரியபல் கலைக ளிரிறப வுணர்ந்தோன்

கலைபல கொழிக்குங் ' கலாசிந் தாமணி '
நிலைபல தெரிக்கு நிகழ்நன் னூல்பல
வெவரு மோதி யிருமையும் பெறுவா
னவைதீர்ந் தொழுகப் பதித்து நல்கினோ
னூழுவித் துண்ணு மிருநகுடி வேளாண்
கெழுதகை யான்ற கேள்வியின் மிக்கான்
கந்த சாமிநற் காராளன் செய்
கந்தலில் வேள்வியா னன்னிய வரும்பெற
லென்பா லன்பன் றன்பா லெஃகியன்

பொன்மக ளின்புகொள் பொற்புறு வாழ்வினன்
மாணிக்க வேலெனு மாட்சிமை யாளன்



பணிமொழி யுடனே பாங்குற விழைந்தாங்
கவணிருள் களைவா னமர்ந்தருள் குரவன்
சைவசித் தாந்தந் தருங்கனி யுண்டோ
னிலக்கிய விலக்கண விருங்கடற் றிளைத்தோன்
பலகலை யாவும் பயன்பெற வாய்ந்தோன்
உரைநடை யியற்று மொப்பில் வழக்கினோன்
சொற் பொருட் சுவைமிகத் துகளறயாப்போன்
கற்பவை கற்றுக் கற்றவா றொழுகினோன்
மயிலைச் சண்முக மாண்பனன் மாணவன்

மயிலைவா ழிறவன் மன்கழல் சூடுவோன்
கோவிந் தராச நாயகன் கோதிலான்
பேசிய காமப் பாலினைப் பெற்றிங்

காசி வின்புகூ ரகப்பொரு ளியையக்
காளங் கலனே தலைவன் றலைவி
தோழன் றோழி சார்ந்தா ரீன்று
றென் றித் தகையா வேற்ற பெற்றியா
லான்றோர் வகுத்த வாட்சி யானே
வின்பு மிக்குற வினியநன் னடையா
னிசைத்தனன் றிருக்குற ணாடக மெனவே
அதனை
முதுமொழிக் குரவன் மொழிபிற ழாமல்
கதுமெனக் கற்றோர் களிப்புற மாறு
நிலைபெற வச்சில் நிகழ்த்தினன்
கலையீ றெனக்கேள் கலைவல் லவனே.

31

# நாடக உறுப்புக்கள்



## 1 கூத்தர்

1. தலைமகன்:—அறிவு நிறை ஓர்ப்பு கடைப்பிடி என்னும் ஆண் குணம நான்கும் அமைந்த ஆடவன்.

2 தலைமகள்:—நாணம் மடம் அச்சம பயிர்ப்பு

என்னும் பெண்குணம் நான்கும் பெற்றமடவரல். இவ் இருவரும் பிணி மூப்பு இறப்பு முதலிய துன்பங்கள் இல்லாமல் எந்தநாளும் ஒரு தன்மையராய் உருவும் பருவமும் குலமும் குணமும் அன்பும் முதலியவற்றால் தம்முள் ஒப்புமை உடையவர்.

3. பாங்கன்:—தலைமகனுக்கு உயிர்த்தோழன்

4. தோழி:—தலைமகளுக்கு உயிர்ப்பாங்கி.

## 2 களம்

கூட்டம் குறிஞ்சியிலும்; பிரிதல் பாலையிலும்; இல்லிருத்தல் முல்லையிலும; இரங்கல் நெய்தலிலும்; ஊடியும் கூடியும் இன்பம் உண்ணல் மருதத்திலும் நிகழ்கின்றன.

## 3. காலம்

கூதிர், கார், முன்பனி, பின்பனி, இளவேனில்' முதுவேனில் என்னும் அறுவகைப் பெரும் பொழுதும்; யாமம், விடியல, காலை, நண்பகல், மாலை என்னும் ஐவகைச் சிறு பொழுதும் விரவிய காலம்.

# திருக்குறள் நாடகம்

## (காமத்துப் பால்)

## களவியல்

களவாவது தலைமகனும் தலைமகளும்
காதல்கொண்டு கலத்தல்.

முதலாம் நாள்

### க. இயற்கைப் புணர்ச்சி

களம்:—குறிஞ்சியில் ஒரு பொழில்.

காலம்:—கூதிரில் ஒரு யாமம்.

கூத்தர்:—தலைமகன், தலைமகள்.

[தன்னைத் தோழியர் பலரும் சூழ்ந்து வர, தலைமகள் தன்னில்லத்தை விட்டுப் பொழிலிடம் புகுந்தாள். அங்கே, பொழில் விளையாட்டு விருப்பினால், தோழியர் எல்லாம் நீங்கிச் சென்றார். செல்லவே, அதனிடத்தே தனியே நிற்கின்றாள் தலைமகள். தலை

மகனும் தன்னைப் பற்பல தோழரும் சூழ்ந்துவர, குறிஞ்சியில் வேட்டையாட வந்தான். அங்கேவேட்டை விருப்பினால் தோழர் எல்லாம் நீங்கிச் சென்றனர். செல்லவே, தலைமகனும் தனியனாய் அவ்விடத்தே வந்து, தனியளாய் நின்ற தலைமகளைக் கண்ணுறுகின்றான். கண்ணுற்று, அவள் வனப்பு தன்னை வருத்துகின்ற வகையை வகுத்துச் சொல்லுகின்றான்.]

தலைவன்: —(அவள் உருவு முதலியன முன் கண்டறி
யாத சிறப்புடையனவாகக் காணப்படுகின்ற
படியால், அவளை ஐயுற்று) "ஆ! இக் கனவிய
குழையை யுடையாள் யாரோ? இவள் எழுதலாகா
உருவம் என்னைவருத்துகின்றதே! இவள்,—இவள்,
இச் சோலையில் வசிக்கின்ற ஒரு தெய்வமகளோ?
அல்லது இக்காவில் நிற்றலாலும், மயில்

போலும்
சாயல் உடைமையாலும் ஒரு மயில் விசேடமோ?
அல்லது, ஒரு மானிட மாதரோ? இவளை யாரெ
னத் துணியாமல், அந்தோ! என் மனம் மயங்கு
கின்றதே!—இல்லை. இவள் ஒரு மானிடப்பெண்ணே
ஆதல் வேண்டும். அல்லளாயின், என் உள்ளம்
அங்கே ஓடுமோ? அவளும் எதிர் நோக்குவாளோ? அணங்குகொல் ஆய்மயில் கொல்லோ கனங்குழை.
மாதர்கொல் மாலும்என் நெஞ்சு. (௧0௮௧)
(மானுட மாதரெனத் தெளிந்து அவள் நோக்
கினல் வருந்தி) "ஆ! என்ன அழகு! இவ்வகை
யான அழகினை உடையாள், தன்னுடைய அழ
கால் என்னை வருத்துவதே போதாதா?
மேலும், இயற்கைப் புணர்ச்சி

குறிப்பு நோக்காலும் வருத்துகின்றாளே! இதுவும் வேண்டுமா? அந்தோ! இவள் என் நோக்கத திற்கு எதிர் நோக்குதல், தானே தாக்கி வருத்துவ தோர் அணங்கு, தாக்குவதற்குப் படையையும் கொண்டு வந்தாற்போல அல்லவோ உள்ளது? இதற்கு என்செய்வேன்!

நோக்கினாள் நோக்கெதிர் நோக்குதல்
தாக்கணங்கு
தானைக்கொண் டன்ன துடைத்து.
(௧0அஉ)

"ஆமாம்! இவள் தன்னுடைய அழகாலும் குணத்தாலும் எனக்கு இன்பமும் விளைக்கின்றாள்! அந்த இன்பத்தைக் காட்டினும் மிகுதியாகத துன்பமும் விளைக்கின்றாள். இதனால்இவள் நூலோர் சொல்லும் கூற்றமோ?—கூற்றத்தை முன்னெல் லாம் கேட்டே அறிந்தேன். அதைக் கண்டறி யேன். இதுபொழுது அதைக் கண்டும் அறிந்தேன்! ஆம்; அது நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு என்னும் நாற்குணங்களுடனே பெரியவும் போர் செய் தலுமுடைய கண்களை உடையதாய் அதோ! நிற்கின்றது.

பண்டறியேன் கூற்றென் பதனை இனியறிந்தேன்

பெண்தகையால் பேரமர்க் கட்டு.
(௧௦௮௩)

" ஆ ! இவள் எவ்வளவு பெண்தகை உடையாள்!
எவ்வளவு பேதமை உடையாள் ! ஆயினும, இவள் கண்கள் மட்டும் இவ்வளவு கொடியனவாக இருக்கின்றன! ஏனோ ? அந்தோ ! இவள் குணங்களுக்



கும் அழகிற்கும்—பேதைமைக்கும் இக்கண்கள் தகுமா ? இவை, தம்மைக் கண்டாரது உயிரை உண்ணும் தோற்றத்துடனே கூடி இவளுக்குமாறு படுகின்றனவே!

கண்டா ருயிருண்ணும தோற்றத்தால்
பெண்தகைப் பேதைக் கமர்த்தன கண்.
(௧௦௮௪)

"என்னே! இந்த மடந்தையின் கண்கள்!இன்பமும் துன்பமும் இரண்டையும் செய்கின்றன என்னை வருத்துதல் உடைமையால் கூற்றமோ ? என்மேல் ஓடுதல் உடைமையால் கண்தானோ ? இயல்பாக வெருவுதல் உடைமையால் பெண்மானோ அறிகினறிலேன். இவள் கண்களின் நோக்கம் இந்த மூன்று தன்மையும் முதிர்ந்துடையன ! கண டாய் !

கூற்றமோ கண்ணோ பிணையோ மடவரல் நோக்கம்
இம்மூன் றுமுடைத்து. (கOஅரு)

"அந்தக் கொடும் புருவங்கள் விலக்கின வாயின், அவற்றைக் கடந்து, இவள் கண்கள் எனக்குத் தய ரைச் செய்யுமோ ?—நான் நடுங்குதற்கு ஏது வாகிய துயரைச் செய்யுமோ ? செய்யமாட்டா. இவள் கண்களுக்கு பிரியா நட்பா யிருப்பன அப் புருவங்களே ! இருந்தும் பயன் என்ன ? இயல்பா கவே கோடுதலுடைய புருவங்கள் !—செம்மைக் குணம் இல்லாத புருவங்கள் !— அவைகளோ இக் கண்களைத் திருத்தமுடியும் ? தமது · நண்பரைக் இயற்கைப் புணர்ச்சி. ரு

குற்றத்திலிருந்து திருத்த விரும்புவோர், தாமும் குற்றமில்லாத குணமுடையராய் இருத்தல் வேண் டாமா ? தாமே குற்றமுடையாரானல், பிறரை எப்படித் திருத்த முடியும் ?

கொடும்புருவம் கோடா மறைப்பின் நடுங்கஞர்
செய்யல மன்னிவள் கண்.

(கO அகூ)

(அவள் தோள் வனப்பினால் வருந்தி) "ஐயோ! இமமாதருடைய தோள்களின் வெம்மையும் பெருமையும், எத்தனை! அவற்றின் ஆற்றல் எத்தனை!— சாயாத் தோள்கள்!— அவற்றின்மேல் இட்ட துகிலே, அவை என்னைக்கொல்லாமல் காக்கின்றது. கண்ணை மறைத்துத் தடுக்கின்றது. அதுவே கொல்வதாகிய மதயானையின்மேல் இட்ட முகபடாத் தினை ஒத்திருக்கின்றது! அத்துகில் சிறிது மறைக் காவிட்டால், தோள்கள் என்னைக் கொன்றே விடாவோ?

கடாஅக் களிற்றின் மேற்கட் படாம்மாதர்
படாஅ முலைமேல் துகில்

(கO அஎ)

(அவள் நெற்றி வனப்பினால் வருந்தி) "அது கிடக்கட்டும். என் பெருவலியெல்லாம் இவள் சிறு நுதலுக்கே தோற்றதே! ஓ! என்ன வியப்பு! எனக்கு நேராத பகைவரும் போர்க்களத்தே வந்த

பின், என் வலியை நேர்ந்தார் வாயிலே கேட்டு
அஞ்சுவாரே ! அப்படி அஞ்சுதற்கு ஏதுவாகிய
என் மன வலியும் காய வலியும் எல்லாம் இவள் கூ



ள்ளிய நெற்றி ஒன்றிற்கே உடைந்தனவே ! முழு
தும் அழிந்துவிட்டதே! இதுஎன்ன வியப்பு!

ஒள்நுதற் கோஒ உடைந்ததே ஞாட்பினுள்
நண்ணாரு முட்குமென் பீடு.
(௧0அஅ)

(அவள் அணிவனப்பினால் வருந்தி) " ஐயோ !
இவளுக்கு ஏனோ இந்தப் பூணையெல்லாம் வீணே
பூட்டினார் ? வெளியே, இவள் பெண் மானைப்
போன்ற மடநோக்கினை—மருண்ட நோக்கினை—

உடையாள். உள்ளே, நாணம் என்னும் நற்குணத்

தையும் உடையாள். இந்த நாணமும் நோக்குமே

இவளுக்கு ஒற்றுமையுடைய அணிகள் ஆக அமைந்

துள்ளனவே! இன்னும் பொன்னாலும் மணியாலும்

இவளுக்குப் பூண்களைப் படைத்தணிதல் என்ன

பயன் உடைத்தோ ?—அவையெல்லாம் இவளுக்

குப் பாரம் ஆயின; எனக்குத் துயரம் ஆயின ;

அணிந்தார் அறிவிலர் ஆயினர் ! அவ்வளவே !

வேறென்ன ?

பிணையேர் மடநோக்கும் நாணும் உடையாட்கு
அணியெவனோ ஏதில தந்து.
(க0அகூ)

(இவ்வாறு இதுவரையும் தலைமகளுடைய அவயவத்தின் அழகினால் வருந்திய தலைமகன், இப்பொழுது அவள் குறிப்பினை அறியத்தொடங்கி) "ஆ! காமம்போலச் சிறந்ததும் உண்டா? இது காய்ச்சப்படும் தேனையும் காட்டிலும் சிறந்ததே. ஆம்! காய்ச்சப்படும் தேனோ, தன்னை உண்டவ



ரிடத்தே மிகவும் மகிழ்ச்சியைச் செய்யும். இக்காமம்போலக் கண்டவரிடத்துங்கூட மகிழ்ச்சியைச் செய்யுமா? செய்யாதே!—காமம் இவ்வளவு சிறந்ததாயினும் இதுவரையும் இவள் குறிப்பை நான் ஆராய்ந்து அறியாதபடியால் அக்காமத்தாலாகிய மகிழ்ச்சியைப் பெற்றிலேன். இப்பொழுதே பெறுகின்றேன்.

உண்டார்கண் அல்லது அடுநறாக் காமம்போல்
கண்டால் மகிழ்செய்தலின்று .
(௧௦௯௦)

(அவள் உள்ளக் குறிப்பினை அவள் நோக்கினால் அறிந்து) "அம்மா! என் வருத்தம் தீர

ஒரு வாயி லும் பெற்றேன். இனி பிழைத்தேன், இதோ! இவள் மையுண்ட கண்ணிடத்து உண்டாகிய நோக்கம் இதுபொழுது என்மேல் இரண்டா கின்றது பார்!—ஒரு நோக்கு இவள் மனத்தில் உண்டாகிய காமக்குறிப்பினை வெளிப்படுத்துகின் றது. வெளிப்படுத்தி, என்னிடத்து நோய் செய் கின்றது. மற்றொரு நோக்கு இவளுக்கு என்மேல் நிகழ்கின்ற அன்பினை வெளிப்படுத்துகின்றது! இதுவே என் நோய்க்கு மருந்தாகின்றது.

இருநோக் கிவளுண்க ணுள்ளது ஒருநோக்கு
நோய்நோக்கொன் றந்நோய் மருந்து.
(கOகக)

"ஆ! ஆ! இனி இவளை எய்தலாம்! அடையத் தடையே இல்லை! நான் பார்க்கின்றபோது நாணித் தலைதாழ்கின்றாள். நான் பாராதபோது என்னை



உற்று நோக்குகின்றாள்! இப்படி இவள் கண்கள் என்னைக் களவு கொள்கின்றதே! இந்தச் சிறுநோக்கம்—நான் காணாமல் என்மேல் நோக்குகின்ற

இந்த அழகிய நோக்கம், இவளுக்கு என்மேல் உள்ளம் இல்லாவிட்டால் உண்டாகுமா? இந்தநோக்கம் காமத்தில் செம்பாகம் அலல.—மெய்யுறு புணர்ச்சியின் ஒத்த பாதி அளவும் அல்ல! அதனினும் மிகும்.

கண்களவு கொள்ளும் சிறுநோக்கம் காமத்தில்
செம்பாக மன்று பெரிது.
(கOகூ௨)

(நோக்கினும் நாணினும் அறிந்து)"என்னை நான் நோக்கா அளவில் என்னை அன்போடு நோக்கினள். நோக்கி, ஏதோ ஒன்றை எண்ணி நாணங் கொண்டு இறைஞ்சுகின்றாள். இந்த நோக்கமும் நாணமும் ஆ! என்ன குறிப்பு!—இந்தக் குறிப்பு எங்கள் இருவரிடத்தும் தோன்றிய அன்பாகிய பயிர் வளர அதனிடத்து இவள் வார்க்கின்ற நீரே அல்லவோ?

நோக்கினள் நோக்கி யிறைஞ்சினள் அஃதவள்
யாப்பினு ளட்டிய நீர்.
(கOகூ௩)

(நாணினும் மகிழ்ச்சியினும் அறிந்து) "ஆம்! ஐயமே இலலை! நான் இவளை நோக்குங்கால்,

தான் என்னை எதிர் நோக்காமல் தலை இறைஞ்சி நிலத்தை நோக்குகின்றாள்! அதை அறிந்து நான் நோக்காக் கால், தான் என்னை நோக்கி வெளிப்படாமல்



மெல்ல நகைக்கின்றாள்—தன்னுள்ளே மகிழ்கின்றாள்! இவள் உள்ளக் கருத்தை இது உணர்த்த இல்லையா?

யானோக்குங் காலை நிலநோக்கும் நோக்காக்கால்
தானோக்கி மெல்ல நகும்.
(கoகூச)

"இன்னொன்று பார்! நேரே
குறிக்கொண்டு
என்னை நோக்குகின்றதே இல்லை.
இல்லையாயினும்,
ஒரு கண்ணைச்
சிறங்கணித்து—சுருங்கி—நோக்கு
கின்றாளே! இப்படி ஓரக்கண்ணால் தான் நோக்கு
வதும் நான் அறியாதபடி மறைத்துச்
செய்கின்

றாளே! வெளிப்படாமல் புறங்கண்ணால் என்னை

நோக்கி நோக்கிப் பின் தன்னுள்ளே மகிழ்கின்

றாளே! இதெல்லாம் இவள் உள்ளக் குறிப்பினை

உரைக்க இல்லையா? இனி, இவளை அடைதல்

அரிதல்ல!

குறிக்கொண்டு நோக்காமை அல்லால் ஒருகண்
சிறக்கணித்தாள் போல நகும்.
(க0கூ)

[இவ்வாறு தலைமகள் உள்ளக் குறிப்பினைப் பல

வாற்றானும் அறிந்த தலைமகன் அவளைச் சாரகின்

றான்; சார்ந்து, அவள் தோள் தீண்டித் தோய்கின் றான்; தோய்ந்தபின் முயக்கத்தின் மகிழ்ந்து

மொழிகின்றான்.]

"ஓ! இந்த இன்பம் எங்கே உண்டு?

கண்ணால் கண்டும், காதால் கேட்டும், நாவால் உண்

டும், மூக்கால் மோந்தும், மெய்யால் தீண்டியும் ஐம்
புலனாலும்—அநுபவிக்கப்படும் இன்பங்கள் எத்



தனையோ உண்டு. அவை யெல்லாம் ஒரே காலத்
தில் ஓர் இடத்தில் உள்ளன ஆகுமா? வேறு வேறு
காலங்களில் வேறு வேறு பொருள்களால் அடை
யப்படுவன அல்லவோ? அவ்வாறே ஆயினும், அந்த
எல்லா இன்பத்தையும், இதோ—இன்றே—இவளி
டத்தே—ஒருங்கே—உண்டு விட்டேனே! ஆ! இவ்
வகை இன்பம் வேறு எவ்விடத்தே உள்ளது? எங்
கும் இல்லை! எங்கும் இல்லை!
கண்டுகேட் டுண்டுயிர்த்து உற்றறியும் ஐம்புலனும்

ஒண்டொடிக் கண்ணே யுள
(கக0க)

(தன் நயப்பு உணர்த்த வேண்டி) "ஆ! என்ன
என்பேன்? இந்தப் பணி மொழியின் மணிவாயில்
ஊறிய தேறலை என்ன என்பேன்! பால் என்பே
னோ? தேன் என்பேனோ? பாலும் தேனும கலந்த
கலவை என்பேனோ? ஆம்! பாலும் தேனும் கலந்த
கலவைதான்!—பாலின் சுவை ஒன்று! தேனின்
சுவை ஒன்று! ஆயினும் இந்த இரண்டும் கலந்த கல
வை இன்னதென்று அறியலாகாத இன்சுவை
உடையது அல்லவோ? இவள் எயிறூறிய நீரும்
இன்னதென்று அறியலாகாத இன்சுவை உடையது

அல்லவோ? அதனால இது கலவையே ஆகும்.
, பாலொடு தேன்கலந தற்றே பணிமொழி
வாலெயில் ஊறிய நீர்.
(கக௨க)
(அவள் நலம்புனைந்து உரைக்க வேண்டி,
அரு
கிருந்த அனிச்சப்பூவை
நோக்கி)"அனிச்சப்பூவே!



மென்மையால் நீயே மேலானாய் ! உன்னுடைய
மென்மைத்தன்மை ஒரு பூவிற்கும் இல்லை ! நான்
அதை நன்றாய் அறிவேன். ஆயினும், என்னால்
விரும்பப்பட்ட இவள் இயற்கை இன்னதென்று
அறிவாயா? நின்னைக் காட்டினும் மெல்லியல்! ஆம்!
மெல்லியல் என பதை இப்பொழுதே நான் தீண்டி

அறிந்தேன்! ஆகையால் பூவே! நீ இனி 'உலகத்தில்

நானே மெல்லியல்என்னும் தருக்கினை ஒழிவாயாக. நன்னீரை வாழி அனிச்சமே நின்னினும் மென்னீரள் யாம்வீழ் பவள.
(கககக).

இவ்வாறு தன்னுடைய நலத்தைத் தலைமகன் புனைந்து உரைக்கக்கேட்டு—நிகழ்ந்தது தெய்வப் புணர்ச்சியாகையால் இது வரையும் தலைமகள் உணர்ச்சி அழிந்திருந்தாள்—முன்னைய உணர்ச்சி வரப் பெற்றாள். பெற்று, இவன் நம்மிடத்தே அழி'யாத அன்புடையனோ? நம்மைப் பிரிவானோ? பிரிந்தாலும் பின்னும் தலைப்பெய்வானோ? என்று பல வாறு எண்ணினாள். எண்ணி முகம் வேறுபட்டு வாடுகின்றாள். அவ்வாட்டம் அறிந்த தலைமகன் அவளைத் தெளிவிக்கவேண்டி, தான் அவளைப்பிரிய அஞ்சுவதாகிய பிரிவச்சம் பேசுகின்றான்.

"ஆ! இந்த மடந்தையொடு நட்புக்களை என்ன

சொல்வேன்? இவளோடு என்னிடத்து உளவாகிய

நட்புக்கள் உடம்போடு உயிரிடத்து உளவாகிய
நட்புக்கள் தாமோ? ஆமாம்! அவையே ஆகும்
உடம்பும்உயிருமாகிய இரண்டும் தொன்றுதொட்டு



வேற்றுமையின்றிக் கலந்து வருகின்றது. இன்பத்
துன்பங்களை இரண்டும் ஒக்க அனுபவிக்கின்றது!
ஒன்றை ஒன்று இன்றியமையாதாகின்றது! அது
போலவே, இவளும் என்னோடு பல பிறப்பினும்
பயின்று வருகின்றாள்; இன்பத்துன்பங்களை ஒக்க
அனுபவிக்கின்றாள்; நாங்கள் ஒருவரை ஒருவர்
இன்றியமையாதாகின்றோம்!—ஆதலால் இவளை

நான் பிரியவும் பிரியேன்! பிரிந்தாலும், நெடுங்
காலம் தரியவும் தரியேன்!"
உடம்பொடு உயிரிடை யென்ன மற்றன்ன
மடந்தையோ டெம்மிடை நட்பு.
(கக௨௨)
(என்பது கேட்டு, தலைமகள் முகம் மலர்கி
ன்றாள். பின்னர் இருவரும்
பிரிகின்றார்கள்.)

## இரண்டாம் நாள்

### ௨ பாங்கன் கூட்டம்

களம்:—தலைமகன் இல்லைச்சார்ந்த இடம்.
காலம்:—கூதிரில் ஒரு காலை.
கூத்தர்:—தலைமகன், பாங்கன்.

இயற்கைப் புணர்ச்சி புணர்ந்து பிரிந்த தலை மகன், "உன்னைப் பிரியேன், பிரியினும் ஆற்றேன்' என்று சொல்லிப் பிரிந்தேன். என்னைக் காணாமல் எப்படி வருந்துகின்றாளோ அவள்!" எனத் தலை

மகள் நிலைமையைத் தன்னுள்ளே நினைந்து முகம்
வேறுபட்டு வாடி யிருந்தான். இருந்தானை, மறு
நாள் 'சிற்றஞ் சிறுகாலே வந்து' அவன் உயிர்ப்
பாங்கன் எதிர்ப்பட்டான். பட்டு, தலைமகனை அடி
முதல் முடிமுழுதும் நோக்கினான். நோக்கி, அவன்
வேறுபாட்டு வாட்டத்தை வினவுகின்றான்.

பா: (தலைமகன் அருகேநின்று, அதிக ஆசாமையோடு).

"எட! உனக்கு உற்றது என்ன? என்னே! தோளும்
இப்படி மெலிந்தாய்! முகமும் புலர்ந்தாய்! அன்ப!
உள்ளம் வாட வருத்துவது

என்ன ? எனக்கு
உரைக்க ஒண்ணுதா?"
தலை:—(முகம் சிறிது மலர்ந்து)
"உனக்கு ஒளிப்ப
தும் ஒன்று உண்டா ? தோழி!
நேற்று—ஒன்று—
நடந்தது
அது—சிற்றிடைச்சிறுமான் விழிச்சி
யார் ஒருவரைக் கண்டேன்.
கண்டேனுக்கு, என்
னுடைய உள்ளம், பள்ளத்துப்
பாயும் வெள்ளம்
போல ஓடி இவ்வகை ஆயிற்று!"
பா:—(நகைத்து) "ஆயிற்று?
பெருந்தகாய்! உன்
பெருமை என்ன?—ஆ! உன
குணங்கள் எங்கே
குடிபோயிற்று?—செங்கண்மா
ல் உலகத்துப்
பேரின்பத்திற்கு நீ உரியவன்
அல்லவோ? ஐயோ!
இந்தச சிற்றின்பத்திற்கு
இவ்வாறு ஆதல் ஆகு
மோ?—"

தலை:—(பெருமூச்சு எறிந்து) "ஏல! என்ன சொன்
ஞய்? அந்தச் செங்கண்மால் உலகம்—பேரின்பம்,
வருந்தாமல் பெறலாமோ ? நமக்கு அது கிடைக்



குமோ? நாமோ, ஐம்புலன்களையும் அடங்கலும்
அனுபவிப்போர். விரும்பும் மகளிர் மெல்லிய
தோளின்மேல் மென்துயில் கொள்வோர். இந்தத் துயில்போல அவ்வுலகமும் எளிதாக எய்தலாமோ?
ஆகாது !—இந்த இன்பத்தை எல்லாம் இகழ
வேண்டும்! யோகத்தாலும் தவத்தாலும் தேகம்
வருந்தவேண்டும்! அப்பொழுதே அதை அடைய
லாம்!"—(இன்னும் ஒரு பொருள்) "ஏல!

நமக்
கும் பேரின்பமா? அதுவும் இப்பருவத்திலா? இப்
பொழுது நாம் ஐம்புலன்களையும் அனுபவிக்கும
இல்லறத்தையும் உடையோம் ! இளமைப் பருவத
தையும் உடையோம்! நமக்கு, நாமே விரும்பும்
மகளிருடைய மெல்லிய தோளின்மேல் துயிலும்
துயிலே இன்பம்! இந்தத் துயில்போல நீ சொல்லு
கின்ற செங்கண்மால் உலகம் நமக்கு இனிதாகு
மோ? ஆகாதே!"

தாழ்வீழ்வார் மென்றோட் டுயிலின் இனிதுகொல்
தாமரைக் கண்ணு னுலகு.
(ககoங)

பா:—" அப்படியானல், அதை விடு. நண்ப! உன்
னல் காணப்பட்ட உருவம் எப்படிப்பட்டது?

அதை எவ்விடத்தே கண்டாய்? சொல்லு."

தலை:—(முகம் மலர்ந்து) "ஏடா! அவள் அழகை அத்

தனையும் சொல்ல முடியுமா? முடியாது. ஆயினும்

ஒருவாறு கேள். அவளுக்குத் தோள்கள், வேயைப்

போல உருண்டு திரண்டு ஒள்ளியதா யிருக்கும்!

மேனியோ மாந்தளிர்போல மாமை நிறமாகும்!

பாங்கன் கூட்டம்

கரு

பல்லு முத்தைப்போல

ஒத்திருக்கும்! நறு நாற்

றமே இயல்பாகிய நாற்றம்! ஆ! அவள் மையுண்ட கண்ணோ, நெய்யுண்ட வேல்தான்! வேறென்ன

சொல்வேன் ?—அவளைக் குறிஞ்சிப் பொழிலிடத்

தே கண்டேன் !"

முறிமேனி முத்த முறுவல்

வெறிநாற்றம்

வேலுண்கண் வேய்த்தோ ளவட்கு.

(கககங) பா:—"அன்ப! சற்றே நீ ஆற்றியிரு. நான் போய்க் கண்டு வருகின்றேன்."

—பெயர்கின்றான்.

அன்று யாமத்திலே, தலைமகன் குறித்த இடத்தை நோக்கிப் பாங்கன் சென்றான். சென்று, அவன் சொன்ன பொழிலையும உருவத்தையும கண்டான். கண்டு, அவற்றின் அழகினைப் புகழ்ந்துகொண்டே,

தன்னை எதிர்பார்த்திருக்கும் தலைமகனிடம் திரும்பி வருகின்றான்.

பா:—(தலைமகன் நேரே நின்று) "எட! நீ குறித்த பொழிலில் போய்ப் பார்த்தேன். ஆ! அதன் மரகதக்கொடியும்—மாணிக்கப பாறையும—நிலவு

மணலுமடநித்தில ஒளியும்,
என்ன அழகு! ஆம்!

அது துறந்தாரையுங் கூட துறவு
விடுக்கச்செய்யும்!

அதில் நின்ற திருவுருவோ, என்ன
சொல்வேன்?—

அள்ளிக்கொள்ளும்
பேரழகுடைய கொல்லிப் பா

வையே! அவ்வளவும் கண்டு,
ஆற்றிக்கொண்டு,

இவ்விடம் வந்து, இதுவரையும்
இருந்தாயே! எட!



உன் ஆண்மையே ஆண்மை! நான் அறியாமல்
உன்னை இகழ்ந்தேன்!”

———

களம்:—குறிஞ்சியில் முன்னை நாள்கூடிய பொழில்
கூத்தர்:—தலைமகன், தலைமகள்.

முந்திய நாள்போலப் பொழிலிடத்தே தலைமகள் வந்திருப்பதைப் பாங்களுல் கேட்டறிந்த தலைமகன் அவ்விடம் சென்றான். சென்று, அங்கே தனியளாய் நின்ற தலைமகளைத் தலைப்பட்டான். தலைப்பட்டும் அவள் உள்ளக் குறிப்பினை உணராமல், அவளைச் சார்தல் ஆகாமையால், அதை அறியவேண்டி அவளுடைய நலத்தைப் புனைந்து நவில்கின்றான்.

தலை:—“ மாணிழாய்! இந்த நிலப்பூக்களைக் கண்டா

யா? எப்படி நிமிர்ந்து நிற்கின்றன பார் !—ஐயோ

பாவம்! இவை காணும் தொழிலை உடையன

அல்ல! உடையனவாயின், உன்னுடைய கண்களைக்

காணக்கூடும். கண்டதும், “ இவள் கண்ணழகை ”

நாம் ஒவ்வேம்" என்று கருதி,
அந்நாணத்திஞல்
தலைகவிழ்ந்து
நாணு.ம இல்லை!

நிலம் நோக்கும்.—இவற்றிற்கு
காட்சியும் இல்லை. செம்மாந்து
வானை நோக்கின, கண்டாயா?"

காணிற் குவளை கவிழ்ந்து நிலனேக்கும்
மாணிழை கண்ணெவ்வே மென்று.

(கககச)

பாங்கன் கூட்டம் கள

இவ்வாறு தன்முன்னே நின்று தன்
கண்ணின் நலத்தைத் தலைமகன் புகழக்கேட்ட
தலைமகள் நாணங்கொண்டு, கையிஞல் தன் இரண்டு
கண்ணையும் புதைத்தாள். புதைக்கவே,
'இனிச்சாரலாம்' என்று குழலைத் திருத்திக் கூட்டம்
பெற்றான் பெற்றபின், அவளை ஆயத்திலுள்ளே
அனுப்பிவிட்டு அவள், தன்னைக் காணுதே தான்
அவளைக் காண்பதோர் இடத்தே நின்ருன். நின்று,
அவளால் தன் காமத்தீ வெளிப்படுதலிஞல்,

அத்தீயை அவள் தந்ததாகக் கருதி வியக்கின்றான்.

த-ன்:—“ ஆ! இத்தீயை எங்கிருந்து பெற்றாள்? எனக்

, குத்தா இவள எவவிடம் பெற்றாள்? எந்த உலகத்தி

லிருந்தோ ?—தன்னை அகன்றால், சுடுகின்றது!

. (கூடாத துனபம், கூடிய இன்பம்) இவ்வகைத்

தீயும் இவ்வுலகததில் உண்டா? இல்லையே! எனக்

காக இதை எங்கிருந்து பெற்றாளோ ?” நீங்கின் தெருஉட குமுகுவகால் தண்ணென்னும் தீயாண்டுப் பெற்றா ளிவள். (கக0ச)

[இவ்வாறு அவள் பிரிவு, தன்னை வருத்தும் வகை யைச் சொல்லிக்கொண்டே பெயர்கின்றான்.]

இப்பாங்கன் கூட்டம நிகழாதாயின் இடம் தலைப் பாடு நிகழும்.

---

## ௬. இடம் தலைப்பாடு.

*களம்:—குறிஞ்சியில் முன்னைநாள் கூடிய பொழில்.*

*காலம்:—கூதிரில் ஒரு யாமம்.*

*கூத்தர்:—தலைமகன், தலைமகள்.*

'என்னே! நேற்று நான் இவளை எய்தியது தெய்வத்தானே! அத்தெய்வமே இன்றும கைகொடுக்குமாயின் காண்பேன்' என எண்ணி, முன்னைநாள் தலைமகளை தலைப்பெய்த தனியிடம் நோக்கிச்சென்று, அவளைக் கண்ணுற்ற பொழிலிடம் போய்ப் புகுந்தான் தலைமகன். புகுந்தானுக்கு அப்பொழில் பெரிதும் துணையாகி, தான் கொண்டிருந்த ஆற்றுமை தணிந்தான். என்னெனில், இனியவரோடு எதிர்ப்பட்ட இடம் கண்டதும் அவ் இனியவரைக் கண்டாலே போன்று இன்பம் பயப்பது இயற்கை அல்லவோ? இது நிருக்க;

தலைமகளும், முன்னைநாள் போலத் தன்னைத்தோழியர் பலரும் தொடர்ந்துவர,

அப்பொழிலிடம் வந்து புகுந்தாள். அங்கே தோழியர் எல்லாம் விளையாட்டு விருப்பினால் நீங்கி வேறு வேறிடம் சென்றார். செல்ல, தலைமகள் ஒருத்தியே ஆயினாள். ஆகி, " நேற்று 'நின்னைப்பிரியேன்; பிரியினும் தரியேன்' என்று சொல்லிப் பிரிந்த என் அன்பர் எவ்வழி வருவாரோ ?" என நாற்புறமும் நோக்கி நின்றாள். அது பொழுது தலைமகன் 'இவளைச் சார்தற்கு இதுவே சமயம்!' என்று அவளை நோக்கிச் சென்று சார்ந்து



கூடினான். பின்னர்க் கூட்டத்தில் மகிழ்ந்து கூறுகின்றான்.

த-ன்—" அணியிழாய் ! நோயும் நீயே ஆனாய் ! அந் நோய்க்கு மருந்தும் நீயே ஆனாய் !—இரவெல்லாம் உன்னையே நினைந்து வருந்தினேன். அவ்வருத்தம் எந்த மருந்தாலும் எளிதாகத் தீரப்பெற்றேனா ? இதோ உன்னை இடம் தலைப்பட்டே தீர்ந்தேன் !

நேற்று நீ கொடுத்த பிணியை இன்று நீயே கெடுத்தாய்! இது என்ன வியப்பு! பிணியும் தானே ஆகி, அப்பிணியைத் தணிப்பதும் தானே ஆகும் ஒரு பொருளும் உலகத்தில் உண்டா? வாத முதலிய பிணிகளுக்கு மருந்தாவன அவற்றிற்கு நிதான மாயினவா? அல்லவே! அவற்றிற்கு மாறுகிய இயல்பையுடையன அல்லவோ மருந்து?

பிணிக்கு மருந்து பிற, மன் அணியிழை
தன்னோய்க்குத் தானே மருந்து.
(கக0உ)

—(அவள் நலம்புனைந்து உரைக்கவேண்டி, தன் நெஞ்சை நோக்கி) "நெஞ்சே! உனக்கு என்ன அறிவு? மலர்களைக்கண்டால் இன்னும் மயங்குகின்றாயே?— இவள் கண்களைக் காணுதபோது இவற்றோடு ஒருபுடை ஒக்கும் மலர்களைக்கண்டு மகிழ்ந்தாய்! இப்பொழுது இவள் கண்களின் நலம் முழுதும் நன்றாய்க் கண்டறிந்தாய்! கண்டறிந்தும் தாமரை வேல்

நீலமெல்லாம் இவள் கண்களை ஒக்குமென்று கருத லாமோ ? அப்பூக்கள், பலராலும் பார்க்கப்படு உ௦. திருக்குறள் நாட்கம்

வண! இவள் கண்களோ நான் ஒருவனே காணப்

பெற்றன! சீ! இவற்றை அவை ஒக்குமோ?"

'மலர்காணின் மையாத்தி நெஞ்சே இவள்கண்
பலர்காணும் பூவொக்கு மென்று.
(கககஉ)

இவ்வாறு தலைமகள் நலத்தைப் புனைந்து உரைத்து அவளிடம் தனக்குள்ள அன்பினை அறிவித்து, அவளை ஆயத்துள்ளே அனுப்பினான் தலைமகன். அவளும் நீங்கிச் செல்கின்றாள். அதுபோது தலைமகன் தன் காதலின் சிறப்பினைக் கட்டுரைக்கின்றான்.

த-ன் :—' ' என்
கண்ணிலே—கருமணியிலே—உறையும் பாவாய்! நீ அவ்விடம விட்டு அகன்றுவா ! வாரா விட்டால், என்னால் விரும்பப்பட்ட இவளுக்கு— இந்தத் திருநுதல் உடையாளுக்கு—இருக்க இடம் இல்லையாம்.—இவளை நான் காணுமலும் அமை

யேன்! இவள், புறத்தே போகத்தக்கவளும் அல்ல! என் கண்ணுள்ளே இருக்கததக்கவள்! இருக்குங் கால் உன்னோடு ஒருங்கு இருக்க இடம் போதுமா? போதாது! ஆகையால், பாவாய்! உன்னைக்காட்டி லும் சிறந்தாள் இவள்! இவளுக்கு அவ்விடத்தைக் கொடுத்து நீ அப்புறம் வா!"

கருமணியிற் பாவாய்நீ போதாய், யாம் வீழும்
திருநுதற் கில்லை யிடம்.
(ககஉ௩).

—பெயர்கின்றான்



## மூன்றாம் நாள்.

### ௪. மதி உடம்பாடு.

களம்:—குறிஞ்சியில் ஒரு தினைப்புனம்.
காலம்:—கூதிரில் ஒரு பகல்.
கூத்தர்:—தலைமகன், தோழி, தலைமகள்.

.கள்ள ஒழுக்கத்தைக் கையகலாத தலைமகன் பின்னும் தலைமகளைத் தலைப்பெய்ய வேண்டி, அதற்குதவி யாகும்படி அவள் உயிர்த்தோழியை நாட நினைந் தான். நினைந்து, தினைப்புனத்திலே தோழியும் தலை மகளும் ஒருங்கிருந்த செவ்வி அறிந்து, தன் கையில் தழையும் மாலையும் தாங்கி, அவ்விடம் சென்று நின்றான். நின்றும், தன்குறை இன்னதென்று எடுத்ததும் தோழிக்கு வெளியிட இல்லை. தான், அவளை இரந்து பின்னிற்கவும் கரந்த மொழியால் தன் கருத்தறிவிக் கவுமே எண்ணினன். 'என் கையம்பால் மெய் வெம்பியது, ஒரு கலைமான் இங்கு வந்தது, அதைக் கண் டீர்களோ?' என்றான். 'பன்றி ஒன்று சென்றது, பார்த்தீர்களோ?' என்றான். 'இத்தழையும் பூவும் நல்லது' என்றான். 'உங்களுக்கு இடை இல்லையோ?' என்றான். அவன் கேட்ட இத்தனை கேள்விக்கும் தோழியாவது தலைமகளாவது வாய்திறவாமல் வாளா இருந்தனர். இருக்கவே, பின்னும் அவன் 'நீங்கள் வாய்திறந்தால், உங்கள் வாய்முத்தம் சலக்கென உதிருமோ?' என்றான்.

இவ்வாறு வம்புவார்த்தை யாடக்கேட்ட

தோழி, ..அவனை ஐயப்பட்டுத் தன்னுள்ளே ஆராய்கின்றாள்.

உ௨. திருக்குறள் நாடகம்

"என்னே! தழையும்பூவும் கையில்ஏந்தினான்! வேட்டையைக் கொண்டாடுகின்றான்! அவ்வேட்டைக்குரிய வில்லையும் அம்பையும் காணோம். இவன் பேசும் பேச்சோ, இரண்டிற்கும் பொருத்தமில்லாதிருக்கின்றது—இவ்விடம் விட்டும் அகலான்!நம்மிடம் பேசாமலும் போகான்! பாவம்!ஏதோ குறை உடையவன் போலக் காணப்படுகின்றான். அதுவும் நம்மிடத்தேதானோ? (தலைமகளைப் புறங்கண்ணால் நோக்கி) என்னே! இவள் களிப்பு! இவன் வரவு கண்டு முகம் மலர்ந்தாள்; வாய்மொழி கேட்டு அகம் மகிழ்ந்தாள். என்றும் இல்லாத எழிலும் இதோ! இவள் முகத்தில் விளங்குகின்றதே!—(தலைமகனையும் தலை மகளையும் நோக்கி) ஆ! இதென்ன? இவ்விருவரும் புதுவோர்போல—முன்னறியாதார் போல — ஒருவரை ஒருவர் பொது நோக்கால் நோக்குகின்றார்கள்! நோக்கி, உள்ளத்திலே மகி

ழ்கின்றார்கள்.—மதுலவை மறந்து உண்டவர் மகி ழ்ச்சிபோல வெளிப்படாமல மகிழ்கின்றார்கள்!' இப்படி ஒருவரை ஒருவர் நோக்குவதும் உள்ள த்திலே மகிழ்வதும் இவர் — இருவரிடத்தும் இருக்கின்றதே! இச்செய்கை காதலரிடத்தே காணப்படுவது அல்லவோ? இவரும் காதலே உடையவர்தாமோ? ஆம்! காதல் உடையவரே ஆகும்!

எதிலார் போலப் பொதுநோக்கு நோக்குதல்
காதலார் கண்ணே யுள.

(க0கூகூ).

மடல் திறம் உரு

"ஆ! இதோ! பார்! ஒருவர் கண்களோடு ஒருவர்
கண்கள் நோக்கால் ஒக்கின்றன! இனி வாய்ச்சொற்
களால் வரும் பயனும் உண்டோ? இவர் கண்கள்
காதல் நோக்கினை உடையன! இவர்

பேசுகின்ற
பேச்செல்லாம் மனத்திலே தோன்றுவன அல்ல.
வாயளவில் தோன்றுகின்ற வெறுஞ் சொற்கள்.
இச்சொற்களும் ஒரு பயனை உடையனவா? கொள்
ளப்படுவனவா? அல்ல! அல்ல!—மெய்யாக இவள்
புனம் காப்பவளும் அல்லள்! இவன் வேட்டம்
செலபவனும் அல்லன்! இதுவரையும் இவன்பேசிய
தெல்லாம் வம்பு மொழியே ! நம்புவன அலல!"

கண்ணொடு கண்ணிணை
நோக்கொக்கின்வாய்ச்சொற்க ளென்ன பயனு மில. (கக00)

இவ்வாறு அக்காதலர் இருவரின் உள்ளக் கருத்தை யும், அவர் கண்ணின் குறிப்பினுல கண்டு தெளிகின்ருள் தோழி.

---

## ஏழாம் நாள்.

## ௯ மடல் திறம்.

களம்:—குறிஞ்சியில் ஒரு தினைப்புனம்.

காலம்:—கூதிரில் ஒரு மாலை.

கூத்தர்:—தலைமகன், தோழி.

கரந்த மொழியால் தன் கருத்தறிவித்துப் பிரிந்த தலைமகன், தோழிக்குத் தன் குறையைக் கூறி இரக்



கும் பொருட்டு, அவள் காக்கின்ற தினைப்புனத்திலே பலநாளும் போய்ப் புகுந்தான். புகுந்தானொடு, அவள நாணம் உடையவளாதலால சொல்லாடாமல் இருந்தாள் இருக்கவே, அவனுக்கு நாளுக்கு நாள் ஆற்றாமை பெருகிற்று. பெருகிப் பெருகி, 'இவன் ஆற்றாமை இதன்மேலும் பெருகும் வகை இல்லை' என்று சொல்லும்படி பெருக்கத்திற்கு ஓர் எல்லையில் வந்து நின்றது. அவன் ஆற்றாமைப் பெருக்கத்தாலும், அவ்விடம் பலகாலும் வந்து திரியும் பழக்கத்தாலும் தோழிக்கும் நாளுக்கு நாள் நாணம் சுருங்கிற்று. சுருங்கிச் சுருங்கி, 'இவள் நாணம் இதனமேலும் சுருங்கும் வகை இல்லை'

என்று சொல்லும்படி சுருட்கத்திற்கு ஓா எல்லையில் வந்து நின்றது. அந்த நிலை யிலே, தலைமகன் அவளிடம் சென்று நின்று தன் ஆறறுமை மயினுலே அழுகின்றுன்.

த-ன்:—''நங்காய்! இன்று நாளை என்று எத்தனை நாள்
கழிந்தது? என் குறை இன்னும் முடிந்ததா? இக்
காரியம உன்னல் முடியுமென்று இதுவரையும்
இங்கே வநது முயன்றேன். இன்றே முடியாமை
அறிந்தேன். இனி இழிந்த செய்கை செய்தாவது,
ஆம்! மடல் ஊர்ந்தாவது முடிப்பேன்.—துன்
புற்ற ஆடவருக்குத் துணையாவது மடலே அல்
லவா? அரியவராகிய மகளிரோடு ஆடவர் இன்பம்
உண்ணுவர்; பின்னே அவ்வின்பம் பெறுமல்
வருந்துவர். அப்படி வருந்துவோருக்கு

அருந்
   துணையாவது மடலே ஆகும். ஆமாம்!
அவருக் குப் பனை மடலே பழமையான துணை!
நெடுங்கால



   மாக இதுவே துணையாகி
வருகின்றது!—எனக்கும்
   இன்று இம்மடன்மாவே துணையாகின்றது.
அதைக்
   கொண்டே, நங்காய்! இழந்த இன்பத்தை
நான்
   அடைவேன்."
காம முழந்து வருந்தினார்க் கேம
மடலல்ல தில்லை வலி.
(கககூக) தோழி:—"அதைக் கொண்டா, அடையப்
போகின்
   றீர்? ஐய! மடல் ஊர்தல்
மற்றெல்லோருககும்
   முடியுமே. உமக்கும் அது முடியுமா?
நீங்கள்

நாணம் உடையவர் அல்லவா?"

தன்:—"ஆம். உடையேன்தான்! முன்னெல்லாம்

அந்த நாணமே நடுவே நின்று என்னை மடல் ஏறா

மல் மறித்தது. இப்பொழுது உடம்பும் உயிரும்

ஒருங்கிருந்துகொண்டு அந்நாணத்தையும் அகற்றி

விட்டது! இந்த நாணம் அகலுமுன்னமே என்

நாற்குணமும் அழிந்திருந்தேனே! அறிவு நிறை

ஓர்ப்புக் கடைப்பிடி என்னும் ஆடவர் நாற்குண

மும் என்னைவிட்டு அப்பொழுதே அகன்றதே! இப் பொழுது எனக்கு உள்ளதெல்லாம் உடம்பும் உயி

ருமே! இவையும ஒன்றை ஒன்று நீங்காதபடி தமக்

குத் துணையாகிய மடன்மா ஏற எண்ணுகின்றன." நோனு வுடம்பு முயிரும் மடலேறும்

நாணினை நீக்கி நிறுத்து.
(கக௬உ) தோழி:—“ அவை எண்ணினும் உமக்கு அது
ஆகாது !—ஐய! இழிவானசெயலைச் செய்யாமல்


விலக்குவதாகிய நாணமும் உடையீர். ஒன்றற்கும்
தளராமல் நிற்றலாகிய ஆண்மையும் உடையீர்.
இவ்விரண்டும் உடைய உமக்கு மடல் ஏற எப்படி
முடியும் ?”
த-ன்:—“நல்லாய்! இன்றும் அவற்றை உடையேனோ?
உடையேனெயின் முடியாதுதான். நீ சொல்லுகின்ற
நாணமும் நல்லாண்மையும் முன்னெல்லாம் உடை
யேன். அவை காமத்தால் நீங்கி விட்டன. இன்று
காமம் மிக்கார் ஏறுகின்ற மடலையே

உடையேன் !'
 ஆம் ! அது ஒன்றையே உடையேன் ! நான் கருதி
 யது இன்று கடிதிலே முடியாதா ?"
நாணொடு நல்லாண்மை பண்டுடையேன் இன்றுடை யேன்,— காமுற்றா ரேறு மடல்
(கககரு) தோழி:—"என்ன! ஐய! நாணமும் நல்லாண்மையும்
 காம வெள்ளத்தால் நீங்குவனவா? அல்லவே?
 அவை அல்லவோ இதற்குப் புணை?"
தலைவன்:—" அல்ல. நான் என் காமமாகிய கடிய புன
 லைக் க டப்பதற்கு அவற்றையே கொண்டேன்—
 அந்த நாணத்தையும் ஆண்மையையும் புணையாகக்
 கொ ண்டேன். நான் கொண்ட புணை நின்றதா? அந்
 தப் புணையை இந்தப் புனலே என்னிடத்திலிருந்து
 பிரித்துக்கொண்டு போய்விட்டது. ஆதலால், இப்

புனலுக்கு அவை புணை ஆகுமா? ஆகாது."
காமக் கடும்புன லுய்க்குமே நாணொடு
நல்லாண்மை யென்னும் புணை.
(ககரு௪)



தோழி:—"அது கிடக்கட்டும். இவ் ஆற்றாமையும்
மடலும் உமக்கு எப்படி வந்தன? ஐய!"
த-ன்:—"வந்த வகையை நீ அறியாயா? நங்காய்! உன்
தோழியே தந்தாள். தொடலைக் குறுந்தொடி உன்
தோழியே தந்தாள். மாலைப் பொழுதிலே அனுப
விக்கும் துயரினை முன்னே அறிவேனா? அல்லது,
அத்துயருக்கு மருந்தாகிய மடலினை முன்னே அறி

வேனு? இப்பொழுதே எனக்கு உன்
தோழியே
தந்தாள். நீ கூறியதே கூறும்
இளமையளாகிய
அவள் கொடுத்த துயரினை நீ
நீக்கலாகாதா?''
தொடலைக் குறுந்தொடி தந்தாள்
மடலொடு
மாலை யுழக்குந் துயர்.
(கககரு).
தோழி:—(புன்னகையோடு) "ஐயோ!'
என்னசெய்வீர்?'
மடல் ஊரும் பொழுது இன்றைக்குக்
கழிந்ததே.
நாளை—''
த-ன்:—"நாளையா? நல்லாய்! உன்
பேதைக்கு—உன்
தோழி காரணமாக—என் கண்கள்
ஒருகாலும்
உறங்குதலைப் பொருந்தா. இரவும்
பகலும் எல்லா
நேரமும் விழித்தே இருக்கின்றன.
அதனுல் எல்

லாரும் உறங்கும் இடையாமத்திலும்
நான் இருந்து
மடல் ஊர உள்ளுவேன். எனக்கும்
மடல் ஊரும்
காலம் என்பது ஒன்றுஉண்டா?
இல்லை.—நங்காய்!
குறைமுடிப்பது நானே என்ன
வேண்டா."

மடலூர்தல் யாமத்து முள்ளுவேன் மன்ற
படலொல்லா பேதைக்கென் கண்.

(௧௧௩௬)



தோழி:—"ஐய! மகளிரே பேதையர்; அவரே
கண்
உறங்காமல் கவலுவர். நீங்கள் அறிவுடைய
ஆடவர்
அல்லவோ? ஆற்றியிருக்க வேண்டாமோ?"
த-ன்:—" ஆற்றியிருக்க ஆடவருக்கும்
ஆகுமா? பெண்
களே கடல்போன்ற கரையற்ற காம

நோயினை
அனுபவிப்பார்! அனுபவித்தும், மடல்
ஊர் தலைச்
செய்யாமல் ஆற்றியும் இருப்பார்! அவர்
பிறப்புப்
போல மிக்க தகுதியினை உடைய வேறு
பிறப்பும்
உலகத்தில் உண்டா? இல்லை. நான்
ஆணாகப்பிறந்
தும், பெண்ணிடத்தே உள்ள அடக்கமும்
என்னி
டத்தே இல்லை ஆயினேன். நங்காய்! நீ
அதை
அறிய இல்லையே!"

கடலன்ன காம முழந்தும் மடலேறாப்
பெண்ணின் பெருந்தக்க தில்.
(ககங்எ)

இவ்வளவில் பொழுது மறைந்தது. தோழியை அழைததுப்போக அத்தினைப்புனம் நோக்கி ஆயமும் வந்தது. அதுகண்டு, தலைமகன் அவ்விடம் விட்டுப் பெயர்கின்றான்.



—நாள்
கூ. சேட்படை.

களம்:—குறிஞ்சியில ஒரு தினைப்புனம்.
காலம்:—கூதிரில் ஒரு மாலே.
கூத்தன்:—தலேமகன், தோழி, தலேமகள்.

பலநாளும தன்னிடம் வந்து இரத்தலும் குறை யுறுத்தலும் செய்து ஆறருணைச் செல்கின்ற தலேமக.



னேக் கண்டு தோழி மனம் இரங்கினுள். இரங்கிய

பின் தலேமகளிடத்தும் அவன் குறையை எடுத்துச்

சொல்லி அக்குறையை அவள் நயக்கும்படியும் செய்

தாள். செய்து தன்னுலாகிய கூட்டத்தைக் கூட்ட

வும் விரும்பினுள். விரும்பினவள் தனது முயற்சியின்

அருமையும் தலேமகளது பெருமையும் தலேமகன்

அறியவேண்டு மென்றும், அவ்வாறு அறிந்து தலை

மகளை அவன் விரைந்து வரைந்து (மணந்து) கொள்ள

வேண்டுமென்றும் எண்ணி, 'இதற்கு யாது செய்

வோம்?' என்று ஆராய்ந்திருந்தாள்.

அதுபொழுது கண்ணியும் தழையும் கையில் ஏந் திக்கொண்டு வழக்கம்போலத் தலைமகன் அவ்விடம்

வந்தான். வந்தவனைத் தோழி கடுகடுத்து நோக்கிக்

கண்ணோட்டமின்றிக் கடிகின்றாள்.

தோழி:—"இவ்விடம் பெண்கள் இருக்குமிடம்; காவல்

மிகுதி உடையது. நீங்கள் இங்கே வரலாகாது.

எமது அண்ணன்மார் திண்ணியர்; கொடியவர்.

உங்களைக் கண்டால் ஏதம் செய்வார். எங்கள்

அன்னையும் முனிவாள். இங்கே

நில்லாதீர். போய்
விடுங்கள்."

தன்:—(அவள் சொல்வதைக் கேளாதவன்போல நின்று, தன்னுள்ளே) "காவலாம்! கொடியராம்! முனிவாளாம்! இதென்ன?—ஆ! இவள் என்னிடம் மிகவும் பரிவுடையவள். இல்லையானால் இவ்விடத்தின் தன்மையை எனக்கு உள்ளபடி உரைப்பாளா? ஆம்! பரிவுடையவளே! இவ்வுளவு பரிவுடையவள்



என் குறை முடித்துத் தரமாட்டாளா? தருவாள்! தடை இல்லை!—இவள் கடுகடுத்த மொழியின் கருத்தை நான் அறிவேன்! என் குறை முடிக்கவே என்னைச் சேட்படுத்துகின்றாள்—இரக்கமின்றி அகற்றுகின்றாள். அகத்தே அருளுடையவள்! புறத்தே மட்டும அயலார்போலக் கடுஞ்சொல் சொல்கின்றாள்!—இச்சொற்கள் நன்மையைத் தருமென்று நான் அறியேனா?

உறாஅ தவர்போற் சொலினும் செறாஅர்சொல்
ஒல்லை உணரப் படும்.
(௧௦௯௬) — "பின்னே இனிதாகி முன்னே

இன்னுதாகும்
சொல்லேச் சொல்லுவர். நெஞ்சிலே
சினவாதிருப்
பார். இருந்தும் வெளியே சினந்தார்
போலச்
சீறி நோக்குவார். இவை யாருடைய
செய்கை ?
யான் அறியேனு ? அன்பாயிருந்தும்
அயலார்
போலநடிப்பவர்செய்கை அல்லவா?
இச்செய்கை—
இக்குறிப்பு—உள்ளே ஒரு பயனேக்குறித்துச்
செய்
கின்றதே! இவருக்கு இயல்பல்லவே! இதற்கு
நாம்
' அஞ்சவேண்டுமோ?''
செருஅச் சிறுசொல்லும் செற்ருர்போல்
நோக்கும் முருஅர்போன் ருற்ருர் குறிப்பு.
(௧0௯௭)
இவ்வாறு தன்னுள்ளே நினேந்துகொண்டு,
பேச்
சின்றிப் பித்தன்போல நின்ற தலேமகனே
நோக்கித்
தலேமகள் மகிழ்கின்ருள். அவள்

மகிழ்ச்சியைக்கண்ட
தலைமகன் தன்னுள்ளே சொல்லுகின்றான்.



தன்:—"ஆ! என் அசைநத இயலாள்! இவள் நகை யிலே ஒன்று நான் அறிகின்றேன்! அது வாய் விட்டுச சொல்லுவதா?—'தன்னை அகற்றுகின்ற சொல்லுக்கு ஆற்றுகின்றான்! ஐயோ! பாவம்! எப்படி இரந்து நோக்குகின்றான்!' என்று பல வாறு என் பணிந்த பார்வையைப் பார்த்துப் பசக் கின்றாள்! உள்ளம் நெகிழ்கின்றாள்! பின்பு, உள்ளே மெல்ல நகுகின்றாள். இந்த நகையினிடத்தே ஒன்று தோன்றுகின்றதே! அந்த நன்மைக் குறிப்பு இனிப் பழுதாகுமா? ஆகாது!"

அசையியற் குண்டாண்டோ ரேஎர்யா னேக்கப்
பசையினள் பைய நகும்.
(க0கஅ) இவ்வாறு தன் எண்ணத்தில மூழ்கித் தலைமகன் நிற்கின்றான். தலைமகள் சற்றே விலகிச் செலகின்றாள்.
அது பொழுது தோழி, தலைமகனைப் பாாத்து தருமம் உரைக்கின்றாள்.

தோழி:—"ஐய! இனி
இவ்வொழுக்கத்தைமறந்துவிடுங்
கள். இவளை இப்பொழுதே மணந்து
கொண்டு
வாழுங்கள்—இல்லத்திலிருந்து இல்லறம்
நடத்துங்
கள். இதுவே உலக தருமம். எல்லா
இன்பமும்
எஞ்சாமல் அடையலாம்."

த-ன்:— "அரிய மாமை நிறத்தையுடைய
அரிவை—
உன் தோழியின் முயக்கம் இவ்வுலகத்தின்பம்
ஒன்
றைமட்டுமோ தருகின்றது ?
பேரின்பத்தையும்
தருகின்றதே!—இல்லத்தில் இருந்து
முயற்சியி



லே பொருளைத் தேடுவர்; தேடிய
பொருளைத்

தென்புலத்தார்,
தெய்வம்,விருந்து,சுற்றங்களுக்குப்
பகுத்துத் தாமும் உண்ணுவார்; இதுவே,
இல்
வாழ்வார் இயற்றுகின்ற அறம்!
இவ்வறத்தால்
அவர் அடைவது துறக்கத்தின்பம்!
இவ்வினபத்
தையும் உன் தோழி முயக்கமே
அளிக்கின்றதே!
இன்னும் மணக்கவும் வேண்டுமோ? நங்காய்!"
தம்மி விருநது தமதுபாத் துண்டற்றால்
அம்மா அரிவை முயக்கு
(கக0எ) தோழி:—ஐய! நீங்கள் இருவரும் ஒத்த
அன்புடை
யோர். உங்களுக்கு ஒருபொழுதும
இடைவிடாத
முயக்கம் அல்லவோ இனிது? அம்முயக்கம்—"
த-ன்.—"நல்லாய்! நீ சொல்லுகின்றது ஒக்கும!
ஒரு .
வரை ஒருவர் விழைகின்றவராகிய

இருவர்க்கும்
காதலும் இடையறுக்கப்படாத முயக்கம்
இனி
யதே, ஆனல், இங்கே இருவர் இல்லையே!
காக்கை
யின் கண் இரண்டிற்கும் கண்மணி ஒன்றே
ஆனற்
போல உடம்பு
இரண்டும் உயிர் ஒன்றும் அல்லவோ
நாங்கள்? அதனல், மணத்தல் வேண்டுமோ?"
வீழு மிருவர்க் கினிதே வளியிடை
போழப் படாஅ முயக்கு.
(௧௧0அ) தோழி:—"வேண்டாமா? ஐய! மணந்து
கொண்டால்
மறைத்தல் வேண்டா. இடையறுமல் கூடி
வாழ
லாம். இடையறவு இல்லாத கூட்டம் இன்பப்
பயன்
உடைத்தல்லவோ?—"

பகற்குறி ௬௩

த-ன்:—"உடைததோ, அன்றோ, அது

எங்களுக்கு வேண்டா. மணந்துகொண்டு காமத்தை இடை விடாமல் எய்தியவர் பெற்ற பயன்கள் என்ன? ஊடலும் உணர்தலும் கூடலும் தானே?—இது வன்றி வேறு உண்டா? ஆடவர் பரத்தையரிடம் பிரிவார். அதை அறிந்து மகளிர் ஊடி நிற்பார். அவ்வூடலை தவறு செய்த ஆடவர் தாமே தமது தவறின்மை கூறி அளவறிந்து அகற்றுவார். பின்பு அவ்விருவரும் ஒத்த அன்பினராய்க் கூடுவார். இவ் வளவுதானே மணந்தவர் பெற்ற பயன்? நங்காய்! அப்பயன் எங்களுக்கும் வேண்டுமோ? இருதலைப் பறவையின் ஒருயிராகிய எங்களுக்கும் வேண்டுமோ? உழுவல் அன்புடைய எங்களுக்கும் வேண்டுமோ?''

ஊடல் உணர்தல் புணர்தல் இவைகாமம் கூடியார் பெற்ற பயன். (கக௦௯)



—நாள்

எ. பகற்குறி.

களம்:—குறிஞ்சியில் ஒரு பொழில்.
காலம்:—கூதிரில் ஒரு பகல்.
கூத்தர்:—தலைமகன், தலைமகள், தோழி.

சேட்படுத்தியும செல்லாறுகிய தலைமகன்

பின் னும் பின்னும் தோழியைச்சார்ந்து, தன் குறைமுடித் துத் தரும்படி இரந்தான். அவன் இரத்தலைக்கேட்டு,





அவள் மன மிறங்கினாள். இரங்கி, "இன்ன இடத்து வருக" என்று அவனைக் குறிப்பினால் உணர்த்தினாள். அவனும், அவள் குறித்த இடம் சென்றிருந்தான்.

தலைமகனுக்குக் குறியிடம் கூறிப் பிரிந்த தோழி, தலைமகளிடம்போய், அவளைப் பொழிலிடம் கொண்டு வந்து நிறுத்தி, "அன்னாய்! நான்போய் உன்குழலுக்கு மலர் கொய்து வருவேன். அவ்விடம் உன் மெல்லடி பொறாத கல்லிடம். உன்னால் வரப்படாது. நான் திரும்புமளவும் நீ இவ்விடம் நில்லு" என்று சொல்லி நீங்கினாள். நீங்க, தலைமகள் தனியே நின்றாள். நின்றவளைத் தலைமகன் எதிர்ப்பட்டுச் சார்ந்தான். சார்ந்தும், குறிப்பறியாமல் அவளைத் தீண்டுதற்கு

அஞ்சி, அவள் நலத்தைப் புனைந்து நயக்க உரைக்கின்றான்.

த-ன்:—(அவள் பூவணியைக் கண்டு) "அந்தோ !
இதென்ன!—எவ்வளவு பேதை இவள்? தன் மென்
மையைத் தானே அறிய இல்லை—கொஞ்சமும்
அறிய இல்லை! ஐயோ! அனிச்சப்பூவை முகிழ் களை
யாமல் முடித்திருக்கின்றாளே! ஆ! இவள் இடை
தாங்குமா?—இந்த முகிழ்ப்பாரம் பொறாமல்,
இதோ ! இடை முரிந்தது முரிந்தது! ஆம், முரிந்தே
விடும்! முரிந்தால் அதற்குச் செத்தார்க்குக் கொட்
டும் நெய்தற் பறையும் வேறு வேண்டுமோ?
வேண்டா. இடை முரியும் ஒலியே பறை ஒலியும்
ஆகுமே!"

அனிச்சப்பூக் கால்களை யாள் பெய்தாள் நுசுப்பிற்கு
நல்ல படாஅ பறை.
(கககரு)



தன் முன் நின்று, தன் நலத்தைப் பாராட்டக்
கேட்ட தலைமகள் நாணம் வந்து முகம் புதைத்தாள்.
உன்முகம் புதைத்தால் என் அகம் பதைக்குமே!'
என்று சொல்லிச் சூளுறுவான்போல அவள் தோளைத்
தீண்டித் தலைமகன் தழுவினன். தழுவியபின் புணர்
ச்சியின் மகிழ்ச்சியைப் புகழ்ந்துரைக்கின்றான்.
த-ன்:—"பூங்குழலாய்! உன் பொன்னங்

தோள்களை
என்ன சொல்வேன்?
எப்பொழுதும் பெற்றுத் தழு
வினும் இன்பம் செய்கின்றதே!
புதியனபோல
நெஞ்சம் பிணிக்கின்றதே! ஆ!
என்ன இன்பம்!
என்ன இன்பம்!—மிகவும்
இனியவாகிய இன்பொ ருள்கள்
நமக்கு; அந்த இன்பொருள்களை நாம்
எய்தப் பெற இல்லை; ஆனால்,
அவற்றின்மேல் விருப்
பம் மிகுந்திருக்கின்றோம்; அந்தப்
பொழுதிலே,
அந்தந்தப் பொருள்களே வந்து
விட்டால், ஆ!
அது எவ்வளவு இன்பம் செய்யும்!
அந்த இன்பத்
திற்கு எல்லை உண்டா?—அதுபோல
அல்லவோ
உன் தோள்கள்!
வேட்ட பொழுதின் அவையவை
போலுமே

தோட்டார் கதுப்பினள் தோள்.
(௧௧௦௫)

—"பேதாய் ! உன் தோள்கள் அமிழ்தினல் செய்யப்
பட்டனவோ ? என்ன ! உன்னைத் தீண்டத் தீண்ட
என்உயி ர்
தளிர்க்கின்றதே!—இன்பத்தால் தழைக்
கின்றதே! ஆம். உண்டால், உயிர் தளிர்க்கச் செய்
யும் அமிழ்தம் ஒன்று உண்டு. உன் தோள்கள்,
இதைக் காட்டிலும் இனிமையான அமிழ்தத்தி



னலே செய்யப்பட்டுள்ளது! தீண்டினல், உயிர்
தளிரக்கச் செய்யும் அமிழ்தத்தினலே

செய்யப்
பட்டுள்ளது! அல்லவா? அல்லாவிட்டால், என்
வாடிய உயிரைத் தளிர்க்கச் செய்யுமோ?''
உறுதோ றுயிர்தளிர்ப்பத் தீண்டலால் பேதைக்கு
அமிழ்தின் இயன்றன தோள்.
(கக0௬)
இவ்வாறு தன் ஆராமைபற்றிப் பாராட்டிய தலைமகன் அவளைப் பிரியக்கருதி தன் காதற் சிறப்பினைக் கட்டுரைக்கின்றான்.
—'' ஆயிழாய்! கூடும்போது, எனக்கு நீ வழி
நிற்கின்றாய்!—வேற்றுமையின்றி விரவுகின்றாய்!
நீங்கும்போது, வருத்தம் செய்கின்றாய்! அதனால்,
நீயும் நானும் உயிரும் உடம்பும் தானே? உயி
ருக்கு உடம்போடு கூடியபோது வாழ்தலும்உண்டு:
உடம்போடு நீங்கியபோது சாதலும் உண்டு. வாழ்
வையும சாவையும் நீயே எனக்குத்

தருகின்றாய்.—
உன்னைப் பிரிந்தும் ஆற்றுவேனோ?
ஆற்றேன்!'
ஆற்றேன்!''
வாழ்த லுயிர்க்கன்னள் ஆயிழை சாதல்
அதற்கன்னள் நீங்கு மிடத்து.
(கக௨௪)
—பெயர்கின்றான்.

தனியளாய் நின்ற தலைமகளிடம் தோழி வந்து தான் கொண்டுவந்த மலர்களைக் காட்டி, அவளை அழைத்துக்கொண்டு அகல்கின்றாள்.

---



—நாள்

அ. இரவுக் குறி

களம்:—குறிச்சியில் தலைமகள் இல்லைச் சார்ந்த ஒரு
[பொழில்.
காலம்:—கூதிரில் ஓர் இரவு.
கூத்தர்:—தலைமகன், தலைமகள், தோழி.

பகற்குறி புணர்ந்து விலக்கப்பட்ட தலைமகன், பின் ' னும் அக்களவொழுக்கத்திலேயே விருப்பம் வைத்து, தோழியை எதிர்ப்பட்டு, "நங்காய்! இன்றை இரவு நான் உங்கள் சிறூர்க்கு விருந்து வந்தேன். என்னை ஏற்றுக் கொள்ளாயோ?" என்று வேண்டினன். அது கேட்ட தோழி, "ஐய! இரவிலே எங்கள் ஊரார் சந்தனச்சாந்து அணிவார்; சுனைக்குவளை சூடுவார்; வேங்கைப் பொழிலிலே விளையாடுவார். அவர்களைப் போலக் கோலம் செய்துகொண்டு வாருங்கள். அப்பொழுது உங்களை ஒருவரும் ஐயப்படார்!" என்று குறியிடம் கூறினாள். அவனும், அவள் சொன்ன படியே அணிந்தும்சூடியும் அவ்விடம்சென்று நின்று, தன் வரவினைத் தோழியும தலைமகளும் அறியும்படி மயில் எழுப்பினன். அவன் மயில் எழுப்பக் கண்ட தோழி, தலைமகளை நோக்கி, "அன்னாய்! மயில் எல்லாம் துயில ஒழிந்து அகவுகின்றது. இதற்குக் காரணம் கண்டு வருவோம்; வா!" என்று சொல்லி அழைத்துக்கொண்டு பொழிலிடம் வந்து புகுந்து, "அம்மா! உன் குழலுக்கு மலர் தருவேன்; இங்கே நில்லு." என்று அவளை அவ்விடமே

நிறுத்திவிட்டு



அகன்றாள். அகல, தனியே நின்ற தலைமகளைத் தலை மகன் தலைப்பட்டுத் தழுவினான். தழுவியபின், அவள் மடியின்மேல் தன்முடியை வைத்துச் சாய்ந்து கிடந்து, அவள் நலம் புனைந்துரைத்து நயக்கின்றான்.

த-ன்: —(வானத்தை நோக்கி, தலை மகள் முகத்தையும் நோக்கி) "என்னே! இந்த வானத்து மீன்கள்! அவ்வளவும் அறிவே இல்லை! அங்கும் இங்கும் அலைகின்றன; பார். தங்கள் நிலையிலே நிற்கின்றனவா?—மடந்தாய்! உன் முகத்தைக் கண்டு, தங் கள் மதியமென்றே மயங்கிவிட்டன! ஆம்! அதனாலேதான் ஓர் இடத்திலே நிலையாமல் ஓடித் திரிகின்றன! அந்த மதியத்திற்கும் உன் முகத்திற்கும் வேறுபாடு பெரிதாய் இருக்கவும், 'இது மதி; இது முகம்' என்று அறிய மாட்டாமல், ஆ! இந்த மீன் கள் அலைகின்றனவே!—ஆமாம்! கலங்காமல் ஓர் இடத்தே நிற்பனவானால் 'இது மதி; இது முகம்'

என்று அறிய முடியும். இம்மீன்கள். ஓர் இடத்தே நில்லாமல் இயங்குவன அல்லவா? இவையும் இந்த வேறுபாட்டை அறிய முடியுமா?

மதியும் மடந்தை முகனும் அறியா
பதியிற் கலங்கிய மீன்.

(கககசு) —"ஏ! அறிவே இல்லை—சிறிதும் இல்லை இம்மீன்களு
க்கு! இவற்றின் மதியமானது குறைந்த கலை வந்து
நிரம்பியே—நிறைந்த பின்பேதான் விளங்கும்!
மேலும், அது ஒரு மறுவையும் உடையது!
"அதன் இரவுக் குறி ' ஙக

அழகு அவ்வளவு!—மாதே! உன் முகத்திற்கு மறு
உண்டா? தேய்தல் உண்டா? அல்லது வளர்தல்
உண்டா?—கறையுடைய மதியத்தைக் கண்டு, மறு
வில்லாத உன் முகத்தோடு மருண்டு, கலங்கித் திரி

கின்றனை கண்டாயா? ஓ! என்ன மடமை!
அறுவாய் நிறைந்த அவிர்மதிக்குப் போல
மறுவுண்டோ மாதர் முகத்து.
(கககள) —(வானத்து மதியை நோக்கி) "ஏ! மதியே! இவள்
முகம்போல ஒளி வீச உன்னால் முடியுமோ?
முடியுமானால், என் காதலை நீயும் பெறுவாய்!
மெய்யே!—இவள்போல நீயும் பெறுவாய்!—இம்
மாதின் முகம் மறு ஒன்றும் இல்லாமல் ஒழுகும்
அழகு உடையது! என்னை மகிழச் செய்கின்றது!
என் அன்பை அடைகின்றது! ஏ! ஏ! மதியே! நீ
மறுவையும் உடையாய்! என்னை மகிழவும் செய்
யாய்! என் காதலை எப்படி பெறுவாய்?

பெறவே
மாட்டாய்!

மாதர் முகம்போல் ஒளிவிட வல்லையேல்
காதலை வாழி மதி.
(௧௧௧அ)

—"மதியே! என் மலர்போலும் கண்ணாள்! இவள்
முகத்தை ஒத்திருக்க நீ விரும்புகின்றாயா? விரும்
பினால் ஒன்று செய். நானே காணும்படி எனக்கே
தோன்று. பலரும் காணும்படி பலருக்கும் தோன்
றாதே!—இவள் முகத்தின் நலம் முழுவதும்
நானே கண்டேன்! நானே உண்டேன்! ஆதலால்,



காதலித்தேன்! ஏ! நீ பலரும் பார்க்கத் தோன்று

கின்றாயே! உனக்கு நலம் எது? இவள் முகத்தை ஒக்க உனக்கு முடியுமா? என்னால் காதலிக்கப்
படுவாயா? படமாட்டாய்!"

மலரன்ன கண்ணாள் முகமொத்தி யாயின்
பலர்காணத் தோன்றல் மதி.
(கககக)

இவ்வாறு தன் நயப்பு உணர்த்திய தலைமகனை, 'அழியா அன்புடையான் இவன்!' என்று அறிந்து, அகம் குளிர்ந்து முகம் மலர்ந்தாள தலைமகள். அவள் முகமலர்ச்சி கண்ட தலைமகன், 'இனிப் பிரியலாம்! இவள் ஆற்றுவாள்!' என்று தெளிந்து அவ்விடம் விட்டுப் பெயர்ந்தான். பெயர, தோழி வந்து தலை மகளைச் சார்ந்து, தான் கொண்டு வந்த மலர்களைக் காட்டி மகிழ்வித்து, அவளை இல்லிடம் கொண்டு ஏகினாள்.

---

—நாள்

க. வரைவு முடுக்கம்—க

களம்:—குறிஞ்சியில் ஒரு பொழில்.
காலம்:—கூதிரில் ஒரு பகல்.
கூத்தர்:—தலைமகன, தோழி.

இரவுக்குறி வந்து இன்பம் உண்ணுகின்ற

தலைமகன், தன் வரவினைத் தலைமகளும் தோழியும் அறியும் பொருட்டு, புனைக்காயை நீரில் எறிதலும், புள் எழுப்புதலும் முதலிய குறிகளைச் செய்வான. ஓர்



இரவு அந்தக் குறிகள் அவனால் செய்யப்படாமலே நிகழ்ந்தன. நிகழ்ந்தவற்றை அவன் செய்தனவாகவே தோழியும் தலைமகளும் மருண்டு, பொழிலிடம் புகுந்து நின்று, அவனை எதிர்ப்படாமையால் திரும்பி இல்லத்துள்ளே சென்றிருந்தார். இருந்தபின், அவன் வழக்கம்போல அவ்விடம் வந்து அக்குறிகளைச் செய்தான். செய்யக் கண்ட தோழியும் தலைமகளும், அடிக்கடி வெளியே சென்றால், தம்மை அயலார் ஐயமுறுவார்கள் என்று

அஞ்சி, மறுபடியும் பொழிலிடம்
போகாமல் மனையிடம் இருந்தார்.
இவ்வாறு அல்ல குறிப்பிட்ட
தலைமகளுக்குத் தலைமகனைக்
காணும்பொழுதைக் காட்டினும் காணாப்
பொழுதே பெரிதாயிற்று. ஆகவே,
அவள் ஆற்று
மை வளர்ந்து வேறுபட்டு வாடினாள்.
அவ்வாட்டம்
கண்ட அவள் அன்னை அமபல்
எடுத்தாள்—பழித்
துப் பேசினாள். அயலாரும் அலா
எடுத்தார்—பழித்
துத் தூற்றினார்.

அன்னை பேச்சையும் அயலார்
தூற்றையும்
கேட்டு, மனம் புண்ணாகிய தோழி,
களவொழுக்கம்
ஒழிந்து தலைமகளை வரைந்துகொண்டு
வாழுமபடி,
தலைமகனை வற்புறுத்தத்
துணிந்தாள்—துணிந்து, அவன்
பலநாளும் வந்து பயிலும் பொழிலிடத்தே

சென்று, அவனை
எதிர்ப்பட்டு, வலங்கொண்டு சார்ந்து,
முன்னே நின்று மொழிகின்றாள்.

தோழி:—"மன்ன! என்
தோழிக்கு—உங்கள் அன்பி



அம்பலே வளர்ந்தது! உங்கள் தலையளி—பேரன்பு—பலராலும் அறியப்பட்டு அலராயிற்று!—இது வரும்வரையும் நீங்கள் இவ்வொழுக்கம் ஒழுகினீர்களே! ஐய! இனியாவது அறம் அறிந்து இவளை வரைந்துகொண்டு வாழ்வீர்களா?—ஏச்சும் பேச்சும் காது கசக்கின்றதே! பொறுக்கமுடிய இல்லையே!"

த-ன்:—"நங்காய்! உனக்குக் கசக்கின்ற அலரே எனக்கு இனிக்கின்றது!—ஆ! என் அரிய உயிர் உன் தோழியை எய்தப் பெறாமல் எவ்வளவு வருந்துகின்றது? இப்படி எய்தற்கரிய உன்தோழியை எளியளாக்கி இவ்வூர் அலர் எடுக்கின்றதே—தூற்றுகின்றதே! என்ன

மடமை! மடமையாயினும் எனக்கு நன்மையே.—இந்த அலரை அல்லவா என் உயிர் பற்றுக்கோடாகக் கொள்கின்றது? கொண்டு, அவளை பெற்றதுபோல மகிழ்கின்றது? மகிழ்ந்து, நிலைபெறுகின்றது?—அந்நிலைப்பேற்றை நானே அறிவேன். அயலார் அறியார். அவர் அறியாதிருப்பதும் என் பாக்கியம்தான்! இதை—அவர் எடுக்கின்ற அலரே எனக்குப் பற்றுக்கோடாதலை—அந்த அயலார் அறிந்தால், தூற்றுதொழிவார். ஒழியவே, என் ஆருயிர் ஒழிந்துபோமே!

அலரெழ ஆருயிர் நிற்கு மதனைப்
பலரறியார் பாக்கியத் தால்.
(ககசக)

—"நல்லாய்! எங்களை அலர் எடுக்கின்ற இவ்வூரை
நீ அருவருக்காதே.—மலர் போன்ற கண்ணாள்—

வரைவு முடுக்கம்—க சங

உன்தோழியை எதிர்ப்படுவதென்றால் எத்தனை

இடையீடு? எத்தனை அருமை?
ஐயோ! இவ்வூர்
அவள் அருமை அறிய இல்லை. அவளை
எளியளாக்கி
விட்டது! பழியும் தூற்றிற்று!
தூற்றி எனக்குப்
பற்றுக்கோட்டையு ம் தந்தது!
பேதாய்! இவ்வளவு
உதவிசெய்த இவ்வூரை நீ
வெறுக்கலாமா?

மலரன்ன கண்ணு ளருமை யறியா
தலரெமக் கீந்ததிவ்வூர்.

(கககஉ)

—"நங்காய்! இந்த அலர் எனக்கு
எளிதாகக் கிடைப்
பதோ? அல்ல.—எங்களுக்குக்
கூட்டம் உண்
டென்று இவ்வூர்
அறிந்துகொண்டதே! ஆ ! இப் படி.
அறிந்துகொண்டதே என் பாக்கியம்! அறி
ந்து கொண்டு, உண்டாக்கிய
அலரோ என்
பெரும் பாக்கியம்! 'எப்படி?' என்று

கேட்கின்ரு

யோ? அவ்வலரைக் கேட்டே என்

மனம் இன்

பத்தை உடையதாகின்றது. ஆமாம்!

உன் தோழி!

யின் கூட்டத்தைப் பெருதிருநதே

பெற்ருேர்

போல இன்பம்

உடையதாகின்றது.—தோழி! இவ்

வலர் எனக்கு அருமை

யுடையதுஅல்லவா?

உருஅதோ வூரறிந்த கௌவை யதனைப்
பெருஅது பெற்றன் ன நீர்த்து.

(ககசரு)

—"இதோ பார்! இது, பின்னும் ஓர்

உதவியைப்

புரிகின்றது!—என் காமத்தை வற்ருமல்

வளரச்

செய்கின்றது.—இவ்வூரார் எடுக்கின்றஅலர்

இல்லை

யானல் என் காமம் இப்படி

அலருமா?—மேன்

மேலும் மிகுமா? அல்லது இன்பம் பயக்குமா?

நங்காய்! தன் தன்மை இழந்து தவ்வெனச் சுருங்கி விடாதோ?

கவ்வையாற் கவ்விது காம மதுவின்றேல்
தவ்வென்னுந் தன்மை யிழந்து.
(ககசச)

—"என் வேட்கை மிகுதியால் அலரும் எனக்கு இன்பம் செய்கின்றது! ஆமாம்! யாவரும் வெறுத்து விலக்கும் அலரும் எனக்கு இன்பம் செய்கின்றது!

களிக் குடிப்போர்க்கு களிக்கும்போதெல்லாம் கள் உண்டல் இனிதாகாதோ? அதுபோல, இக்காமமும் அலராகும்போதெல்லாம், ஆ!

எனக்கு
எவ்வளவு இனிதாகின்றது! அந்த இன்பத்தை நீ
அறிவாயா ?—என் உயிர்க்குத் துணையும் ஆகி,
அதை நிலைபெறச்செய்து, அதற்கு இன்பமும்
விளைக்கின்றதே! என் காமத்தை மேன்மேலும்
வளரச்செய்கின்றதே! ஆ! இவ்வளவு நன்மை செய்
கின்ற அலரையும் நீ இகழ்ந்து கூறலாமா?"
களித்தொறுங் கள்ளுண்டல் வேட்டற்றால் காமம்
வெளிப்படுந் தோறு மினிது.
(ககசரு)

இவ்வாறு, தனக்கு அலரே பற்றுக்கோடாகின்றது என்று தலைமகன் சொல்ல, அதுகேட்ட தோழி, 'இவனை வேறொரு வகையால் வரைவு கடாவல்—மணந்துகொள்ளும்படி வற்புறுததல்—வேண்டும்' என்று எண்ணி, அவள்

விடைபெற்று அன்று பெயர்கின்றாள்.

---



—நாள்

க. வரைவு முடுக்கம்—உ

களம்:—குறிச்சியில் தலைமகள் சிறையிடம்.
காலம்:—கூதிரில் ஒரு பகல்.
கூத்தர்:—தலைமகள், தோழி.

தலைமகன் இரவுக்குறி வந்து ஒழுகுகின்ற காலத்திலே, ஒரு நாள், முதல் யாமத்திலே தாய் உறக்கம் ஒழிந்திருந்து தலைமகளுக்கு அறிவும் ஆசாரமும் கற்பித்தாள்; தாய் உறங்கியபின் நாய்கள் உறங்காமல் இரவுமுழுதும் குரைத்துக் கொண்டிருந்தன. மற்றொருநாள் இரண்டாம் யாமத்திலே ஊர் கொண்ட பெருவிழா நாளாய் உறக்கம் நீங்கி விழித்திருந்தது; பின்னே ஊர் காப்போரும் இடங்காப்போரும் விள க்கொடு வெளிவந்து, வீதியின் புறத்திலும் வீட்டின் புறத்திலும் சுற்றித் திரிந்தார்கள். வேறொரு நாள் மூன்றும்

யாமத்தின் தொடக்கத்திலேயே நிலாவந்து தோன்றிப் பகல்போலக் காய்ந்து விளங்கிற்று; பின்னும் கூகைகள் இடைவிடாமல் குழறியன. இன்னொரு நாள் நான்காம் யாமத்துத் தொடக்கத்திலே சேவற்கோழி கூவிற்று. இவ்வாறு பல இடையீடுகளும் பலநாளும் உண்டானபடியால் தலைமகனை எதிர்ப்படாமல் தலைமகள் ஆற்றாளாயினாள். அவள் ஆற்றாமையும் அதனாலே வந்த மேனி வேறுபாடும் கண்டு, அவள் இல்லத்தார் அவளை இற்செறித்தார்கள்—இல்லத்தை விட்டு வேறெங்கும் வெளியே செல்லாமல் தடுத்தார்கள். தடுக்கவே, தலைமகள், இல்



லைச் சார்ந்துள்ள ஓர் இளமரச் சோலையிலே போய்த் தோழியோடு பொழுதுபோக்கினாள்.

இவள் இவ்வாறு இருக்க, தலைமகனும் தலைமகளைக் காணாமையால் ஆற்றானாகி, அவளைக் காணும் விருப்பமுடையவனாய், அவள் விளையாடுகின்ற சோலையின் புறத்தே வந்து

நின்றான். அவன் வருகை அறிந்த தலைமகள்—தனக்கு அலரால் வரும் நாணத்தையும், அவனைக் காணாமையால் வரும் ஆற்றாமை யையும், இவற்றால் வரும் அல்லலையும் எல்லாம்—தன் தோழிக்குச் சொல்லுவாள் போல அவனுக்குக் கேட்கும்படி சொல்லுகின்றாள்.

த-ள்:—"தோழி! இது என்ன புதுமை? என் காத
லரை நான் ஒரு நாளே கண்டேன்! அந்த ஒரு
நாளைக்கே இவ்வளவு அலரா கிவிட்டதே! இது திங்
களைப் பாம்பு தீண்டினால் திசை முழுதும் அறி
வதுபோல அல்லவா இருக்கின்றது? திங்களோ,
மறைவில்லாத வானத்திலே இருக்கின்றது; மே
லும் உயரத்திலே இருக்கின்றது! அதைப் பாம்பு

திண்டிஞல் உலகத்துள்ள பலரும் அறியக்கூடும்.

என் காதலரை நான் கண்டதும் அப்படிதாஞே?

ஆ! என் செய்கையை உலகம எப்படி அறிந்து

விட்டது ? கிடக்கட்டும்.—இவ்வொழுக்கம் இனி

ஆகாது! என் காதலர் இந்த அலரை அறிவாராஞல்

உடனே என்னை மணந்துகொள்வார். ஆம்! விரை

வில் மணந்துகொள்வார். ஆஞல், அவர் அறிவது

எப்படி? ஏடி! அவருக்கு யார் சொல்வது?''

வ்ரைவு முடுக்கம்—உ சஎ

கண்டது மன்னு மொருநா ளலர்மன்னுந்
திங்களைப் பாம்புகொண் டற்று.

(ககசகூ)

தோழி:—"அம்மா! எல்லாம் உன்னால் வந்ததுதானே?

இவ்வளவும் நீயே செய்துகொண்டாய்! காதலரை

இரண்டொரு நாள் காணவிட்டால் என்ன? அவர்

பிரிவைப் பொறுத்துக் கொள்ளக்கூடாதா? நீ

ஆற்றாமல் அழுதபடியால் அயலார் அறிந்தார்கள்;

அலர் எடுத்தார்கள் . அந்த அலரைக் கேட்டு நம் அன்னையும் சீறினாள். இனியாவது, ஆற்றியிருப்

பாயா?"

த-ள்:—"என்னடி ! உனக்கு ஒன்றும் தெரிய இல்லை. இந்த அயலார் சொல்லும் அன்னை சொல்லுமா என் னுடைய காமநோயைக் குறைத்து விடும்? ஒருகாலும் குறைக்காது.என் காமநோயாகிய பயிருக்குப் பெண்கள் தூற்றும் பழியெல்லாம எருவாகின்றது! நம் தாய் கூறும் சொல்லெல்லாம் தண்ணீர் ஆகின்றது! பயிரோ செழித்து வளர்கின்றது—காமம் மேன்மேலும்

மிகுகின்றது! ஏடி! என் ஆற்றுமை சுருங்குவதற்கு இவையோ காரணம்? அது பெருகுதற் கல்லவோ இவை காரணம்!

ஊரவர் கௌவை யெருவாக
அன்னைசொல்
நீராக நீளுமிந் நோய்.
(ககசஎ)

—(தான் சொல்வதைத் தோழி
தெரிந்துகொள்ள
இல்லை என்று எண்ணி) "என்னடி!
இன்னும உனக்



குத் தெரிய இல்லையா?—'அயலார் ஏடுக்கும் அலரைப் பற்றியாவது நீ ஆற்றியிருக்கவேண்டும்!' என்கின்றாய். அது தானே நீ சொல்வது? ஆம்! நீ சொல்வது எப்படி இருக்கின்றதென்றால், 'நெய்யைச் சொரிந்து நெருப்பை அவி' என்பதுபோல இருக்கின்றது! நெருப்பிலே நெய்யை விட்டால் அது முன்னையிலும மூண்டெரியும் என்பதை மறந்து விட்டாய். அவ்வளவே நீ செய்த பிழை;

அதிகம் இல்லை. அடி!"

நெய்யா லெரிநுதுப்பே மென்றற்றாற்
கௌவையாற் காம நுதுப்பே மெனல்.
(கககஅ)

இவ்வாறு தலைமகளும் தோழியும் பேசக்கேட்ட தலைமகன், "அந்தோ! என் காதலியின் இவ்வளவு துன்பத்திற்கும் நானே காரணம் ஆனேன். இனி இவளை மனம் நோகவையாமல் மணங்கொள்ளவேண்டும்!" என்று எண்ணிப் பெயர்கின்றான்.

இவ்வாறு, முன்னிலையாகவும் சிறைப் புறமாக வும்—நேரிலும் மறைவிலும்—வரைவு கடாவப்பட்ட தலைமகன்; உடன்போக்கு, ஒருவழித்தணத்தல், வரை பொருட் பிரிதல் என்னும் இம்மூன்றினுள் ஒன்றுசெய்து, பின்பு தலைமகளை மணந்துகொள்வான்.



—நாள்

## கo. உடன்போக்கு

களம்:—குறிஞ்சியில் ஒரு பொழில்.
காலம்:—கூதிரில் ஒரு மாலை.
கூத்தர்:—தலைமகன், தோழி.

தலைமகன் இரவுக்குறி வந்து ஒழுகுகின்ற பொழுது, அவ்வொழுக்கத்தை அவ்வூர் அறிந்து அலர் தூறறிற்று. அவ்வலருக்கு நாணங்கொண்ட தோழி, தலைமகன் பழமையாக வந்து பயிலுகின்ற இடத்தே சென்று, அவனை எதிர்ப்பட்டு, வலங்கொண்டு சார்ந்து, முன்னே நின்று தொழுகின்றாள்.

தோழி:—"ஐய! எங்களுக்கு வந்ததை என்ன சொல்வேன்? எங்களிடம் நீங்கள் காட்டிய அன்பு, இன்று அலர் ஆயிற்று! நம்முடைய

ஒழுக்கத்தைப் பலரும்
அறிந்தார் ; பழி தூற்றுகின்றார்.
இதெல்லாம்
முன் னமே மடங்களு க்குச்
சொல்லியிருக்கின்றேன்.—
ஆ ! இப்பொழுது, மேலும் ஒன்று
வந்தது ! என்
தோழியை—உங்கள் காதலியை,
யாரோ சிலர்
மணமபேசியும் வந்தார்.
எங்களுக்குக்கலக்கத்தைத்
தந்தார். ஐயோ! இது எப்படி
முடியுமோ?—இவ்வ
ளவும் உண்டாகும் வரையும்
நீங்கள் இப்படியே
நடந்து வந்தீரே ! அன்புடைய
நீங்கள்—"
த-ன்:—"நல்லாய் ! நான் என்ன
செய்யட்டும் ?
இதெல்லாம் நாம் எண்ணமலே
வந்தது! என்மேல்
வருத்தப்படாதே. இப்பொழுது
நீ சொல்வது

போலச் செய்கின்றேன்."

4

•



தோழி:—"மன்ன! நானே உங்களுக்குச் சொல்வது? என் பெண்ணறிவு பேதையறிவு அல்லவா? எவந்
பெண் நான்! 'இது செய்க' என்று உஙகளைச சொல்லத தக்கவளோ? அல்ல.—ஆனல், என்
தோழி கற்பொன்றையே பொற்பாக உடையவள். உம்மையே அல்லாமல ஒருவரையும் வேண்டாள்!
நீங்களோ, இவளிடத்தில் நீங்கா அன்புடையீர்கள்! வேறொருத்தியை வேண்டீர். ஆகையால், உமது அன்புக்கும இவள் கற்புக்கும் அழிவு வாராதபடி நடகக, ஐயா! பேரறிவு பெற்ற உமக்கே தெரியாதோ?"

த-ன்:—"தெரியுமதான். நங்காய் ! உன் தோழியை இன்றே உடன்கொண்டு போவேன. என் ஊருக் குப் போனதும் மணம் புரிந்துகொள்வேன் . அப் பொழுது, அயலார் எடுக்கின்ற அலரும் அடங்கும்.
உன் தோழி அழுகையும அகலும். உன் பழியும் ஒழியும. என் வருந்தமும் வாடும். ஆனல், ஒன்று உண்டு.—என்ன என்றல், போகும் வழியோ வே கும் பாலைநிலம். முள்ளும்கல்லும் நிறைந்த முரம்பு! அங்கே, நீரும் இல்லை!நிழலும் இல்லை! ஐயோ! மாத ரும் அவ்விடம் போதருவது ஆமோ?உன் தோழி-என் காதலி மெல்லடி அதைப் பொறுக்குமோ?—மிகவும் மென்மையான பொருள்கள் இரண்டே என்று உலகத்தார் எடுத்துப் பேசுவர். அவை தெரியுமே? அனிச்சப்பூவும் அன்னத் தூவியும்! அவ்விரண்டுங் கூட என் மாதின் அடிக்கு நெருஞ் சிப்பழம் அல்லவோ?—நெருஞ்சிப் பழமானது



பழமென்று பெயரைப் பெற்றும் மேலெல்லாம்

மென்மையே இல்லாத முள்ள
ாயிருக்குமே!—இவ்
வகையான மெல்லடி உடையாள்,
கல்லுடைய
பாலைவனத்தை எப்படி கடப்பாள்?
ஆ! இது ஒன்
றுக்கே அஞ்சுகின்றேன்!"

அனிச்சமும் அன்னத்தின் தூவியும்
மாத
ரடிக்கு நெருஞ்சிப் பழம்
(கக௨0)

தோ:—"ஐய! ஒன்றும் அஞசவேண்டா.
என் தோழி
அன்பை அறியீரா? உம்முடன்
போவதென்றால்
அவளுக்கு உவப்பல்லவா? நீர்
சொல்லுகின்றபாலை
அவளுக்குச் சோலையே ஆகும்!
அவள் வழியிலே வருந்துவாள்
என்று நீர் வருந்தவேண்டா. ஆயி
னும், அவளிடம் நான் போய்
இதைச சொல்லி,
அவள் கருத்தை அறிந்து

வருகின்றேன. சற்றே
இவ்விடம் தானே நில்லுங்கள்.''
என்று சொல்லி
அவனை அவ்விடமே நிறுத்திவிட்டு
தலைமகளிடம் சென்று, அவள்
குறிப்பறிந்து, “அன்னாய்! நம்மு
டைய அன்பர், தம் ஊருக்கு உன்னை
உடன்கொ
ண்டுபோக எண்ணினார். தோழி,
உன் விருப்பம்
என்னவோ?'' என்று உணர்த்தி
நின்றாள்.

இவ்வாறு உணர்த்தப்பட்ட
தலைமகள்,“நோவே! இது என்னே?
உடன்போவோமென்றால், நாணம் நடுவே நின்று
தடுக்கின்றது! போகாமல் இவ்விடமே
நிற்போமென்றால், கற்பு
அழிவதாகும்.—பெண்பேசி, சில பேய்கள்
வந்திருக்கின்றனவே! என்னசெய்வேன்?

ஓ! தெய்வமே!" என்று சிறிதுநேரம் ஆராய்ந்து பார்த்து, 'கற்பைக் காப்பதே கருமம்' என்று தெளிந்தாள். தெளிந்தும், 'உடன் போவதற்கு உடம்பட்டேன்' என்று வாய்விட்டுப்பேச நாணமுற்று, தோழி முன்னே வந்து தலைசாய்த்து நின்று, தரை கீறியிருந்தாள். இருக்க, அவள் கருத்தைக் குறிப்பினால் உணர்ந்த தோழி, அவளை அழைத்துக்கொண்டுபோய் தலைமகனிடம் நிறுத்தி, அடைக்கலம் அளித்து, "அன்பரே! இவளைக் காக்கவேண்டுமென்று உமக்குச் சொல்லவும் வேண்டுமோ? நீர் அன்பிற் குன்றாத அன்பரென்று நான் அறியேனோ?—நீங்கள் இருவரும் செவ்வனே நகரம் சேர்ந்து மலரும் மணமும்போல மணந்து வாழவேண்டும்! இன்றுபோல என்றென்றும் இணைபிரியாமல் வாழவேண்டும்!" என்று வாழ்த்தி அனுப்பினாள்.

---

களம்:—தலைமகள் ஊருக்கும தலைமகன் ஊருக்கும

[இடையிலுள்ள மணற்காடு.

காலம்:—கூதிரில் ஒரு நடுப்பகல்.
கூத்தர்:—தலைமகன், தலைமகள்.

தோழியால் வாழ்த்தி அனுப்பப்பட்ட தலை மகனும் தலைமகளும், வருத்தமின்றிச் சிலதூரம் வழிவிளையாடி நடந்தார். நடந்தவருக்குக் குறு க்கே ஒரு கொடுஞ்சுரம் வந்து குறுகிற்று. வெ யில் கடுமையாக வெதுப்பிற்று. தீக்காற்று வீசிற்று. காதலர் இருவரும் நெல்லிக் கனியை வாயிலிட்டு



மெல்ல மெல்லக் கடந்தார்.
கடந்தபொழுது, கொதிக்
கின்ற மணல் வழியை மிதிககமாட்டாமல்
தலைமகள்
அடி பதைத்து வருந்தினாள். அது கண்ட
தலைமகன்
ஆற்றொணாத் துயரம் அடைந்தான்.
அடைந்து அவ்
விடத்தின் தன்மையை ஆராய்ந்து
பார்க்க, அதன்

நடுவே ஒரு நிழலிடம் உண்டென்று நினைவு வந்து,
அங்கே சென்று .சில நேரம் தங்கியிருந்து, தளர்வு
நீங்கித் திரும்பவும் புறப்பட்டுப் போகின்றார். அப் பொழுது
புணர்ச்சியின் மகிழ்ச்சியைப் புகழ்ந்துரைக்
கின்றான் தலைமகன்.

த-ன்:—(தன்னுள்ளே) "என்னே! இவள் காதல் ! புதிது புதிதாகத் தோன்றுகின்றதே! ஆ!
காதலும் அறிவும் ஒன்று தானோ? அறிவுக்
கோ ஓர் அளவில்லை. அது மேலும் மேலும் வள
ரும்! வளரும் பொழுது, முன்னைய அறியாமை
யாக அறிகின்றோம். புதிய அறிவு பிறக்கப் பிற க்க அது பழைய அறிவைப் பிழையாகக் காட்டும்.
இது அறிவின் குணம்!—அதுபோல, இவள் காத

னும் செறியச் செறிய—நாளுக்கு நாள்—புதிது
புதிதாகக் காட்டுகின்றதே! ஆ! இவளிடம் நேற்
றைச் செறிவு, முன்னைய செறிவைச் செறியாமை யாகக் காட்டி விட்டதே! இன்றைய செறிவும் நேற்
றைய செறிவை அப்படியே ஆக்கிவிட்டதே! என்ன
புதுமை! ஓ! என்ன புதுமை!"

அறிதோ றறியாமை கண்டற்றால் காமம்
செறிதோறும் சேயிழை மாட்டு.

(௧௧௧௦)



இவ்வாறு அருஞ்சுரம் கடந்து தன் அணி நகர் அடைந்த தலைமகன், அறிவோரும் அந்தணரும் அறிந்திருக்கத் தலைமகளை வதுவைக் கலியாணம் செய்து கொண்டு இல்லறத்தில் அமர்ந்து வாழ்கின்றான்.

இவ் உடன்போக்கு நிகழாதாயின்

ஒருவழித் தணத்தல் நிகழும்.

———

—நாள்

கக. ஒருவழித் தணத்தல்—க.

களம்:—குறிச்சியில் தலைமகள் இல்லம்.
காலம்:—கூதிரில் ஒரு பகல்.
கூத்தர்:—தலைமகள், தோழி.

ஊரெல்லாம் அலர் பரவுகின்றதென்று உரைக்கக் கேட்ட தலைமகன் 'இவ்வலர் அடங்கும் வரையும் இவ்விடம் வாராமல் அகன்றிருப்பேன்' என்று சில காலம தன் ஒழுக்கம் ஒழிந்து, ஓர் இடத்தே அமர்ந்து உறைவானாயினன். அதனால், அவனைக் காணப் பெறாமல் தலைமகள் ஆற்றாமை வளர்ந்து அழிந்து புலம்பினாள். புலம்ப, தோழி, 'இவளை ஆற்றும் வகை என்ன?' என்று ஆராய்ந்து கடைசியில் 'அவன்குணங்களைப் பழித்துப் பேசினால், அப்பொழுது அந்தப் பழிப்பேச்சைக் கேட்க அஞ்சியாவது இவள் அழுகை ஒழிந்து ஆற்றியிருப்பாள்' என்று எண்ணித்துணிந்து

தலைகாள் எதிரேவந்து நின்றாள். நின்றவள் கருத்து'இன்ன'தென்று குறிப்பினால் அறிந்த தலைமகள், அவள் கேட்கும்படி தன்னுள்ளே சொல்லுகின்றாள்.

## ஒருவழித் தணத்தல்—க ருரு

த-ள்:—"ஆ! என் காதலர் அன்பைக் கணக்கிட—அள

விட யாரால் ஆகும்? என் கண்ணிலிருந்து ஒரு

கணமும் நீங்கார்—ஒரு நொடியும் நீங்கார். எப்

பொழுதும் இதோ! என் முன்னே நிற்கின்றார்—

என்னை அறியாமலே ஒரொருகால், ஐயோ! நான்

இமை கொட்டுகின்றேன். அதுவும் ஆ! இவரை

வருத்தம் செய்கின்றதா? இல்லையே! எப்பொழு

தும் என் கண்ணிலே நிற்கின்றார்—ஆ! இவர் எவ்

வளவு
நுண்ணியர்?—காணப்படாத நுண்ணியர்!—
யாவர் கண்ணுக்கும் அகப்படாத
நுண்ணியர்.
இவர் நுண்மையை அறியாதவர் ஐயோ!
இவரை
வீணே பழி சொல்லுகின்றார்களே! இது
என்ன
பாவம்!

கண்ணுள்ளிற் போகார் இமைப்பிற் பருவரார்
நுண்ணியரெம் காதலவர்.
(கக௨௬) —"என்னே! இவர் என்னை
மறந்துபோனாராம். பிரி
ந்து நெடுந்தூரம் போனாராம். அந்தோ!
எங்கே
மறந்தார்? எங்கே போனார்? எந்தெந்த
நேரமும்
இதோ! என் கண்ணிலே உள்ளாரே! இதனால்
அல்
லவோ, என் கண்ணுக்கு மையெழுதவும்
நான்

மறுத்திருக்கின்றேன்? மை யெழுதுவது சிறிது
நேரம் தான். ஆனாலும், அந்தச் சிறிது நேரமும்
இவர் மறைவாரே என்று மயங்கியே நான் அது
செய்யாதிருக்கின்றேன். இது யார் அறிவார்?
கண்ணுள்ளார் காத லவராகக் கண்ணும்
எழுதேம கரப்பாக் கறிந்து
(கக௨எ)



—"இது மட்டோ? ஒன்றையும் வெம்மையாக உண்
ணவும் நான ஒழிந்திருக்கின்றேனே! என்னே! என் நாயகர் என் நெஞ்சில் இதோ! எப்பொழுதும்
உள்ளாரே— நீங்காமல் நிலையாயிருக்கின்றாரே! நான்
சுடுகையோடு உண்டால், அந்தச் சுடுகை உணவு

சென்று இங்குள்ளவரைச் சுடாதோ! ஆ! அச்சுடு
கையால் இவர் வருந்தாரோ?—அந்தோ! என்ன
பாவம்! என் கண்ணைவிட்டும்—என் மனத்தைவிட்
டும் கடுகளவும் பிரியாத காதலரை, நெடுந்தூரம்
சென்றுரென்று கொடுஞ்சொல் சொல்கின்றார்
களே! என்ன கொடுமை! என்ன செய்வேன்!''
நெஞ்சத்தார் காத லவராக வெய்துண்டல்
அஞ்சுதும் வேபாக் கறிந்து. (ககஉஅ)

இவ்வாறு தலைமகள் சொல்லிச் செல்வி வருந்
தக் கேட்டு, இதன்மேலும், தலைமகனை இயற்பழியா
தொழிகின்றாள் தோழி.

---

—நாள்

கக. ஒருவழித் தணத்தல்—உ.

களம்:—குறிச்சியில் தலைமகள் இல்லைச்சார்ந்த
ஒரு
காலம்:—கூதிரில் ஒரு பகல்.
[பொழில்.
கூத்தர்:—தலைமகன், தோழி, தலைமகள்.
சிலகாலம் தலைமகள் ஊருக்கு வராமல்
தவிர்ந்
திருந்து பின்னர் வந்த தலைமகனைத்
தலைமகளும்
தோழியும் சென்று எதிர்ப்பட்டு
வலஞ்செய்துநின்று



மகிழ்ந்திருந்தார். அதுபொழுது தோழி தலைமகனை நோக்கி "ஐய! உம்முடைய பிரிவைத் தரியாத என் தோழி இவள், இங்கிருந்து உற்ற வருத்தமெல்லாம் உரைத்திட முடியுமோ? ஐயோ! உடலெல்லாம் வெறுத்தாள்—பசந்தாள்—மெலிந்தாள்—அழுதாள்—விம்மினள்—அரற்றினள். ஆ! எவ்வளவு!

ஊசலும் பாட்டும் மறந்து, உண்ணலும் உறங்கலும் துறந்து, உள்ளம் வாடி வருந்தினாள். அதையெல்லாம் அடி முதல் சொன்னால் பன்னாள் ஆகும். அது கிடக்கட் டும். அன்ப! நீங்கள் நீங்கியிருந்த நாளில் ஒருகாலும் எங்களை நினைத்தும் அறிவீரோ? சொல்லுங்கள்!'' என்று நகைத்துக் கேட்டாள்.

த-ன்:—(புன்னகைசெய்து) "நங்காய்! நீகேட்பதுநன்றாய் இருக்கின்றது. உங்களை நான் மறந்திருந்தால் அல்லவோ, மறுபடியும நினைத்திருப்பேன்? ஒரு இமை நேரமும்—ஒரு இம்மி நேரமும் உங்களை நான் மறநததில்லையே?—உன் தோழி இவள் கண்ணழகு ஒன்றையும் ஒருபோதும் என் நெஞ்சம் மறக்குமோ? அதன் ஒளிவும் தெளிவும் எப்படி மறப்பது? அதன் அமர்த்த நோக்கை எப்படி மறப்பது? அதை எண்ணி எண்ணி ஏங்குவதல்லாமல் மறப்பதும் ஆகுமோ? மடவாய்! அது இருக்கட்டும். உன் தோழியின் நாற்குணத்திலே ஒன்றையாவது என் நெஞ்சம் மறக்குமோ? ஒவ்வொரு குணமும் என்மனததிலே ஊன்றிக்கிடக்கின்றதே! ஆ! அதை எப்படி மறப்பது?—நல்லாய்! உங்கள்

அழகையும் குணத்தையும் அல்லும் பகலும் நான்
மறந்தும் அறியேன்; மறுபடியும் அவற்றை நினைத்
தும் அறியேன்! ஆம்! இது உண்மை!"
உள்ளுவன் மன்யான் மறப்பின் மறப்பறியேன்
ஒள்ளமர்க் கண்ணாள் குணம்.
(௧௧௨௫)

என்பது கேட்டு, அவன் காதற்சிறப்பினைக் கண்டு, தலைமகளும் தோழியும் உள்ளம் தழைக்கின்றார்.

இவ்வாறு ஒருவழித் தணந்துவந்த தலைமகன், தலைமகள் ஊரிலாவது தன் ஊரிலாவது அவளை வதுவைக் கலியாணம் செய்துகொண்டு இல்லறம் அமர்ந்து இனிது வாழ்வான்.



—நாள்

௧௨. வரைபொருட் பிரிவு—௧.

களம்:—குறிச்சியில் தலைமகள் இல்லம்.
காலம்:—கூதிரில் ஒரு காலை.
கூத்தர்:—தலைமகள், தோழி.

அயலார் எடுக்கின்ற அலருக்கு அஞ்சிய தலைமகன் "நம்முடைய குலத்திற்கும் குடிக்கும் இம் மறைந்த ஒழுக்கம் இனியும் ஆகாது. ஐயோ! இவள் பெருமைக்கும் இது சிறுமை! இன்னே இவளை மணந்து கொண்டு வாழ்வேன்!" என்று தெளிந்து வரைவுடம்பட்டான். உடம்பட்டு, தலைமகளும் தோழியும் வந்து விளையாடுகின்ற பொழிலிடம் சென்று புகுந்து, அவர்களை எதிர்ப்பட்டு, தோழியை நோக்கி,



"நல்லாய்! நான் போய் நம்மவர் கூறும் பரியப் பொருளோடு வந்து உன் தோழி—இவளை மணந்து கொள்வேன். பிரிந்து நான் வாழேன். நெடு நாள் அவ்விடம் தாழேன். விரைந்து வருவேன். அது வரையும் நீ இவளை ஆற்றுவித்துக்கொண்டிரு!" என்று தேற்றி, அவர் பிரியாவிடையைப் பிரிய விடை யாகப் பெற்றுப் பிரிந்தான். பிரிந்த விடத்து, அவன் பிரிவிற்கு ஆற்றாமல் தலைமகள் வேறுபட்டாள். வேறு பட, "அன்னாய்!நம் தலைவர் நமக்கு நல்லது புரியவே பிரிந்தார். பிரிய, நீ ஆற்றாயாவதோ

தக்கது?'' என்று தோழி தெளிவித்தாள். தெளிவித்த தோழிக்கு; "ஏடி! அவர் பிரிவுக்கோ நான் கலங்கினேன்? அவர் சென்ற 'கானத்துத் தன்மைக்கே கவலுகின்றேன். என் எண்ணம் அறியாமல் ஏதிலர் என்னைப் பழிக் கின்றார் என்றாள்." சிலகாலம் சென்றது. மறுபடியும் தலைமகன் பிரிவை நினைந்து தலைமகள் ஆற்றாமை மிகு ந்து அழுதாள் அழ, 'இவளை ஆற்றும்வகை என்ன?' என்று தோழி ஆராய்ந்தாள். ஆராய்ந்து 'இவள் எதிரே நின்று தலைமகன் குணங்களைப்.பழித்துரைப் போம். அந்தப்பழித்துரையைக்கேட்க மனம்பதைத் தாவது இவள் அழுகை ஒழிநது ஆற்றியிருப்பாள் ' என்று துணிகின்றாள்.

தோழி:—(தலைமகள் முன்னே நின்று) "ஆ! இவரோ
அன்புடையவர்? இவளைப் பிரியா நோய் செய்த
இவரோ அன்புடையவர்? பிரியேனென்று பிரிந்
தார். இவளைத் துயிலாமலும் வைத்தார். ஓ!
இவர் எவ்வளவு கொடியவர்!"

•

தலைவி:—(தோழிபழிப்பதைக் கேட்க மனந்தாளாமல்)

"என்னே! காதலர் அன்பை நானே அறிவேன்!
அவர் என்னிடம் வைத்த அன்பை யார் அறிவார்?
வேறு யார் அறிவார்? ஊரெல்லாம் அறிய
ஆகுமா?—அவர் அன்புக்கு ஒரு அளவு உண்டா?
என் விழியிலிருந்து ஒருகணமும்விலகார்-நொடியும்
நீங்கார்! நான் இமைப்பேனாயின், அப்பொழுது
சற்றே மறைகின்றார். அந்த மறைவுக்கு அஞ்சியே
நான் இமைப்பதும் இல்லை. ஐயோ! இந்த இமை
நேரம் மறைவதற்கே, அவரை இவ்வூர் பழிக்கின்
றதே! ஆ! இது என்ன பாவம்!

இமைப்பின் கரப்பாக் கறிவல் அனைத்திற்கே ஏதில
ரென்னுமிவ் வூர். (கக௨க)

—"என்! என் கண்ணிலே மட்டுமோ? என் உள்ளத்தி
லும்உள்ளாரே! ஒரு கால் என் கண்ணிலிருந்து
ஒரு கணநேரம் பிரிந்தாலும், என் மனத்திலிருந்து
ஒரு நொடிநேரமாவது அவர் மறைய இல்லையே!
ஆ! இவரோ என்னைப் பிரிந்தார்! இவரோ அன்
பில்லாதவர்! என்னைத்துயிலா நோய் செய்தவர்!—
என்னை விட்டு ஒருபொழுதும் நீங்காத அன்பரை
ஊர் முழுதும் பழிக்கின்றதே! ஓ! என்னபாவம்!"

உவந்துறைவ ருள்ளத்துள் என்றும் இகந்துறைவர்

ஏதில ரென்னுமிவ் வூர். (ககந௦)

எனச் சொல்லி வருந்தக் கண்டு, இன்னும் தலைமகன் இயலைப் பழியாமல் ஒழிகின்றாள் தோழி.

—நாள்

## கஉ. வரைபொருட் பிரிவு—உ

*களம்:— குறிச்சியில் தலைமகள் இல்லம்.*
*காலம்:— கூதிரில் ஒரு பகல்.*
*கூத்தர்:— தலைமகள், தோழி.*

'உன்னைப் பரியமிட்டு எனக்கு உரியளாக்கிக் கொள்வேன்' என்று சொல்லித் தலைமகளைத் தெளிவித்துப் பிரிந்த தலைமகன் சில அறிவுடையோரை அவள் பெற்றோரிடம் மணம் பேசிவர, அருங்கலங்களோடு அனுப்பினன். அனுப்பப்பட்டவர், அவ்வாறே அப்பெற்றோரிடம் சென்று தலைமகனுடைய குலமும் குணமும் கல்வியும் செல்வமும் எல்லாம எடுத்துச் சொல்லி, "ஐய! எம்முடைய மகனுக்கு நும்முடைய மகளை மணப்பீரோ?" என்று கேட்டார். அதற்கு அப் பெற்றோர் "எம்முடைய மகளுக்கு இவ்வுலகமே விலை போதாது! இருந்தும், நும் மகனுடைய கல்விக்கும் செல்வுக்குமே இவளைக் கலியாணம் செய்துகொடுக்க இசைந்தோம். ஆயினும், நாங்கள் வேண்டுகின்ற பரியம் இது !" என்று

தெரிவித்து, தாம் விரும்பிய பொருளொன்றைச் சொல்லி மணம்பேசிச் சென்றவர்களை விருந்திட்டு விடுத்தார்கள்.

இப்படியே, வேறு சிலரும் தலைமகளை மணம் பேசி வந்து விருந்துண்டு திரும்பினார். இதெல்லாம் கண்ட தலைமகள், "ஐயோ! என்ன செய்வேன்? பலரும் என்னை மணங் கேட்டு வருவதும் போவதும் ஆயிற்று. என் பெற்றோர் யாருக்கு இசைந்தாரோ?



என் கண்ணையும் நெஞ்சையும் நீங்காத காதலருக்கோ? வேறு நின்றவருக்கோ?" என்று ஐயப்பட்டுச் செய்வது தெரியாமல மனம் வருந்தியும் மேனி வாடியும் வேறுபட்டாள். அவ் வேறுபாடு கண்ட அவள் தாயும் தமரும், பலவாறு அவளைப் பழித்துப் பேசினார். அன்றியும், இவ்விடம் விட்டு எங்கும் வெளியே செல்லாதபடிச் சிறைகாவலும் செய்தார். செய்ய, தலைமகளுக்குக்காமம் மிகுந்தும், அதனால் கழிபடர்— மிகப் பெருந்துன்பம்—வளர்ந்தும், வருத்தம் பெருகிற்று. பெருக, அது

குறையும்படி, குழந்தை அழு தாற்போல, தோழி கேட்கும்படி வாய்விட்டு அழுகின்றாள்.

த-ள்:—"ஆ! என் காதலை என்னென்று சொல்வேன்?

அதன் கொடுமையை என்னென்று சொல்வேன்?

'இவள் மிகவும் நிறையுடையவள்; இவள் நிறைக்

குப் பெருகி நாம் வரமாட்டோ ம்; இவள் நிறை

யை நாம் வெல்லமாட்டோம்!' என்று எண்ணி

எனக்கு அஞ்சுகின்றதா? அல்லது, 'அன்பரைப்

பிரிந்து வருந்துகின்றாள். ஐயோ! பாவம்!

என் செய்வாள்? இவள் துயரம் பெரிது!' என்று

எண்ணி எனக்கு மனமிரங்குகின்றதா? எவ்வளவு

கல்மனம்? எவ்வளவு அஞ்சா நெஞ்சம் படைத்

தது? ஆ! என் காதல்! எனக்கு அஞ்சாவிட்டாலும்

இரங்காவிட்டாலும் போகின்றது; இன்னொரு தீங்
கையும் செய்கின்றதே!—நான் மறைக்க மறைக்க,
சிறிதும் மறைபடாமல், ஊரும் நாடும் அறிய
வரைபொருட் பிரிவு—உ


வெளிப்படுகின்றதே! இது ஒன்றுக்கும் என்ன
செய்வேன்?

நிறையரியர் மன்னவியர் என்னுது காமம்
மறைபிறந்து மன்று படும்.
(௧௧௩௮) —"ஆ! இதன் எண்ணம் இப்பொழுதுதான் தெரி
கின்றது! இதன் காரியத்தைக் கவனித்தால் இதன்
கருத்து விளங்க இல்லையா?'நான் இவளிடம் இருப்
பதை எல்லோரும் அறிய இல்லை. ஏனென்றால்

நான் முன் அடங்கி இருந்தேன். இனி அப்படி
கில்

லேன். நானே வெளிப்பட்டு எல்லோருக்கும்
அறி

விப்பேன்' என் று கருதிக் கங்கணம்
கட்டிக்கொண்

டது. அவ்வாறே இவவூரெல்லாம்அறிய
அம்பலு

மாகி அலருமாகின்றது.
ஐயோ!இனிமேலும், நான்

மறைப்பதால என்ன பயன் ? உண்மையை
உரை

த்து விடுவதே உத்தமம் அல்லவா?"
அறிகிலா ரெல்லாரும் என்றேயென் காமம்
மறுகில் மறுகும் மருண்டு.
(கககூ)

இவ்வாறு தலைமகள் புலம்புவதை மறைந்திருந்து கேட்ட செவிலி, தோழியை நோக்கி "அன்னாய்! உன் தோழி இப்படி துயரப்படுவதற்குக் காரணம் என்ன? நீ அறிந்தது ஏதேனும் உண்டானல் சொல்லு"என்று கேட்டாள். கேட்ட

செவிலிக்கு "முன்னொரு நாள், அம்மா! எங்களைச் சோலைக்குச் சென்று விளையாடி வரும்படி அனுப்பினாய். நாங்களும் அப்படியே சென்று விளையாடிக்கொண்டிருந்தோம். அதுபொழுது கூச திருக்குறள் நாடகம்

கையில் ஒரு செந்தாமரை மலரோடு ஓர் ஆடவன் அவ்விடம் வந்தான். அவனை நோக்கி, என் தோழி 'உமது கையிலுள்ள பூவை என் பாவைக்கு அணியத் தருக' என்று கேட்டாள். அவன், ஒன்றும் சிந்தியாமல அதை உதவிப போயினான். இது எங்கள் பேதைப் பருவத்திலே நடந்தது ; அவனையே இப்பொழுது நினைந்து வருந்துகின்றாள் போலும்" என்று சொல்லினாள். அதற்குச் செவிலி "அன்னாய்! என் மகள் அறிவே அறிவு ! சின்னஞ் சிறுவயதிலே தான் நடந்ததையும் சிந்திக்கின்றாள் ! அன்று மலர் கொடுத்தவனையே இன்று மணங்கொள்ள விரும்புகின்றாள் ! இவள் கற்பே கற்பு! நான் மன மகிழ்ந்தேன்— நீசென்று உன் தோழியை ஆற்றுவித்திரு; அவனையே இவளுக்கு மணஞ்செய்வோம!" என்று சொல்லினாள். சொல்ல,

தோழி உள்ளம் குளிர்ந்து தலைமகளிடம் வந்து, அவள் முன்னே நகைத்துக்கொண்டு நின்று சொல்லுகின்றாள்.

தோ:—"ஏடி! இனி வருந்தாதே ! நமது அன்னை உன்
அழுகைக்குக்காரணம்என்னஎன்றாள்நான்' அன்று
பூத்தருதவனை நினைந்து புலம்புகின்றாள்' என்றேன்.
அவள் உன்னுடைய அறிவுக்கும் கற்புக்கும் அதிக
மகிழ்ந்து உன் மனம்போல் நடக்க இசைந்தாள்.
தோழி! நமக்கு என்ன குறை!"

த-ள்:—(தன்முன் நின்று தோழி நகைப்பதைக்கண்டு
அவளோடு பிணங்கி) "ஆ! இவர்களோ எனக்குத்
துணை? நல்லதுணை? என் காதில் விழவும் பழிக்கின்

ளூர். என் கண்ணில் காணவும் நகைக்கின்ளூர். முன்
னே நான் கண்டறியாத காட்சி யெல்லாம் இன்று
காணச் செய்கினளூர். ஐயோ! நான் படும்பாட்டை
இவரும் அறிந்தாரா? அறிந்தால், இப்படி என்னை
நகைப்பாரா? நகையார். அறியாக் குறையாலே
என்னை அலக்கழிக்கின்ளூர்!''

யாம்கண்ணிற் காண நகுப அறிவில்லார்
யாம்பட்ட தாம்படா வாறு .
(கககச)

என்பது கேட்டு, தோழி பெயர்கின்ளுள். தலைமகளு் தெளிகின்ளுள்.

---

—நாள்

கஉ. வரைபொருட் பிரிவு—ள

களம்:—குறிச்சியில் தலைமகள் இல்லைச் சார்ந்த ஒரு
பொழில.

காலம்:—கூதிரில் ஒரு மாலை.

கூத்தர்:—தலைமகள், தோழி.

கற்றறிந்த பெரியோரை அனுப்பி மணம் பேசி விரைவில் கலியாணம செய்து கொள்வதாகச் சொல் லிப்பிரிந்த தலைமகன், தன் ஊருக்குச் சென்று சேர்ந் ததும், தன் குலத்தின் மிககார் சிலரைத் தலைமகளின் பெற்றோரிடம் பெண்கேட்டு வரும்படி அனுப்பினான். அப்படி அனுப்பப் பட்டவர் தலைமகள் ஊருக்குச் சென்று, அவள் பெற்றோரைக்கண்டு பேசி, அக் காரி யத்தை முடித்து வருமுன்னே சில நாள்



கழிந்தது. ௯௯ 

கழிய, தலைமகளை எதிர்ப்படாமல் தலைமகன் ஆற்றா யினான். ஆகி, அவளைக்காணும் விருப்பம் மிகுந்து அவள் வந்து விளையாடுகின்ற பொழிலுக்கு அருகே போய் நிற்கின்றான்.

தலைமகனை எதிர்ப்படாமையால் தலைமகளும் ஆற்றாளாகி, "என்னே! என் அன்பர் திரும்பிவருவதாகக்குறித்த நாளும் கழிந்தது. இன்னமும் வந்திலர். ஐயோ! அழியா அன்புடைய என் காதலரும் என்னை மறப்பாரோ?

என்னைக்காணுமல் நிற்பாரோ! இப்படி பலநாள் பிரிந்திருப்பதற்குக் காரணம் என்னவோ?" என்று எண்ணி எண்ணி மனம் ஏங்கினுள். மெய்யும் மெலிந்தாள். அம்மெலிவு கண்ட அனையும அயல கத்து மாதரும் அவளைப் பழித்துப் பேசினர். அது கேட்ட தோழி, தலைமகளை ஆற்றுவிக்கவேண்டி அவளைப் பொழிலிடம் அழைத்துக்கொண்டு போயினள். அதுபொழுது, அவ்விடம் வந்து மறைந்து நின்றிருந்த தலைமகனைக் குறிப்பினுல் உணர்ந்து, தலை மகளும் தோழியும் தம்முள்ளே பேசிக்கொள்கின்றுர்.

தோழி:-"அம்மா! இப்படி எந்தநேரமும் அழலாகாது! அண்டை அயலெல்லாம் அறியும்படி இவ்வளவு புலம்பலாகாது! நீ அழுகின்றதனுல் பெண்கள் எல்லாரும் நம்மைப் பழிக்கின்றுர்கள். அவர் பழிக் கின்றது உனக்கு நாணமாயில்லையா? அவர் பேசுகின்ற பேச்சு எனக்குக் கூசுகின்றதே! தோழி! அவருடைய ஏச்சுக்கும் இழிவுக்கும் அஞ்சியாவது நீ வாய்மூடி இருக்கவேண்டும்!"

தூ-ள்:—"எடி! உனக்கு நாணம்தான். எனக்கும் நாண
மா? நம் நாயகருக்கே
நாணம் இல்லையே!—என்னை
அவர் முதன் முதல் கண்டபோது,
என்னென்ன
சொன்னார்? 'உன்னைப் பிரியேன்; நான்
பிரியேன்.
அஞ்சாதே' என்றாரே! ஆ! அவர் சொல்
எங்கே?
இதோ! இவ்வளவு நாளும் என்னைப்பிரிந்து
எங்கே
யோ போய்விட்டாரே! அவருக்கு
நாணமென்பது
உண்டா? உண்டானால், 'கண்டவர் நம்மை
நகைப்
பார்' என்று அஞ்சி என்னைப்
பிரிந்திருக்கமாட்டா
ரே! அவருக்கே இல்லையே, நமக்கு நாணம்
ஏது?

நம்மைக் கண்டால் நாணும்படி அல்லவோ
நாம்
இருக்கின்றோம்? அடி!"
அலர்நாண ஒல்வதோ அஞ்சலோம் பெணுற்
பலர்நாண நீத்தக் கடை. (கக

சகூ) தோழி:—"அது கிடக்கட்டும். ஊர்
தூற்றுவதெல்லாம்
நமக்கு நல்லதுதானே! எடி! 'ஊர்
தூற்றினால்
அதைக்காரணமாக வைத்து நாயகருடனே
நடந்து
விடலாம்' என்று முன்னமே எண்ணி
இருந்தாயே!
அப்படியே வந்து சேர்ந்தது!—நீ
வேண்டியதே
வலிய வந்து சேர்ந்ததே! இது உன்
பாக்கியம்
அல்லவா?—இனி, நமது காதலருக்கு நாம்
சொல்
வதுதான் குறை. சொன்னவுடனே உன்னை
உடன்

கொண்டுபோய்விடுவார். அடி! இந்த அலர் நமக்கு
நன்றாய் வந்து சேர்ந்தது. இவ்வூர் வாழட்டும்! தாம்வேண்டின் நல்குவர் காதலர் யாம்வேண்டும்
கௌவை யெடுக்கு மிவ்வூர்.
(கக௫௦) சூ.அ. திருக்குறள் நாடகம்

இவ்வாறு தலைமகளும் தோழியும் பேசிக்கொள்வதை மறைவிடத்தில் நின்று கேட்டுக்கொண்டிருந்த தலைமகன், "அந்தோ! இவள், ஊர் தூற்றும பழிக்கு மிகவும் நாணுகின்றாள், இவளைத்தனியே விடலாகாது. இவள் பெற்றோர் எனக்கு மணம் இசைந்தால் நாளையே கலியாணம் செய்துகொள்வேன். இசையாவிட்டால் இவளை என் ஊருக்கு அழைத்துக்கொண்டு போய், அங்கே பலரும் அறிய மணந்துகொள்வேன். இவள் மனம் நோகவையேன்!" என்று துணிந்த மனத்தோடு பெயர்கின்றான்.

களவியல் முற்றும்.

## கற்பியல்

கற்பாவது தலைமகனும் தலைமகளும் வரைந்து கொண்டு வாழ்தல்.

### முதலாம் ஆண்டு

அறப்பிரிவு—க. ஓதல்—க

களம்:—தலைமகன் இல்லம்.
காலம்:—வேனிலில் ஒருபகல்.
கூத்தர்:—தலைமகன், தலைமகள், தோழி.

உலகத்து வாழும் மக்கள் உயிருக்கு, உறுதியும் உயர்வும்தருவனவாகிய அறம் பொருள் இன்பம் வீடு
என்னும் நால்வகைப் பேறுகளையும் நன்கு கூறுகின்ற

நூல்கள் பலவற்றையும், முன்னமே தலைமகன் ஓதி
யுணர்ந் திருந்தான். உணர்ந்திருந்தமையால், அவனிடம் வந்து பழகிய அயனாட்டு அறிஞர் தமது நாட்டிலே கசடறக் கற்றறிந்த கல்வியாளர் சிலர் உள்ளா
ரென்று உரைத்துப் போயினர். அதைக்கேட்ட தலை
மகன் 'நாம் கற்றதும் கேட்டதும் எல்லாம் கற்றவர் முன்னே காட்டி உசாவுதற்கு அல்லவோ? இவர்
முட்டில்லாமல் முறைபடக் கற்றவராமே. ஆதலால், இன்றே இவரிடம் சென்று பழகவேண்டும். இவர்



என்னைக் காட்டினும் உயர்ந்தவராயின், இவரிடம் கற்றுவருவேன்; அல்லராயின், கற்பித்து வருவேன்' என்று எண்ணினான். எண்ணி, தலைமகளிடம் தனது விருப்பத்தைச் சொல்லி அவள்விடைபெற்றுச் செல்ல விரும்பினான். பின்னும், அவளிடம் சொன்னால் ஒருகால் அவள் விடைதாராமல் தடைசெய்வாளோ என அஞ்சினான்.

அஞ்சி, அவளுக்குத் தனது பிரிவைத் தோழியைக் கொண்டு உணர்த்திப் போவதே தக்கது' எனத் துணிந்தான். துணிந்து, தோழியைத் தனியே பொழிலிடத்தே கண்டு, கல்விக்குள்ள எல்லையில்லாத மேன்மையை எல்லாம் எடுத்து உரைத்தான். முடிவி லே, அவ்வகைப்பட்ட கல்வியில வல்ல நல்லறிவாளர் அயல் நாட்டில் உள்ளாரெனவும், அவருடன் அளவளா விவரும்படி அவ்விடம் தான் செல்லவேண்டு மென வும் தெரிவித்தான். ''நங்காய்! உன் தோ ழியைப் பிரிந்து நெடுநாள் அவ்விடம் நில்லேன். இவளைப் பிரிந்த ஒவ்வொரு நாழிகையும் ஒரு ஊழிபோல வளர்ந்து எனக்கு உறு துயர் செய்யும். ஆகையால் ஆங்கே நீட் டித்து நில்லேன். இவளை நீ ஆற்றியிரு. கடிதிலே— நாளையே திரும்பி
வருகின்றேன்''—என்றான்.

தோழி:—"நாளையே திருமபி வருகின்றேன்! ஐய! வரு
கின்றேனென்று யாரிடம் சொல்லுகின்றீர்கள் ? நீர்
திரும்பிவரும் பொழுது உமது வரவு காணும்படி
உயி ரோடுவா ழ்ந்திரு ப் பவருக்கே

அதைச்சொல்லுங்
கள்,என் னிடம் அது வேண்டா.
நீர்பிரிந்துபோய்த
திரும்பிவரும் அவ்வளவு காலமும் என்
தோழி
பொறுத்திருப்பாளா ?
உயிர்வைத்துப்பிழைத்தும்



இருப்பாளா ? இருக்கவே இராள். ஆதலால், நீர் எம்மைப் பிரியாமை உண்டாயின், அதையே எனக்குச் சொல்லுங்கள். பிரிவதைப் பற்றிப் பேசாதீர்கள்.'' —பெயர்கின்றாள்.!

செல்லாமை யுண்டேல் எனக்குரை மற்றுநின்
வல்வரவு வாழ்வார்க் குரை.
(ககருக)

இவ்வாறு தலைமகனைச் செலவு அழுங்கும்படிச் செய்த தோழி தலைமகளிடம் சென்று, கண்டு, அவளைச் சார்ந்து நின்று "அன்னாய் ! நமது அன்பர் அன்பைக் கண்டாயா ! கல்வியிலே மனம் வைத்தார் ; நம்மைக்

கையகன்று செல்வதாகச் சொல்கின்றார். இதற்கு நாம் என்ன செய்வோம்?''

த-ள்:—(தலைமகன் பிரிவுக்கு உடம்பட்டுவந்தமையால்

தோழியோடு பிணங்கி) "ஏடி! அவர் பிரிவை நீ

உரைக்கவும்வேண்டுமா? அதைமுன்னமே எனக்கு

என் கைவளையே தெரிவித்து விட்டதே! இதோ!

என் உடம்பு மெலிந்து, வளையெல்லாம் கழலுகின்

றது; பார். இந்த வளையைக் காட்டிலும் நீ என்

னடி அதிகமாகச் செய்துவிட்டாய்? அவர் பிரிந்தா

ரென்று நீயும் வந்து உணர்த்தினாய்; உனக்குமுன்

னமே இந்த வளையும் உணர்த்திவிட்டது. அவரைச்

செல்லவொட்டாமல் தடுத்து, எனக்கு நல்லது

ஏதேனும் செய்தாயா? இல்லையே!

துறைவன் துறந்தமை தூற்றுகொல் முன்கை
யிறையிறவா நின்ற வளை.



—"ஆ! நமது தன்மையை அறிந்து நாயகரே இப்படி

செய்தால், நாம் செய்வது என்ன? நம்மைக் கூடி

யிருநதே அன்பில்லாமல் பிரிய . என்ணுகின்றூரே?

எண்ணுவதுமன்றி, நம்முன்னே நின்று பிரிகின்றே

னெனப் பேசுகின்றூரே! ஐயோ ! இத்தனை கொடி

யவர், பிரிந்து போனபோது, அன்புடையவர்

ஆவாரா? நமது ஆற்றுமையை அறிவாரா? நம்மை

நினைவாரா? நினைந்து வந்து நமககு இன்பம்

செய்

வாரென்று நாம் நம்பியிருக்கலாமா? அது
வீண்

ஆசை! அதைவிட வேண்டும்.
பிரிவுரைக்கும் வன்கண்ண ராயின் அரிதுஅவர்
நல்குவ ரென்னு ம் நசை.
(ககருரு) —"காதலரைப் பிரிவது மகளிருக்கு
இன்பமாகுமா?

இன்பமாகாதென்று அறியாத தோழியரும்
தோழி

யரா? அவ்வகைப்பட்ட தோழியரோடு
உறவில

லாத ஊரிலே வாழ்தல், ஆ! மகளிருக்கு
எத்தனை

கொடிது! இதுபோகட்டும். இதன்மேலும்,
இன்

னொரு கொடுமையும்—தமது காதலரைப்
பிரிவ

தாகிய கொடுமையும், உளதானல், ஐயோ !
அம்

மகளிர் இதை எப்படி தாங்குவார்? ஓ! இது
கொடி

துகொடிது!" (அழுகின்றாள்)

இன்னாது இனனில்லூர் வாழ்தல் அதனினும்
இன்னாது இனியார்ப் பிரிவு.
(ககருஅ) தோழி:—(தலைமகள் கண்ணைத்
துடைத்து) "அன்னாய்!

நீ இப்படி அழவேண்டாம். நீ அழுவதைப் பார்த்

தால், எனக்கு ஆற்றமுடிய இல்லையே! உன்
கண்க



ளைப் பார். ஐயோ! அதன் அழகெல்லாம் அழிந்து போயிற்றே."
த-ள்:—"ஏடி! அழியட்டும். விடு விடு. என்
காதலர் உள்ள நாட்டுக்கு என்னுடைய
மனமட்டும்சென்று விட்டதே ! அதைப்போல
இந்தக் கண்ணும் என் கடிதிற் செல்லக்கூடாது?

இதற்கு ஒரு உதவி வேண்டுமாம்-உடம்பைத் துணையாக நாடுகின்றது. உடம்பு நடந்து சென்றால், தாமும் அதனோடு சென்று காதலரைக் காணலாமென்று எண்ணுகின்றது! உடம்புதான் மெலிந்து கிடக்கிறதே. அது, காதலர் உள்ள நாட்டுக்குச் செல்ல முடியுமா? என் கண்ணும் அவரைக் காணமுடியுமா? முடியவே முடியாது. செல்லவும் காணவும் மாட்டாத என் கண்கள், தம்மிடத்தே உண்டான வெள்ளமாகிய நீரிலே நீந்தவேண்டும். வேறு வகை இல்லையே!

உள்ளம்போன்று உள்வழிச் செல்கிற்பின் வெள்ள
நீர் நீந்தல மன்னோவென் கண்.
(கக௭0)

---

## முதலாம் ஆண்டு

அற்பிரிவு—க. ஒதல்—உ

*களம்:—தலைமகன் இல்லத்தைச் சார்ந்த கானல்— காலம்:—வேனிலில் ஒரு காலை.*

*(கழிக்கரைச்சோலை.)*

*கூத்தர்:—தலைமகள், தோழி.*

*மணல் மேட்டின்மேலே, தலைமகள், ஒரு காலை நீட்டி மறறொரு காலை முடக்கிக்கொண்டு,*

கையைப் பின்னே ஊன்றி, உடல் சாய்ந்து உட்கார்ந்திருக்கின்றாள். அவள் தலைமயிர் அந்த இட துகைமேல் சரிந்து கிடக்கின்றது. அவள் அழுத கண்ணையும், அவிழ்ந்த மயிரையும், கழுவாத சேலையை யும், முழுகாத மேனியையும் பார்த்தபடியே வலப் புறத்தே தோழி உட்கார்ந்திருக்கின்றாள்.

தோழி:—(தலைமகள் துயரைக் காணமாட்டாமல்).

"தோழி! அடி! உன் கண்ணெலலாம் அழுது
அழுது கருகிவிட்டது; அழகு முழுவதும் அழிந்து
விட்டது. தோகாய்! இதன் பொருட்டாவது நீ
ஆற்றியிருக்க வேண்டும்!"

த-ள்:—(கண்ணைத் துடைத்துக்கொண்டு) "ஏடி! இந்த
ஆறாத நோயை நாம் அறிந்தது எப்படி? இந்தக் கண்களால் அல்லவா? இவை தானே

எனக்கு
முதல் முதல் காதலரைக் காட்டின. அவரைக்
கண்டதனல், அல்லவா இந்த நோயும் வந்தது?
அன்று எனக்குக் காட்டிய கண்களே, இன்று என்
னைக் காட்டச் சொல்லி அழுகின்றதே! இது என்ன
கருதி? இவை காட்டினல் நாம் காண்போம்; அது
வன்றி, இவற்றிற்கு நாம் காட்டுவது எப்படி?
கண்தாம் கலுழ்வதெவன் கொலோ தண்டாநோய்
தாங்காட்ட யாம்கண் டது.
(கஎக) —"மேலும், அன்று காதலரைப் பார்த்துப்பார்த்துப்
பூரித்ததே? அப்பொழுது 'நாம் இவரைப் பிரிய
வும் ஆகும். பிரிந்து, வருந்தவும் ஆகும்.' என்று
ஆராய்ந்து அறிந்ததா? அறியாமல் இருந்துவிட்டு,

இன்றைக்கு ஏனோ இவ்வளவு துன்பப்படுகின்றது? துன்பப்பட்டுப் பயன் யாது? 'இது நம்மால் வந்தது தானே' என்று எண்ணிப் பொறுக்க வேண்டாமா? பின்னே வரப்போவதை முன்னே அறிந்து காத்துக் கொள்ளாதவருக்கு அது வந்தபோது, பொறுத்துக்கொள்வதே கடமையாகும். என்னடி! இந்தக் கண்கள் அன்று காத்துக் கொள்ளவும் இல்லை. இன்று பொறுத்துக்கொள்ளவும் இல்லை. வீணாக அழுகின்றதே! இது மடச் செய்கை அல்லவா?

தெரிந்துணரா நோக்கிய உண்கண் பரிந்துணராப்
பைதல் உழப்ப தெவன்.
(கஎஉ)

—(சிரித்து) "ஆ! இந்த மடச் செய்கையைக் கண்ட
வர் நகைக்கமாட்டாரா? என்! வருமுன்னே காக்
கும் அறிவுடையார் யாரும் அவசியம் நகைப்பார்.
அன்று காதலரை விரைந்து விரைந்து

நோக்கிற்றே!

இன்று இருந்து இருந்து அழுகின்றது! எடி! இது

என்ன அறிவு? என்ன செய்கை?
கதுமெனத் தாம்நோக்கித் தாமே கலுழும்
இதுநகத் தக்க துடைத்து.
(கசஎஙு). —"தோழி! இது கண்டாயா? 'முற்பகல் செய்யின்

பிற்பகல விளையும்' என்பது இதோ உண்மையா

யிற்று! 'இவர் பிரிகின்றவர்; பின் கூடாதவர்:

இவரை இவளுக்குக் காட்டலாகாது' என்று இவர்

குணத்தை அறிந்து இவரை எனக்குக் காட்டாமல் அது

திருக்குறள் நாடகம்

அன்றே மறைத்திருந்தால், எங்கள் இருவருக்கும்

நண்புண்டாய் இருக்குமா? இன்று, அவர் பிரிவி

னால் பிழைக்கமாட்டாத நோயைப் பெற்றிருப்

பேளு? இந்த ஒழிவில்லாத நோயை எனக்கு உண்
டாக்கியதின் பலனைப் பார்த்தாயா? என் கண்கள்
அழவுமாட்டாமல் நீரும் வற்றிவிட்டன! எனக்குச்
செய்த துன்பம் வீண்போகுமா?
பெயலாற்ரு நீர்உலந்த உண்கண் உயலாற்ரு
உய்வில்நோ யென்கண் நிறுத்து
(கக௭௪) —"இன்னும் இதன் கொடுமையைக் கேளடி! முன்னே
காதலரை எனக்குக் காட்டிக் காட்டி இன்பம்
ஊட்டியது; பின்னே கடலைக் காட்டிலும் பெரி
தாகிய காமநோயையும் செய்தது. எனக்கு நோய்
செய்த பாவம் இதை விட்டுப் போகுமா? இதோ!
பார். அழுகின்ற துன் பத்தையும் அடைகின்றது!
துயிலவும் மாட்டாமல் கிடக்கின்றது!
படலாற்ரு பைதலுழக்கும் கடலாற்ருக்

காமநோய் செய்தஎன் கண்.
(கக௭ரு) —"ஏ! வினையே வினை!
(சிரித்துக்கொண்டே) இந்தக்
கண்கள் துயிலாமல் துன்பமடைகின்றது!
அழுது
அழுது அல்லற்படுகின்றது! ஓ! இது
படுகின்ற
பாடு எனக்கு மிகவும் இன்பஞ்
செய்கின்றது.
முன்னே எனக்குக் காமநோய்யைச் செய்ததே!
இப்
பொழுது தாமே நோயுற்று வருந்துகின்றது!
பார்!
இதன் வருத்தத்தைப் பார்க்கப் பார்க்க என்
வரு
த்தமும் ஒருவாறு தீர்கின்றது.



ஓஒ இனிதே எமக்கிந்நோய் செய்தகண்
தாம் இதற்பட் டது
(கக௭சு).

—"ஆனலும், தோழி! இந்தக் கண்களுக்கு இது
போதாது! இன்னும் படவேண்டும! அன்று காத
லரை எவ்வளவு விழைந்து விழைந்து பார்த்தது!
எவ்வளவு உள்ளம் நெகிழ்ந்து நெகிழ்ந்து பார்த்
தது! அவ்வளவுக்கு அவ்வளவும் இன்று இவை
துயிலும் விடவேண்டும்! அழுகையும் பெறவேண்
டும! இடைவிடாமல் துன்பப்படவேண்டும்! தம்
மிடத்தே உள்ள நீரெல்லாம் அறறே போகவேண்
டும்! அப்போதே என் மனம் மகிழும்!"

உழந்துழந் துள்நீர் அறுக விழைந்திழைந்து
வேண்டி அவர்க்கண்ட கண்.
(ககஎஎ)

தலைமகனைக் காணுதற்கு விரைந்து, இவ்வாறு
ஓயாமல் அழுது வருந்துகின்ற தலைமகளைப் பார்க்கப்

பொருத தோழி, அவள் அருகே சார்ந்து, முன்தானை
யால் முகம் துடைத்து ஆற்றுவிக்கின்றாள்.

தோழி.—"அன்னாய்! இப்படியும் அழலாமா? உன்
அழகெல்லாம் அழிந்தது; நாணமும் ஒழிந்தது.
நமது நாயகர் வந்து 'உன் அழகு எஙகே?' என்றால்
என்ன சொல்வாய்? நீ அழுதாயென்று கேள்வி யுற்று 'உன் நாணத்தை எங்கேவிட்டாய்?' என்றால்
என்ன சொல்வாய்? உன் அழகும் நாணும் அழி
யாதபடி நீ ஆற்றியிருக்க வேண்டும்! இப்படி——"

தலை:—(சிரித்து) "என்னடி! உனக்குத் தெரியாதா?
என்னைப் பிரிகின்ற நாளிலே, அவர் இந்தக்
காம

நோயை எனக்குக் கொடுத்துவிட்டு, சாயலைக்
கொண்டு போயினர். இன்னும் நாணத்தையும்
அவரே கொண்டு போயினர். அதற்கு மாருக
அவர் எனக்குக்கொடுத்தது எதுஎன்று தெரியுமா?
அடி! (உடம்பில் படர்ந்திருக்கிறபசலையைக்காட்டி)
இதுதான். ஆதலால், நாணமும் அழகும அவர்
திரும்பத்தந்தாலன்றி நம்மிடததே உண்டா? அப்
பொழுதே என்நோயும் பசலையும் ஒழியும்!''

சாயலும் நாணும் அவர்கொண்டார் கைம்மாரு
நோயும் பசலையும் தந்து. (ககஅரு)

தோழி:—"அது போகட்டும்! அவர் தெளிவித்த சொல்
லைத் தெரிவாயே. அவர் குணங்களையும் அறிவா
யே! நம்மிடம் நீங்காத அன்புள்ளவர்

நீட்டித்து

நிற்பாரா? விரைந்து திரும்பி வருவார். நீ அழு

கையை விடு."

த-ள்:—"ஆமாம். அவர் சொற் களையே யான் எப்போ

தும் மனத்தால் நினைக்கின்றேன். யான் வாயால்

உரைக்கின்றதும் அவர் குணங்களையே. இவை

யன்றி, எனக்கு வேறு துணை உண்டா? இப்படி

இருக்கின்றபோதே எப்படியோ, இந்தப் பாழும்

பசலை மெள்ள மெள்ள வந்து என் உடம்பெல்லாம்

படர்ந்து விட்டதே! இதன் கள்ளத்தை என்

னென்று சொல்வது? அடி!"

உள்ளுவன் மன்யான் உரைப்ப தவர்திறமால்
கள்ளம் பிறவோ பசப்பு.
(கக அ௪)

## முதலாம் ஆண்டு

### அறப்பிரிவு—க. ஓதல்—ரு

களம்:—தலைமகன் இல்லத்தைச் சார்ந்த கானல்.
காலம்:—வேனிலில் ஒரு மாலை.
கூத்தர்:—தலைமகள், தோழி.

தலைமகனை நெடுநாள் காணப் பெருமையால், தலைமகளுக்கு ஆற்றுமை அதிகரித்தது. அவ்வாற்றுமை காரணமாக அவள் மேனி எல்லாம் மாமை நிற மாறி, வெளுத்துப் பசலை பூத்தது. பசலையுற்றதனால் அவளுக்கு வேட்கை வளர்ந்தது. வளரவே, தன் மனத்துள்ளே அடக்கத் தக்கனவற்றையும், வேட்கை மிகுதியினாலே அடக்க மாட்டாமல் அவள் வாய்விட்டுப் புலம்புகின்றாள்.

தோ:—(தலைமகளைச்சார்ந்து வந்துகின்று)

"அன்னாய்!

உனக்கு அல்லும பகலும அழுகையே தொழிலா

யிற்று. நாணத்தையும் விட்டாயே!—நாணம் அழிக்

தால் நிறைஅழியும். நிறை அழிந்தால், நம் மனத்தி
லே கிடந்த மறைவான காரியங்களை மற்றவர் அறி
ந்துகொள்வார். ஆகையால், நாணும் நிறையும்
அழியாமல் நாம் ஆற்றவேண்டாமா?"

த-ள்:—"எடி! இனி, யான் ஆற்றுவது எப்படி? என
க்கு நாணமாகிய தாழும் இருந்து! நிறையாகிய கத
வும் இருந்தது! அதன் வலியை நீயும் அறிவாயே!
அந்தத் தாழையும் கதவையும் என் காம வேட்கை
யாகிய கூந்தாலி இன்று முறித்துவிட்டது. இனி

அவை நிற்பது எப்படி? யான் ஆற்றுதல்
ஆகாது.

காமக் கணிச்சி உடைக்கும் நிறையென்னும்
நாணுத்தாழ் வீழ்த்த கதவு.

(கஉருக) தோழி:—(நகைத்து) "என்னடி! உன் காமவேட்கை
கூந்தாலிபோல அத்தனை வலிதாகி விட்டதா?—
அது உன் நெஞ்சிலே பிறந்ததுதானே? அதை
அந்த நெஞ்சிலே அடக்க முடியாதா?"
த-ள்:—"அதை அடக்குவதா? என்றால் ஆகாது—
எல்லாரும் தொழில் ஒழிந்து உறங்குகின்ற நள்ளி
ரவிலுங்கூட அது என் நெஞ்சத்தை விடுகிறதில்லை;
வருத்தி வருத்தி வேலை வாங்குகின்றது.—என்
காதலரிடத்தில செல்லவிடுகின்றது! ஓ! காம
மென்பதற்குக் கண்ணோட்டம் உண்டா? அது
அடக்கப்படாது!"
காம மெனஒன்றோ கண்ணின்றுஎன்
நெஞ்சத்தை யாமத்தும் ஆளும் தொழில்.

(கஉ௬உ) தோழி:—(பின்னும் நகைத்து)
"அடக்கப்படாதா?
என்னடி! பெண்கள் யாரும் அதைப்
புறத்தே
காட்டாமல் மறைக்க இல்லையா?"

த-ள்:—"ஆமாம், மறைக்கின்றார்கள்.
யானும்மறைக்க
வே எண்ணுகின்றேன். ஆனல், என்ன
செய்வேன்?
என்னுள்ளே அது அடங்க இல்லையே;
தும்மல்
கிளைத்தால் அடக்கமுடியுமா? அதுபோல,
இது



அக
வும் அடக்க அடக்க, அடங்காமல்
வெளிப்பட்டே
விடுகின்றது. யான், மறைப்பது எப்படி?
'மறைப்பேன்மற் காமத்தை யானோ குறிப்பின்றித்
தும்மல்போற் றோன்றி விடும்.
(கஉ௬௩). —"முன்னெல்லாம் என்னை
'நிறையுடையேன்' என்று

எண்ணி யிருந்தேன். அந்த எண்ணம்
இன்று
வெளியாய் விட்டது! என் காமம்; யான்
மறைக்க
மறைக்க, மறைபடாமல்—எனக்கு
அடங்காமல்
—வெளிப்பட்டு விட்டது. பல்லோரும்
அறியலா
யிற்று. இப்பொழுதும் யான்
நிறையுடையேனா?'' நிறையுடையேன் என்பேன்மன்
யானோ என் காமம் மறைஇறந்து மன்று படும்.
(கஉருச) தோழி:—''கேளடி! இதற்குஒருவழி
சொல்லுகிறேன்.
நம்மை மறந்தவரை 'நாம்
மறந்துவிடவேண்டும்.
நாம மறந்துவிட்டால், நமக்கு இந்த
நோயும்
இராது. நிறையும் அழியாது. இதுவே
தக்கது.'' த-ள்:—(சிறிது நகை செய்து) "ஆமடி! நீ
சொல்வது
உண்மைதான். இன்பத்தோடு கழியும்
காலத்தைத்
துன்பத்தோடும் கழியும்படி
செய்தாரே.—நம்மை

அகன்று போனாரே!—அவரை நாம்
மனத்தால்
நினைத்தலாகுமா? நமது மனத்திலிருந்து
அகற்றி
விடவே வேண்டும். ஆனால்,
அப்படிப்பட்டமானம்
நமக்கும் உண்டா? இல்லையே!—அது நாம்
அறிவ
தொன்று அல்ல—காதல்நோய்
அடையாதவருக்கு
அது உண்டு.



செற்றார்பின் செல்லாப் பெருந்தகைமை
காமநோய்
உற்றார் அறிவதொன் றன்று.
(௧௨௫௫) —"சீச்சி! இந்தக் காதல் நோய்
நிரம்பக் கொடிது!
சாலக் கொடிது! 'இவளைப் பிரியலாகாது;
பிரி

வைப் பொறுக்கமாட்டாள்;
துன்பப்படுவாள்'
என்று சற்றேனும் எண்ணுமல் என்னைத்
துன்பத்
திலே விட்டுப் போனர். அப்படிப்பட்ட
கொடிய
வர் பின்னே என்னைப் 'போ, போ' எனத்
தூண்
டுகின்றதே—செல்ல வேண்டுகின்றதே. ஒ!
இதன்
கொடுமை சொல்லவும் முடியுமா? அலலது
கேட்க
வும் முடியுமா? பொல்லாதது!"
செற்றவர் பின்சேறல் வேண்டி யளித்தரோ
எற்றென்னை யுற்ற துயர்.
(௧௨௫௬)



முதலாம் ஆண்டு.
அறப்பிரிவு—௧ ஒதல்—௪
களம்:—தலைமகன் இலலத்தின்
புறங்கடைப்பொழில். காலம்:—கூதிரில் ஒரு காலை.
கூத்தர்:—தலைமகள், தோழி.
தலைமகன் இல்லத்தின்'பின்புறத்தே,

சுவரைச் சார்ந்து ஒரு திண்ணை கட்டி இருக்கின்றது. அந்தச் சுவரிடம் எல்லாம் பல கரிக்கோடுகள் கீறியுள்ளன. அவ்விடம் தலைமகள் நாள்தோறும் வந்து அந்தக் கரிக்கோடுகளைக் கணக்கிடுவது வழக்கம். அதுபோலவே இன்றும் அவள் அவ்விடம் வந்து நின்று, அக்



கோடுகளைத் திரும்பத் திரும்பக் கூட்டிக் கூட்டிப் பார்த்தாள். பிறகு மேடையின்மேல் வந்து உட்
கார்ந்து நாள்கள் பலவும் கழிந்ததை எண்ணி, தலை
மகளைக் காணுதற்கு உள்ளம் விரைகின்றதனால், அவள் கண்ணீர் சிந்தி அழுகின்றாள்.

த-ள் :—(சுவரை நோக்கி) "அவர் பிரிந்துபோன நாள்
கள் இதோ! சுவரில் இருக்கிறது! ஐயோ! எத்
தனை நாள்! இன்னும் எத்தனை நாளோ இதைத்
தொட்டுத் தொட்டு எண்ணிக்கிடப்பது!

இதுவரை
யும் எண்ணி எண்ணி, விரல்களும்
தேய்ந்தத்.
அவர் வரும் வழியைப் பார்த்துப் பார்த்துக்
கண்
ணிரண்டும் பூத்தும் போயிற்று.
இனிப்பார்க்கவும்
முடியாது! விரல் தேய்ந்தும் கண் பூத்தும்
பயன்
என்ன? அவர் மட்டும் வரக்காணேம்.
அவரைக்
காண இன்னும் எத்தனை நாள் ஆகுமோ?''
(அழுகின்ருள்)
வாள்அற்றுப் புற்கென்ற கண்ணும் அவர்சென்ற
நாள்ஒற்றித் தேய்ந்த விரல்
(கஉ௬௧) தோழி:—(தலைமகளுக்குப்பின்னே
மறைந்து கேட்டிரு
ந்தவள் முன்னே வந்து நின்று) ''அன்னய்!
அல்
லும் பகலும் அவரையே
நினைத்துக்கொண்டிருக்
கின்ருய், என்னடி? இப்படி இடைவிடாமல்
நினைக்

கின்றபடியால் உனக்கு ஆற்றாமை வளர்கின்றது;
அழுகின்றாய். தோழி! நீ சற்றே மறந்திருக்க
வேண்டும்......"



த-ள்:—(தன்னுள்ளே) "என் நோயை இவள் அறி
வாளா? அறிந்தால், இரங்குவாள்" (தோழியை
நோக்கி) "என் இலங்கிழையே! என்னை மறக்கவா
சொல்கின்றாய்? அதுவும், இந்நாளிலா?—இன்றை
யோ நாளையோ இறக்கப்போகின்ற இந்நாளிலா?
நன்றாய்ச் சொன்னாய்! இப்பொழுது யான் மறப்
பேனால், மறு பிறப்பிலும் இப்படியே—காதலர்

பிரிந்து, அழகும் அழிந்து, கலனும் கழி
ந்து—
துன்பப்பட வேண்டாமா? இறக்கின்ற
காலத்து
எண்ணம்போல மறுபிறப்பு வாய்க்குமே! இக்கா
லத்தில் இடைவிடாமல் அவரையே நினைந்திருந்
தால் மறுமையில் அவரை இடைவிடாமல் கூடி
யிருந்து இன்பம் அடையலாம்! ஆகையால், யான்
மறக்கமாட்டேன்.''

இலங்கிழாய் இன்று மறப்பின்என் தோள்மேல்
கலங்கழியும் காரிகை நீத்து.

கஉகூஉ) தோழி:—''நீ மறக்காவிட்டால், உயிர் அழிந்து
போகும்''

த-ள்:—(தலை அசைத்து) ''அழியாது அழியாது! அவர் வருவாரென்ற ஆசையால் இன்னும் சிலநாள

வாழும். ஆமாம்.—இதுவ்ரையும் நம்மைக் கூடி
வாழ்வதே அவருக்கு இன்பமாய்இருந்தது; நாமே.
துணையாய் இருந்தோ ம். இன்றோ, கல்வியிலே
ஆசை பிறந்தது; ஊக்கத்தையே துணையாகக்
கொண்டார். ஆகையால் நம்மை இகழ்ந்து போயி
னார். இது எவ்வளவு காலம் நிற்கும்? நம்மை



இகழ்ந்ததுபோலவே, கல்வியையும் ஊக்கத்தையும்
இகழ்ந்து, இன்னொருநாள், நம்மை நச்சி வாரரா?
அப்படி வருவாரென்னும் ஆசையாலேதான் யான்

உயிரோடு வாழ்கின்றேன். அந்த ஆசை இல்லை
யானால், இறந்து படுவேனே!"
உரன்நசைஇ உள்ளம் துணையாகச் சென்றார்
வரல்நசைஇ இன்னும் உளேன்.
(கஉகூரு)
தோழி: —"ஆ!"
த-ள்;—"ஆமாம், இன்னும் பாரடி!
முன்னெல்லாம்
இன்பத்தையேநோக்கி நம்மோடு
இசைந்திருந்தார்.
இன்று கல்வியை விரும்பிக் காதலை
வெறுத்தார்.
நம்மைப் பிரிந்தும் போயினார். நீங்கிய
காமம்,
நாளை அவரைக் கூடாதா ? அது கூடினால்
நம்மை
அவர் கூடாரா? கூடுவாரென்று நினைந்தே
என்
நெஞ்சு வருத்தம் ஒழிந்து வாழ்கின்றது.
அந்த
நினைவு இல்லையானால், நேற்றே
இறந்துபோயிருப்

பேன்!"
கூடிய காமம் பிரிந்தார் வரவுஉள்ளிக்
கோடுகொடு ஏறும் என் நெஞ்சு.
(கஉகூச) தோழி:—"அன்னாய்! அவர் வருவது
உண்மையென்று
அறிந்தும் நீ என் அழுகின்றாய்?
உடம்பெல்லாம்
தேமல் மூடிக் கொண்டது, பார்!"
தலைவி:—"எடி ! இந்தப் பசப்பு அவர்
வருவாரென்ற
எண்ணத்தினால் நீங்காது!
அவரை—என்காதலரை
—என் கண்ணார யான் காணவேண்டும் !
ஆமாம்



அதுவே எனக்குஆசை; என்
கண்ணாரக்கண்டபின்
இந்தப் பசப்பெல்லாம்—(தோளைச்
சுட்டிக்காட்டி)
தோளில் உள்ள
பசப்பெல்லாம்—தொலைந்தே

விடும்!
காண்கமன் கொண்கனைக் கண்ணாரக் கண்டபின்
நீங்கும்என் மென்றோள் பசப்பு.
(கஉகரு) —"இத்தனை நாளும் வாராத
கொழுநன் ஒருநாள்
என்னிடம் வரவேண்டும்! அப்பொழுது,
எனக்குத்
தொலையாத துயரத்தைச் செய்கின்ற இந்த
நோ
யெல்லாம் எங்கே நிற்கும்? இனி
வருவதாகிய
நோய்முழுதும் ஒருங்கே அழிய, வாயும்
மெய்யுமா
கிய வாயில்கள் ஐந்தாலும் அவ்வமுதத்தை
உண்
ணக்கடவேன்! ஆமடி! அதுவே எனக்கு ஆசை.
வருகமன் கொண்கன் ஒருநாள் பருகுவன்
பைதல்நோய் எல்லாம் கெட.
(கஉகசு) —"என் கண்ணாளர்—என் கண்போல்
சிறந்த கண்
ணாளர் வருவாரானால், புலக்கவும் புல்லவும்
கலக்

கவும் வேண்டுமென்று விரும்புகின்றேன்.
ஆனால்,
அவரை என் கண்முன்னே கண்டபோது,
'வரவு
நீட்டித்தீ'ரென்று புலந்துகொள்வேனோ?
அல்லது
சிலநேரம் பிணங்கியிருந்து பின்னே
புல்லிக்கொள்
வேனோ? அல்லது, கலந்தே ஒழிவேனோ?
யாது
செய்வேனோ? ஒன்றும் தெரிந்திலேன்."

புலப்பேன்கொல் புல்லுவேன் கொல்லோ
கலப்பேன்
கொல்,—கண் அன்ன கேளிர் வரின்.
(௧௨௬௭)

---



## முதலாம் ஆண்டு

### அறப்பிரிவு—௧. ஓதல்—௫

களம்:—தலைமகன் இல்லம்.

காலம்:—கூதிரில் ஒரு பகல்.

கூத்தர்:—தலைமகன, தலைமகள், தோழி.

பிரிந்துபோன தலைமகன்,தான்குறித்துச்
சென்ற
காரியங்கள் எல்லாம் குறைவற முடியப்
பெற்று,
தலைமகளை நினைந்து தரியாமை வளர்ந்து,
பரிந்த மனத்தோடு வந்து அவளைக் கூடினன்.
கூட, தலை
மகளது ஆற்றுமையையும் அழுகையையும்
தோழி
அவனுக்கு எடுத்துச் சொல்லினள். அவனும
தலை
மகள் உடல் மெலிந்தும் மேனி பசந்தும்
அழகுஅழிந்
தும் இருப்பதை நோக்கி அவளிடம் வேட்கை
மிகுந்
தான். அம்மிகுதியினல் அவளைப் பன்னும்
பாராட்
டத் தலைப்பட்டான். அதுகண்ட தலைமகள்
"என்னே
என்றும் இல்லாத தலையளியை என் காதலர்
இன்று
செய்கின்றார். இவர் எண்ணம் என்னவோ!

பின்னும்
ஒருமுறை பிரிவு நேருமோ? அன்றி வேறு
யாதா
மோ?" என்று எண்ணி அஞ்சினாள்.
அவ்வச்சத்
தைத் தலைமகன் அவள் குறிப்பால் அறிந்து
தெளி
விக்கின்றான்.
த-ன்:—(தலைமகளை நோக்கி) "மடவாய்! நீ
நாண
முடைய நல்லாள். அதனால்
அடக்குகின்றாய்.
எனக்குச் சொல்லாமலும் மறைக்கின்றாய்.
உன்
மையுண்ட கண்களும் அவ்வாறு
அடக்குமோ?
மறைக்க முடிக்குமோ? அது ஏதோ ஒரு
காரியத்



தைத் தெரிவிக்கின்றது? அது
தெரிவிக்கின்றதை
நீயே தெளிவாகச் சொல்லக்கூடாதா?

(பேசாமல்நாணத்தோடு தலை குனிகின்றாள்.) கரப்பினும் கைஇகந்து ஒல்லாநின் உண்கண்
உரைக்கல் உறுவதொன் றுண்டு.
(கஉஎக) —(தோழியை நோக்கி) "நங்காய்! உன் தோழி இவ
ளுக்குப் பெண்களுக்குரிய அழகும் குணமும்
அமைந்திருக்கின்றது. இவள், என் கண் நிறைந்த
அழகையும் உடையாள். வேய்போலும் தோளை
யும் உடையாள். பேதைமையும் உடையாள்.—
பெண்பாலாரிடம் நிறைந்துள்ள குணம் மடமையே
அல்லவோ? அதுமட்டும் இவளிடம் அளவுக்கு
மிஞ்சி மிகுந்திருப்பதைக் கண்டாயா?
கண்நிறைந்த காரிகைக்
காம்பேர்தோள்பேதைக்குப்
பெண்நிறைந்த நீர்மை பெரிது.

(கஉ எஉ) —"பளிங்குமணி கோத்த நூலைப் பார்த்திருக்கிறாயா?
நூலானது மணியினுள்ளே கிடந்தும் வெளியே
விளங்கும். நூல் வேறு, மணி வேறாயினும் ஒன்று
போலத் தோன்றும். அவ்வகையாகவே, இவளுக்
குக் கூட்டத்தினாலாகிய அழகும் உண்டு; அந்த
அழகினுள்ளே விளங்குகின்ற ஒருகுறிப்பும் உண்டு.
அந்த அழகும் குறிப்பும் உடன்பிறவாதிருந்தும்
உடன் பிறந்தது போலத் தோன்றும். அக்குறிப்
புக்கு யான் பொருள் தெரியேன். நீயே தெரிந்து
சொல்லவேண்டும்.



மணியில் திகழ்தரு நூல்போல் மடந்தை

அணியில் திகழ்வதொன் றுண்டு.
(கஉ௭௩) —"நங்காய் ! இன்னும் கேள்.
முகையினது முகிழ்ப்
பினுள்ளே உளதாகிய நாற்றம் புறத்தே தோன்
றுது. அவ்வாறே இவளிடத்தே உளதாகிய குறிப்
பும் இன்ப நகையின் முகிழ்ப்பினுள்ளே உள்ளது.
அது வெளியே விளங்கித் தோன்ற இல்லை. அது
யாது தெரியுமா?
முகைமொக்குள் உள்ளது நாற்றம்போல் பேதை
நகைமொக்குள உள்ள தொன றுண்டு.
(கஉ௭௪) —"உன் தோழி எனனிடம் இல்லாத ஒன்றை இருப்
பதாக எண்ணிக்கொண்டாள்—நான் பிரிவேன்
என்று எண்ணிஞள்—அதை மனததிலே வைத்து
என்னை இவ்வளவும் செய்தாள். அவள் மறைத்
தாலும் யான் அதை அறியேனே?—தானும் உடன்

போக எண்ணினுள்—அந்தக் குறிப்புக்கு ஒரு
பருந்தும் உண்டு. இனி யான் பிரியேனென்பதை
நீ அறிவாயே! ஆகையால் நீ அதை இவளுக்குத்
தெரிவித்து இவள் ஐயத்தைத் தெளிவிக்கவேண்
டும், அப்போது இவள் துயர் தீரும்!''
'செறிதொடி செய்திறந்த கள்ளம் உறுதுயர்
தீர்க்கும் மருந்தொன் றுடைத்து. (கஉஎரு)
இவ்வாறு தலைமகளது ஐயத்தைத் தோழியைக் கொண்டு தெளிவித்தான். தலைமகளும் நன்கு தெளிந்தாள். பின்னர் தலைவர் இருவரும் உடன் உறைந்து இல்லறம் நடத்துகின்றார்கள்.



## இரண்டாம் ஆண்டு

களம்:—தலைமகன் இல்லம்.
காலம்:— வேனிலில் ஒருபகல்.
கூத்தர்:—தலைமகள், தோழி.

தலைமகன் நாட்டிலே பகைவரும் புகுந்து பல துன்பம் செய்தனர், காட்டகத்து வாழும் உயிர்ச்சாதிகளும் ஒன்று பலவாகப் பல்கி ஒன்றை ஒன்று நலிந்து மக்களுக்கும் கேடு விளைத்தன. நாட்டிலே உள்ள எளியரும, கிழவரும், பிணி யாளரும், தமது குறையும்முறையும் கூறிக்கொள்ளத் தலை மகன் வரவுக்கு எதிர்பார்த்திருந்தனர். இதையெல்லாம் ஒற்றரால் உணர்ந்த தலைமகன், தலைமக ளைப் பிரிந்துபோய் நாடுகாக்க வேண்டுமென்று மனம் எழுந்தான். எழுந்தும், தன் பிரிவைத் தலைமகளுக் காவது தோழிக்காவது உணர்த்தினல், தனனை அவர் செல்லவொட்டார் என்று எண்ணி, அவருக்குச் சொல்லாமலே செல்லத் துணிந்தான். துணிந்தவன், தலைமகளுக்குத் தலையளியும் பாராட்டும் வழக்கம் போலச் செய்யாமல், புதிது புதிதாகச் செய்வானயி ஞன். அவள் உச்சியும் தோளும் தடவினன்; வளையும்

அணியும் திருத்தினன்; அவளை உற்றுநோக்கி, தன்னை அவள் காணமல் மறைத்துப் பெருமூச்சு எறிந்தான்; அவள் அழகையும் குணத்தையும் அளவின்றிப்புகழ்ந் தான். இவ்வாறு தலைமகன் செய்கை வேறுபட்டபடியால் 'பிரிவு நேரும்' என்று உணர்ந்த தலைமகள் தோழிக்குச் சொல்லுகின்றாள்.

# கள்ளரும்.

அறப்பிரிவு—உ. காவல்—க கூக

த-ள்:—"அடி! இவர் கூட்டத்திலே எனக்கு இன்பமே

இல்லை. அச்சமே நிறைந்துள்ளது. ஏனென்றால்,

இவர் நம்மைப் பிரியப்போகிறார். ஆம். முன்னே,

மாலையும் தலையும் ஏந்திக்கொண்டு நம்மிடம்

வருவாரே,—கூட்டத்தின் குறிப்பைக் காட்டியபடி

யால், அந்தப் பார்வை நமக்கு இன்பம் தந்தது!

இன்று, பிரிவின் குறிப்பைக் காட்டுகின்றபடியால்

இவர் நம்மைக் கூடியிருக்கும் கூட்டமும் துன்பம்

செய்கின்றது.”

இன்கண் உடைத்தவர் பார்வல் பிரிவஞ்சும்
புன்கண் உடைத்தால் புணர்வு.

(ககருஉ) தோழி:—“இவர் செய்கையில் பிரியும் குறிப்பு ஒன்றை

யும் காணேமே”

த-வி:—“காணேமா?—என்னைப் புகழ்கின்றார்; போற்

றுகின்றார்; பாராட்டுகின்றார். இதெல்லாம் உண்மை

தான். இதனலேயே 'நம்மிடம் அன்புடையவர்

இவர்' என்று நாம் நம்பமுடியுமா? —பிரியேனென்று நமக்குச் சொல்லியிருந்தார். பிரிந்

தால், நாம் பொறுக்கமாட்டோம் என்றும் தெரிந்

திருந்தார். எல்லாவற்றையும் மறந்து முன்னொரு

தரம் நம்மைப் பிரிந்துபோக இல்லையா? ஆகையால்

இவர் சொல்லையும் செய்கையையும் பார்த்து அன்

புடையவரென்று தெளியலாமா?''

அரிதரோ தேற்றம் அறிவுடையார் கண்ணும்
பிரிவோர் இடத்துண்மை யான்.
(கக௫௫)



தோழி:—''இவர் சொல்லை நம்பியது நம்முடைய குற்

றம். இனி—"
த-ள்:—"நம்முடைய குற்றமா அது?—என்னை முதல்
முதல் எதிர்ப்பட்ட போது, 'உன்னை ஒருகாலும்
பிரியேன்; நீ சற்றும் அஞ்சாதே' என்று பலவித
மாகப் பாராட்டிப் பேசினர். பின்னும், சொன்ன
சொல்லைத் தாமே மறந்து பிரிந்து போயினர்.
சொல் ஒன்றும், செய்கை வேறுமாக இவர் நடந்
தது என்னுடைய குற்றமா? இவர் உரைத்த
சொல்லை உண்மையென்று தெளிந்திருந்தேன்.
அதுவும் குற்றமாகுமோ?"

அளித்தஞ்சல் என்றவர் நீப்பின் தெளித்த சொல்
தேறியார்க் குண்டோ தவறு.
(கஃகுல) தோழி:—"இல்லையா?"
த-ள்:—"அப்படியே இருக்கட்டும். அதைப்பற்றி

என்ன? எனக்கு ஒரு உதவி செய்வாயா? ஏடி! என்
உயிரைச்செல்லாமல் காக்க வேண்டுமானால் அந்த
உயிரை ஆளுதற்கு அமைந்தவரையும் என்னைவிட்டு
நீங்காமல் நிறுத்திவிடு. இதுவே நீ செய்ய வேண்
டியது. என் உயிரை ஆளுதற்கு அமைந்தவர்
யாரென்று உனக்குத் தெரியுமோ! இவர் நம்மைப்
பிரிந்துபோகவே எண்ணி இருக்கிறார். தம்மைத்
தடுப்பார் ஒருவரும் இல்லாமல் இவர் என்னை நீங்
கிப் போவாரானால், இவரால் ஆளப்பட்ட என்
உயிரும் நீங்கிப்போகும். நீங்கிப்போனால் பின்பு,

அறப்பிரிவு—உ. காவல்—உ

இவரைக் கூடுதல் எனக்கு அரிதாகும். ஆகை

யால், தோழி! இவர் நீங்காமல் நிறுத்துவாயா?'
ஓம்பின் அமைந்தார் பிரிவோம்பல் மற்றவர் நீங்கின்
அரிதால் புணர்வு. (கசரு,ரு)

—தோழி பெயர்கின்றாள்.

---

## இரண்டாம் ஆண்டு.

### அறப்பிரிவு—உ. காவல்—உ

களம்:—தலைமகன் இல்லத்தைச்சார்ந்த ஒருபொழில். காலம்:—வேனிலில் ஒரு பகல். கூத்தர்:—தலைமகள், தோழி.

தலைமகனைப் பிரிந்து செல்லாமல் தடுப்பதற் காகத் தோழி சென்றாள். சென்று, அவனைக் காணு முன்னமே அவன் பிரிந்து போயினன். அவன் பிரிவை ஆற்றமாட்டாத தலைமகள் அதிகமாக வருந் தியிருந்தாள்......ஒரு நாள் அவள், அவனோடு பல நாளும் திரிந்து பழகிய இடத்திலே வந்து உட்கார்ந் தாள். அப்பொழுது அவளுக்குப் பழய நினைவெல் லாம் வந்தது. வரவே, தன் கன்னத்திலே கையை ஊன்றிக்கொண்டு மனம்கலங்கி அழுகின்றாள்

தோழி அவள் அருகே சென்று நின்று
ஆற்றுவிக்கின்ருள். தோழி:—"காதலர் நம்மைப்
பிரிந்து போக இல்லை.
தோழி! நீ என் இப்படி வருந்துகின்ருய்?
இன்னும்
அவர் நமது நாட்டிலேயே இருக்கின்ருர்.
இன்



றையே நம்மிடம் வருவார். அவர் வரு
ம்வரை
யும் நீ ஆற்றவேண்டாமா?"
த-ள்:—"அவர்—நம்மை நெஞ்சால் விழைந்த
காதலர்
முன்னமே பிரிந்துபோயினர். அதை நான்
அறி
யேனு? நீ என் மறைக்கின்ருய்? ஆனல் அவர்
எனக்
குச் சொன்ன சொல்லெல்லாம் இவ்விடத்தே
(மார்
பிலே கையை வைத்து) உள்ளது! என்னை

விட்டுப்
பிரியவே இல்லை. அது பிரியாமல் இருந்தும் பயன்
என்ன?
என்னை மட்டுமே அது ஆறுவிக்கின்றது.—
ஆம்! நான் ஆற்றியே
இருக்கின்றேன்—இந்தக்
கண்களை அந்தச் சொல் ஆற்றுவிக்க முடிய இல்லை
யே; இவை—என் கண்கள்—அவரையே காண
விரும்புகின்றதே! என்ன செய்வேன்? அடி!"
'பேறுது பெட்டார் உளர்மன்னே மற்றவர்க்
காணு தமைவில கண்.
(கககஅ)
இவ்வாறு வருந்தக் கேட்ட தோழி,
"ஐயோ! இவள் ஆற்றமுடியாமல்
அல்லற்படுகின்றாள்! பாவம்!" என்று தலைமகளைப்
பெரிதும் பரிவோடு பார்த்துக் கொண்டு
நிற்கின்றாள்.
த-ள்:—(தோழி கவலையைக் கண்டு) "எடி! நீ
எனக்
காகக் கவலைப்பட வேண்டாம். என்

பசலையைப்
பார்த்து, "இவள் ஆற்றமாட்டாள்' என்று
என்
ஞதே! நான் ஆற்றியே இருக்கின்றேன்.
ஆயினும்,
இந்தப் பசலைமட்டும் என்மேனியை
மேல்கொண்டு
செலுத்துகின்றது. அது என் தெரியுமா?
'என்னை





உண்டாக்கினவர் அவர்' என்னும்
உரிமையினால்
ஊர்கின்றது. இதன் செருக்குக்கு
என்ன செய்
வேன்?"
அவர் தந்தார் என்னும் தகையால்
இவர் தந்தென்
மேனிமேல் ஊரும் பசப்பு.

(கக அஉ)

தோழி:—"அன்னாய்! அவர் இன்னும் இந்த நாட்டை
விட்டுப் போக இல்லை. நம்மைப் பிரிந்து அணி
மையிலே இருக்கின்றார்; இருந்தும் நீ ஆற்ற இல்
லையே. பசலை படர்கின்றதை——"

தலைவி:—"ஆ! இந்தப் பசலையா? 'அவர் போனார்' என்
றால், 'இதோ! வந்தேன்' என்னுமே! பகல் கழியும்
போதே இரவும், இரவு கழியும்போதே பகலும்
தொடர்ந்து வர இல்லையா? அதுபோல் அல்லவோ
என் பசலை? அவர் அங்கே அகலுகின்றார் என்றால
இது என் மேனி முழுதும் மூடிக்கொள்ளுமே! இதன் குணம் உனக்குத தெரியாதா?"

உவக்காண்எம் காதலர் செல்வார்
இவக்காண்என்
மேனி பசப்பூர் வது.
(ககஅரு)
—"முன்பு—கொழுநர் இருந்த
காலத்தும்—அவர் என்னை முயங்கா
மல் சற்றே விலகினவுடன் இது
என்னை நெருங்கிவிடும். அவர்
பிரிந்துள்ள இந்தக்
காலத்தில இதன் கொடுமையைக்
கேட்க வேண்
டுமா? 'விளக்கு மெலியுமா,
மெலியுமா?' என்று
பார்த்திருந்து சமயம் வந்ததும்
கவிழ்ந்துகொள்
கிறதே, அந்த இருளும் இந்தப்
பசலையும் ஒன்று



தானே? இதன் குணமும் அதன

குணமும்
  வேறில்லே.
விளக்கற்றம் பார்க்கும் இருளேபோல் கொண்கன்
முயக்கற்றம் பார்க்கும பசப்பு.
(ககஅசு) — "கேளடி! முன்ஞெரு நாள் காதலரை நெடுநேரம்
  புல்லிக்கிடந்தேன். பின்பு, என்னையும் அறியா
  மலே சற்றே விலகினேன், ஆ! விலகின நேரத்திலே
  இது என் மேனி முழுதும அப்படியே கப்பிக்
  கொண்டது. எவ்வளவு தெரியுமா? அள்ளிக்கொள்
  ளலாம்! அவ்வளவு நெருங்கியிருந்தது. விலகின
  மட்டிலே அப்படி ஆயிற்றே! அவரை விட்டுப்
  பிரிந்த இப்பொழுது சொல்லவேண்டுமா?"
புல்லிக் கிடந்தேன் புடை பெயர்ந்தேன்
அவ்வளவில் அள்ளிக்கொள் வற்றே பசப்பு.
(ககஅஎ).

---

# இரண்டாம் ஆண்டு

அறப்பிரிவு—உ. காவல்—ந

களம:— தலைமகன் இல்லத்தைச் சார்ந்த ஒருகானல். காலம்:—வேனிலில் ஒருமாலை.
கூத்தர்:— தலைமகள், தோழி.

தன்னுடைய நாட்டைக் காவல் செய்தல் காரண மாகத தலைமகன் பிரிந்தான்; ஆகையால், தான் மேற்கொண்ட காரியத்தை முடிக்கும் வரையும், அவன் மனம அதனிடத்தே சென்றது. செல்லவே, தலைமக

அறப்பிரிவு—உ. காவல்—ந

கஎ

ளைப் பிரிந்து தனிமைபபட்டும், அவன் கவலையின்றி இருந்தான். தலைமகளோ, அப்படியின்றி அவன் பிரிவையே பலகாலும் எண்ணி எண்ணி ஏங்கினள். ஆகையால, மேனி எல்லாம் பசலை ஆகி, நெஞ்சம் எல்லாம் புண்ணாயினள்.........ஒரு நாள், தனிமையாயிருக்கின்ற துன்பம் தனக்கு மிகுந்திருப்பதை நினைந்துகொண்டு மணல மேட்டில் உட்கார்ந்திருக்கின்றாள். தோழி, அவள் துயரத்தை ஒழிக்கும்படி சிலவற்றைச்

சொல்லுகின்றாள்.

தோழி:—"அன்னாய்! அங்கே நமது காதலர் எப்படி
இருக்கின்றாரோ?—உன்னைக் காட்டிலும் அதிக
மாக வருந்திக்கொண்டே இருப்பார். ஆம்! உன்
னைக் காதலித்த அவருக்கு உன் பிரிவு பொறுக்க
முடியுமா? நாளையே உன்னிடம் வருவார். அப்
பொழுது அவரோடு இருந்து நீ பேரின்பம் உண்
ணுவாய்!"

த-ள்:—(தலையை நிமிர்த்தித் தோழியை நோக்கி)
"பேரின்பமா? எடி! அந்தக்கனி நமக்கும் கிடைக்கு
மா? மணாளரை மகளிர் விழைய வேண்டும். விழை
யப்பட்ட மணாளரும் மகளிரை விழைய வேண்டும்.
இப்படி விழைவதற்கு, முன்னே செய்த நல்வினை

யும் இருக்கவேண்டும். நல்வினையும் இருந்து ஒரு
வரை ஒருவர் விழையவும் பெற்ற காதலருக்கே
அந்த இன்பக்கனி எளிதிலே உண்ண முடியும்.
நாமோ காதலர் பிரிந்தும், பின்கூடப் பெறுதும
இருக்கின்றோம். நமக்கும் அது தடையின்றிக்
கிடைக்குமா?

7



தாம்வீழ்வார் தம்வீழப் பெறறவா பெற்றரே
காமத்துக் காழ்இல் கனி.

(ககஅக) —"மணாளரை இனறி வாழாத மகளிருக்கு, அம்மக
ளிரை இன்றி வாழாத மணாளர், அறம் நோக்கிப்
பிரிந்தாலும் அளவறிந்து வந்து அன்பு செய்வார்.
அந்த அன்புதான் நீ சொல்லும

இன்பமாகும்!
அந்த இன்பமே, வானத்தையே வாழும் உயிருக்கு
அவ்வானம் அளவறிந்து மழை பெய்வது
போலாம்!நம்மைக்காதலர் விழையவும்இல்லை; அன்
பும் இல்லை; இன்பமும் இல்லை. மழை வறந்து
வாடும் பயிரானோம்!
வாழ்வார்க்கு வானம் பயந்தற்றால் வீழ்வாரக்கு
வீழ்வார் அளிக்கும் அளி.
(கககூஉ) —"ஆ ! நமக்கும் இன்பமா? தாம் காதலித்த கணவ
ரால் காதலிக்கப்பட்ட மகளிர்க்கே அது உண்டு.
அவரே, காதலர் பிரிந்தாலும் 'நம்மை நினைந்து
நாளையே வருவார்; வந்தால் நாம் இனபம் உண்டு
வாழலாம்' என்று செருக்கியிருப்பார். அநதச்
செருக்கும் அவருக்கே செல்லும்! நமக்கு ஏது?—
காதலரால் காதலிக்கப்படாத நமக்கு ஏது?

நமக்கு
உள்ளது இறந்துபாடு தானே?
வீழுநர் வீழப் படுவார்க் கமையுமே
வாழுநம என்னும் செருக்கு.
(கககரு) —"தோழி! இதோ பார்த்தாயா? என்ன புதுமை?
எனக்குத் தும்மல் வருவதுபோல இருந்தது;

அறப்பிரிவு—உ. காவல்—ரு

கூகூ

வராமலே அடங்கி விட்டதே! ஆ! அவர் என்னை
நினைப்பதுபோல நினைந்து உடனே நினையாமலே
ஒழிந்தாரோ? அல்லாவிட்டால் எனக்குத் தும்மல்
அரும்பியிருக்குமா? தூரத்தில் உறவினர் யாரா
வது நினையாமலும் தும்மல் தோன்றுமா?
நினைப்பவர் போன்று நினையார்கொல் தும்மல்
சினைப்பது போன்று கெடும்.
(கஉ0ரு) —"அடி! என்னுடைய நெஞ்சத்திலே அவர் எப்போ

தம்—அல்லும் பகலும் அறுபது நாழிகையும்—
குடிகொண்டிருக்கின்றாரே!
இப்படியே அவருடைய
நெஞ்சத்திலே
நாமும் குடிகொண்டிருக்கிறோமா?
இருப்போமானால் அவர் நம்மை நினைத்து என்
வர இல்லை? ஒருகால் அவர் எடுத்துப்போன காரி
யம் இன்னும் முடியாமல்
இருக்கலாம்.—என்!
அது! முடிந்தும், அவர் நெஞ்சத்திலே நாம் இல்லை
யானால் எப்படி வருவார்?
யாமும் உளேம்கொல்அவர்நெஞ்சத்து
எம்நெஞ்சத்து ஓஒ உளரே அவர்.
(கஉ0ச)—''தோழி! இது என்ன நாணமற்ற செய்கை! தம்
முடைய நெஞ்சத்திலே நாம் செல்லாமலும் தங்கா
மலும் செய்து கொண்டாரே, அப்படி நம்மைத தடு
த்துக்கொண்டவர் நம்முடைய நெஞ்சிலே

மட்டும்
நீங்காமல் வரலாமா? ஒருவரை நம்மிடம் வரவொட்
டோமாம் ; அவரிடம் நாம் மட்டும் அடுததடுத்துச்
செல்வோமாம், நன்றாய் இல்லையா இநதச் செய்கை?
அவருககு நாணமென்பது இல்லையா?



தம்நெஞ்சத் தெம்மைக் கடிகொண்டார் நாணார்கொல்
எம்நெஞசத்து ஓவா வரல்.
(௧உ௦ரு)

இரண்டாம் ஆண்டு
அறப்பிரிவு—உ, காவல்—௪
களம்:—தலைமகன் இல்லத்தைச் சார்ந்த ஒரு கானல். காலம்:—வேனிலில் ஒரு பகல்.
கூத்தர்:—தலைமகள்.
தலைமகனுடைய பிரிவைபபற்றியும் தன்னுடைய தனிமையைப் பற்றியும் பலநாளும்

வருத்தப்பட்ட தலைமகள், முன் அவனோடு கூடியிருந்த காலத்தில் தான் உண்ட இன்பத்தை எல்லாம் நினைநது கொண் டே ஓர் இரவு முழுவதும் உறங்காளாயினுள். அவ்வாறு புலம்பியவளுக்கு ஆற்ருமையே வளர்ந்தது ; பற்றுக்கோடு ஒன்றும் உற்றதில்லை. பின்பு விடியல் வந்தது. தான் உண்ட இன்பத்தை எல்லாம உடன் இருந்து உண்டது நெஞ்சமே ஆகையால், அந்த நெஞ் சத்தையே தனக்குப பற்றுக் கோடாகக் கண்டாள். கண்டு, அதனுடன் சில சொல்லுகின்ருள்.

த-ள்:—“என் நெஞ்சே!—பாழும் நெஞ்சே! அவரி
டம் நீ செல்லவும் மாட்டாய் அவர் நம்மேல்
அன்பிலர் என்று அறியவும் மாட்டா
ய்.—நம்மேல்
அன்புடையராளுல், நம்மை நினைவாரே! நினையாத
படியால் அன்பிலர் என்று அறியவேண்டாமா
?
‘வருவார், வருவார்’ என்று வழிபார்த்து வருந்து

இன்றாயே! இது உனக்கு என்ன மடமை?



காதல் அவர்இலர் ஆகநீ நோவது
பேதைமை வாழிஎன் நெஞ்சு.
(கஉசஉ)

—"நெஞ்சே! நீ என் வருந்துகின்றாய்? நம்மைப் பிரிந்
துபோனார்; துன்பமும் செய்தார்; அவர் நம்மிடம்
அன்புடையரா? நமக்கு இரங்கித் தாமாக வரு
வாரா? அது இல்லை. நீயே அவரிடம் செல்லவா
வது வேண்டும் அல்லது இங்கே இறந்துபடவாவது
வேண்டும். இரண்டும் செய்யாமல நீ வீணே வருந
துகின்றதனல் பயன் என்ன?

இருந்துள்ளி என்பரிதல் நெஞ்சே பரிந்துள்ளல்
பைதல்நோய் செய்தார் கண்இல்.
(கஉ௪௫) —"நெஞ்சே! நீ அவரிடம்
செல்லும்போது இந்தக்
கண்களையும் அழைத்துக்கொண்டு போ.
இப்பொ
ழுதே, இவை அவரைக் காண விரைகின்றது.
'நீ
காட்டு, காட்டு' என்று என்னை
நலிகின்றது.
இவற்றை இங்கே விட்டு நீ மட்டும்
செல்வாயானல்
ஆ! அ வரை க் காணவேண்டி எ ன்னைத்
தின்று
விடும்.

கண்ணும் கொளச்சேறி நெஞ்சே இவைஎன்னைத்
தின்னும் அவர்க்காணல் உற்று.
(கஉ௪௪) —"நெஞ்சே! நாம் அவரிடம்
செல்லவேண்டும். ஆம்!
அதுவே நமக்குத் தகும்.—நா ம் அவரை
விழை

கின்றோம்; நம்மை அவர் விழைவதில்லை. ஆயினும்,
அவரை
'வெறுத்தா'ரென்றுகருதிப்பிணங்கலாமா?
பிணங்கிக், கைவிடலாமா? கைவிட்டிருக்கும்


யும் நமக்கு உண்டா? இல்லையே. ஆகையால் நாம்
அவரிடம் செல்லவே தகும்!
செற்றார்எனக் கைவிடல் உண்டோ நெஞ்சேயாம்
உற்றால உறு தவர்.
(கஉசரு) —(தலைமகன் கொடுமையை நினைந்து, அவனிடம்
செல்லுதற்கு உடன்படாத நெஞ்சை நோக்கி)
"என் நெஞ்சே! அவரை நீ ஏன் பொய்யாகக் காய்
கின்றாய்?—நிலையின்றி வெறுக்கின்றாய் ? இந்த
வெறுப்பினால் உனக்கு என்ன வரும்?—சிலவேளை
அவரோடு நான் பிணங்கிக்கொள்வேன்.

அப
போதே அவர் கலவியின்பத்தைக் காட்டி, அதனுல்
மயக்கி, என் புலவிக் குறிப்பினை ஒழிப்பார். அவ்
வளவு வல்லவரிடத்தே நீ என்ன செய்யமுடியும்?
அவரை நீ நேரிலே கண்டுவிட்டால், பொய்யாக
வாவது ஒருதரம் புலக்கவும் மாட்டாய்! அதுமாட்
டாத நீ, அவரைக் காணுதபோது, 'கொடியவர்'
என்று ஏன் வெறுக்கின்ருய்? இந்த வெறுப்பினுல்
பயன் இல்லை. அவரிடம் செல்லவே துணி.

கலந்துணர்த்தும் காதலர்க் கண்டால்
புலந்துணராய் பொய்க்காய்வு காய்திஎன நெஞ்சு. (கஉசக)

—(தலைமகனிடம் செல்ல வொட்டாதபடி தன்னை
நாணம் தடுக்கின்றபடியால்) "நல்ல நெஞ்சே!
உனக்கு நாணமும் உண்டு; அவர்மேல் வேட்கை

யும் உண்டு. இவை இரண்டும் என்
பெண்மையை
நிலைபெறுத்தும் நல்லனவே! ஆயினும்
ஒன்றுக்கு
ஒன்று பகையானது. இவற்றை நீ
தாங்கினாலும் அறப் பிரிவு—உ.
காவல்—சு ௧௦௬
நான் தாங்கமுடியாது. நாணத்தை
விடமாட்டா
யானால் வேட்கையை விடு; வேட்கையை
விடமாட்
டாயானால், நாணத்தை விடு.
இரண்டையும்
பொறுக்க எனக்கு ஆகாது.

காமம் விடுஒன்றோ நாண்விடு நல்நெஞ்சே
யானோ பொறேன்இவ் இரண்டு.
(௧௨௪௭)

—"நெஞ்சே! நீ வெறும் பேதை! உனக்கு
ஒன்றும்
தெரியாது! 'அவர் இவ்வாற்றாமையை
அறியார்;
அறியாமையால் நொந்து வந்து

பாராட்டாமல்

போனயிர்; அவருக்கு அறிவிக்க வேண்டும்’என்று

எண்ணி, நம்மைப் பிரிந்துபோனவர் பின்னே

ஏங்கிச செல்கின்றாயே! இது என்ன அறிவு? நம்

முடைய ஆற்றாமையை அவர் கண்ணாரக கண்டும்

இரக்கப்படாமல் பிரிந்து போயினர்; நீ சொல்

லக்கேட்ட அளவிலே இரக்கப்பட்டுத் திரும்பி

வந்துவிடுவாரோ?

பரிந்துஅவர் நல்கார்என் றேங்கிப் பிரிந்தவர்
பின்செல்வாய் பேதைஎன் நெஞ்சு
(கஉசஅ)

—“என் நெஞ்சே! இது என்ன வியப்பு? காதலர்

உன்னுள்ளே இருக்கின்றார். முன்னெல்லாம்

நீயும் அறிவாய். அறிந்திருந்தும்,

இப்பொழுது
புறத்திலே தேடித்திரிகின்றாயே. யாரிடத்தே செல்
கின்றாய்? இது எனக்குச் சிரிப்பாயிருக்கின்றது.

உள்ளத்தார் காத லவர்ஆக உள்ளிநீ
யாருழைச் சேறிஎன் நெஞ்சு.

(கஉசகூ) கoச திருக்குறள் நாடகம்

—"அவரோ நம்மைக் கூடாதபடி துறந்து போயி
னார். நாமோ அவரை மறக்கமாட்டாமல் மனத்
திலே வைத்திருக்கின்றோம். இதனாலே நாம் பெறு
வது என்ன? முன்னமே மாமை முதலிய மேனி
அழகெல்லாம் அழிந்தோம். இப்பொழுது உள்
ளத்திலே மிகுந்து கிடக்கின்ற நிறை முதலிய அழ

கையும் இழப்போம். ஆகையா ல், என நெஞ்சே!

அவரை மறந்து ஆற்றியிருக்கவேண்டும். அப்படி

இருந்தாலே நாம் உயிர் வாழலாம."

துன்னத் துறந்தாரை நெஞ்சத்து உடையேமா
இன்னும் இழத்தும் கவின்.
(கஉ௫0)

---

## மூன்றும் ஆண்டு

அறப்பிரிவு—ரு. பகைதணி வினை (அல்லது) தூது—க

களம்:—தலைமகன இல்லம்.
காலம்:—காரில் ஒரு பகல்.
கூத்தர்:—தலைமகன், தோழி, தலைமகள்.

தலைமகனுக்கு நண்பராகிய வேந்தர் இருவர், ஒருவரை ஒருவர் பகைத்து, போர் புரிவதற்கு நாள் கோலி இருந்தனர். அதை அறிந்த தலைமகன் 'ஐயோ! இவ்விருவரும் சண்டைசெய்யத் தொடங் கினல் எத்தனை உயிர்ச்சாதி சாகும்! எத்தனை ஆள் அழிவர்! இவ்வகைக்கேடு வராதபடி நான் தடுப்பேன்! என்நண்பரை நான் நேரேநின்று

இரந்து கேட்டுக் கொண்டால், தமது பகை ஒழிந்து உறவாக



மாட்டாரோ?' என்று ஆராய்ந்து, அவ்வரசர் பகையைத் தணிப்பதற்காக, தலைமகளைப் பிரிந்துபோகத் துணிந்திருந்தான். அதனை அவன் குளிர்ந்த சொல்லாலும் பணிந்த செயலாலும் கண்டறிந்த தலைமகள் துன்பம அடைந்து மனம் கலங்கினாள். அக்கலக்கத்தைக் கண்ட தலைமகன், தான் பிரியும குறிப்பினன் அலலன் என்று தலைமகளுக்கு உணர்த்தித் தெளிவிக்கும்படி தோழியை அனுப்புகின்றான்.

த-ள்:—(தன்னிடம் வந்து நின்ற தோழியை நோக்கி)

" ஏடீ! என் கண் துடைக்க வந்தாயா, அல்லது
முகம் துடைக்கவா?— 'காதலர் வந்து சேர்ந்தார்;
நம்மைத் தேற்றிக் கலந்தும் இருக்கின்றார். இனி
துன்பம் எது? மகிழ்ந்தே இருக்கலா ம'

என்று
எண்ணுகின்றாய். இவர் கூட்டத்திலே உள்ளது
யாதென்று நீ தெரிய இல்லையே? நான் சொல்லட்
டுமா? இன்னொரு முறை இவர் பிரிவார்; அதனால்
நாம் துன்பம் அடைவோம்; அதை அரிதாக ஆற்
றியும் இருப்போம். இவர் அன்பில்லாமையை நினை
வோம்—இவ்வளவையும் இவர் கூடியிருக்கின்ற
கூட்டமே தெரிவிக்கின்றதே! இவர் நம்மை ஆற்
றியும் போற்றியும் செய்கின்ற அன்பெல்லாம்
முடிவிலே கொடுமையே விளக்கும். இவர் காட்
டுகின்ற அன்பு பிரிவதற்கே அடையாளம் அல்
லவா ?

பெரிதாற்றிப் பெட்பக் கலத்தல் அரிதாற்றி
அன்பின்மை சூழ்வ துடைத்து
(கஉளகூ)



—" அம்மா! இவை—என்
வளையல்கள்—எவ்வளவு
உணாவுடையது கண்டாயா? அடி! நமது
காதலர்
பிரிந்ததை—நம்மை உடம்பால் கூடியிருந்தே
உள்
ளத்தால் பிரிந்ததை-நமக்கு
முன்னே தெரிந்துகொ
ண்டதே!—இவர் பிரிய எண்ணினார்; அதைக்
குறிப்
பால் அறிநதேன்; நான் தெளிவாக
உணர்வதற்கு
முன்னமே என்தோள் மெலிந்தது; உடனே
வளை
யும கழன்றது! இதோ! கண்டாயா?
தண்ணம் துறைவன் தணந்தமை நம்மினும்
முன்னம் உணர்ந்த வளை.

(கஉளஎ) —“ எடி! நேற்றே என் காதலர் பிரிந்து போயி
னார் ஆம். நேற்றுத்தான். ஆனால். அந்தப்
பிரிவுக்கு என் மேனி பசந்து எத்தனை நாள்
ஆயிற்று தெரியுமா? எழுநாள்!—எழு நாளைக்கு
முனனே இவர் அன்பிலே எனக்கு ஐ பம் தட்டி
யது! அப்பொழுதே என் மேனி பசந்தது. அன்று
முதல் நேற்றுவரை ஐயத்திலே இருந்தேன். இவர்
பிரியக் கருதியிருப்பதை நேற்றே நான் துணிந்
தேன். ஆகையால், இவர் நேற்றுப் பிரிந்த பிரி
வுக்கு எழுநாளைக்கு முன்னே என் மேனி பசந்
தது; இல்லையா?”
நெருநற்றுச் சென்றார்எம் காதலர் யாமும்
எழுநாளேம் மேனி பசந்து.

(கஉஎஅ)
தலைமகனுடைய பிரிதற் குறிப்பைத் தலைமகள் நன்றாக அறிந்திருக்கின்றாளென்று தெரிந்துகொண்ட



தோழி அவனிடம் திரும்பிச்சென்று, அவனைத் தனிமையில் கண்டு சொல்லுகின்றாள்.

தோழி:—"மன்னவ! நீர சொல்லியபடியே என் தோழி
யிடம் சென்று அவள் கலக்கத்தை ஒழிக்கப் பல
விதம் பேசினேன். என் பேச்சை அவள் கேட்க
வே இல்லை. ஆனல், ஒரு குறிப்பு செய்தாள் —
தன் னு டைய தொடியையும் தோளையும் அடியை
யும் நோக்கினள்—கண்டீரா? 'வளை யலே! அவர்
பிரிய நான மட்டும் இவ்விடமே இருப்பேனனல்

நீங்கள் நிற்பீர்களோ?' என்று முன்னே தொடி

யை நோக்கினாள். 'தோள்களே! வளையல் கழலும்

படி நீங்கள் மெலிந்து போவீர்களே!' என்று பின்பு

தோளை நோக்கினாள். 'அடிகளே! தோள் மெலி

யாமலும் தொடி கழலாமலும் நீங்கள் அவர் உள்ள

நாட்டுக்கு நடந்துசென்று காக்கவேண்டும்' என்று

முடிவில் அடியை நோக்கினாள். ஐய! இந்தக்

குறிப்புக்குப் பொருள் உடன்போக்கே அல்ல

வா?"

தொடிநோக்கி மென்தோளும் நோக்கி அடிநோக்கி
அஃதாண் டவள்செய் தது.

(கஉஎக) த-ன்:—"ஆமாம். ஆ! உன் தோழியைப் புகழ எனக்

குத் தெரிய இல்லை. நங்காய்! இவளே, நாணம்

மடம் அச்சம் பயிர்ப்பு என்னும்

நாற்குணமும்
அமைந்த பெண்கள் நாயகம்! தனக்கு
உள்ள
பெண்மை மேலும் ஒரு பெண்மை
உடையவள்
இவள்! எப்படி தெரியுமா? நீயோ இவள்
உயிர்த்



தோழி. இருந்தும், தன் காதல் நோயை உனக்கும் வாயால் சொல்ல இல்லை. கண்ணால் சொல்லவும் இல்லை. உன்னை 'இது தீர்க்கவேண்டும்' என்று இரக்கவும் இல்லை. உடன்போகக் கருதினாள். அதற்கு உதவியாகும்படி தன் அடியையே வேண்டுகின்றாள்? இவள் பெருங்குணத்தின் அருமையைக் கண்டாயா?"

பெண்ணினால் பெண்மை உடைத்தென்ப
கண்ணினாற் காமநோய் சொல்லி இரவு.
(௧௨௮௦)



## மூன்றாம் ஆண்டு

அறப்பிரிவு—௩. பகைதணி வினை—௨

களம்:—தலைமகன் இல்லத்தைச் சார்ந்த ஒரு
காலம்:—காரில் ஒரு மாலை

[பொழில்.

கூத்தர்:—தலைமகள், தோழி.

தனது கண்பினராகிய பகை அரசர் இருவரைச் சந்து செய்விக்கக் கருதிய தலைமகன் தலைமகளை அன்புடைய மொழிகளால் தேற்றி, ஆதரம் கூறி, அவள் விடைபெற்றுப் பிரிந்து போயினன். போனபின்பு, தலைமகள் தனியே இருந்து அவன் பிரிவு தரியாமல் தளர்ந்து பெரிதும் வருந்துகின்றாள். தோழி அவளைச் சார்ந்து ஆற்றுவிக்கின்றாள்.

தோழி:—"அம்மா ! காதல் நோய் கொடியது! அது
தீயைப்போல, தான் நின்ற இடத்தையே சுடும்!



அதற்கு இடம் தரலாகாது. ஆகையால், நீ ஆற்ற வேண்டாமா?"

த-ள்:—"அடி! ஆற்றுவது எப்படி! தீயினும்
சாலக்கொடிய இதை ஆற்றுவது எப்படி?
தீயானால், தன்னைத் தொட்டாலன்றிச்
சுடாது. மந்திரத்தாலாவது மருந்தாலாவது
தம்பிக்கப் பட்டாலும் சுடாது. ஆ! இந்த நோயோ

தன்னை அகன்றாரை—உண்ணுமல ஒழிந்
தாரை—தபபாமல் சுடுமே! இதற்கு ஒரு மருந்தா?
ஒரு மந்திரமா? எதுவும் இல்லையே?'
தொடிற்சுடின் அல்லது காமநோய் போல .
விடிலசுடல் ஆற்றுமோ தீ.
(சுகருக) தோழி:—"அம்மா! நீ அழாதே. நீ
பிரிவையேநினைந்து ஓயாமல் அழுகின்றதால்
அயலார் அறிகின்றார்கள். உனக்குத் துயரமே
வளர்கின்றது. ஆகையால், இங்கு உள்ளவர்
அறியாமல் மறைக்கவாவது வேண்டும. அல்லது,
அங்கு உள்ள காதலர் அறியத் தூது
அனுப்பவாவது வேண்டும். இரண்டில் ஒன்று
செய்யாவிட்டால் நமக்கு இன்பம் வராது"
த-ள்:—"ஏடி! மறைப்பதா, தூதுவிடுவதா—இவை
இரண்டும் என்னால் ஆகாது! இந்த நோய்
நேரத்துக்கு நேரம் மிகுகின்றது! இதை அயல்
அறியாமல் மறைப்பது எப்படி? இந்த நோயைத்
தந்த காதலருக்கு இதைச் சொல்லித் தூது
விடலாமென்றால், அவர் 'இன்னும் இவள்
இருக்கின்றாள்' என்று எண்ணுவாரே! அதனால்,
அது செய்யவும் நாணம் தருகின்றது. என்ன
செய்வேன்?

கரத்தலும் ஆற்றேன் இந்நோயைநோய்
செய்தார்க்கு உரைத்தலும் நாணுத் தரும்.
(கக சுஉ) —"ஐயோ? நாணமும் நோயும் என் மெலிந்த உடம்
பைப் பின்னும் நலிகின்றதே! ஒன்றுக்கு ஒன்று
வலியில் குறைகின்றதா? இவை இரண்டும் என்
உயிரைக் காவடித் தண்டாக வைத்து அதன் இரு
முனையிலும் தொங்குகின்றதே. இவற்றின் பாரம்
தாங்கமாட்டாமல் என் உயிர் இற்றேவிடும்!"
காமமும் நாணும் உயிர்காவாத் தூங்கு மென்
நோனா உடம்பி னகத்து. (கசசுரு)

இவ்வாறு சொல்லக்கேட்ட தோழி, தலைமகனுக்குத்தூது அனுப்புவதாகச் சொல்லிப் பெயர்கின்றாள். பிறகு சிறிது நேரம் கழிந்து திரும்பி வருகின்றாள்.

த-ள்:—(தோழி தூதுவிடாமை நோக்கி

அவளோடு
பிணங்கி) "நட்பு இன்பமே தருமாம். பகை
துன்
பமே தருமாம். ஐயோ! நட்பாயிருந்தே
துன்
பத்தை விலக்காமல் இருக்கின்றவர்
பகையாயிருந்
தால் என்ன செய்வாரோ? என்னிடம் பகை
கொள
ளவும் இல்லை. இல்லாமலே, எனக்கு
வருகின்ற
துன்பத்தை விலக்காமல் விலகி
நிற்கின்றார்களே,
அவர்கள் செய்கையை என்ன என்பேன்?"
துப்பின் எவனாவர் மற்கொல் உயர்வரவு
நட்பினுள் ஆற்று பவர்.
(கககரு)
இது கேட்ட தோழி, தலைமகனுக்குத்
தூது அனுப்புகின்றாள்.



அறப்பிரிவு—ரு. பகைத்துணி வினை—ரு.

மூன்றாம் ஆண்டு

அறப்பிரிவு—ரு. பகைதணிவினை—ரு.



களம்:—தலைமகன் இல்லத்தைச் சார்ந்த ஒரு கானல்.

காலம்:—முன்பனியில் ஒரு மாலை.

கூத்தர்:—தலைமகள், தோழி

தலைமகனை நெடுங்காலம் காணப்பெறாத தலைமகள், உடம்பு மெலிந்து மேனி பசலை பூத்தாள.

ஒருநாள் அவள் மணல் மேட்டின்மேல் உட்கார்ந்துகொண்டு பசப்பினால் தனக்கு உண்டாகிய வருத்தத்தை நினைந்து புலம்பினாள். அவளுடன் இருந்த தோழியும அவள் பசலை மிகுதியை உற்று நோக்கி பிரிவுற்றுச் சொல்லுகின்றாள்.

தோழி:—" அம்மா! உன் உடம்பெல்லாம பசலையா

யிற்று! எப்பொழுதும் பிரிவையே
நினைந்திருக்கிற
படியால் இந்தப் பசலைக்கு நீ
ஆளாகின்றாய்—''
த-ள்:—(அவளோடு பிணங்கி) ''ஆ!
என்னைப் பழிப்
பார் அல்லது பரிவார் உண்டா?
'இவள் ஆற்ற
இல்லை; அழுகின்றாள்; பசக்கின்றாள்'
என்று என்
னைத் தூற்றவும் சிரிக்கவும் எத்தனை
பேர் இருக்
கின்றாகள்! என்னையே
நெருங்குவதன்றி 'இவ
ளைத் துறந்து போயினார்; துன்பத்தில்
விட்டார்'
என்று அவரைக் கூறுவார் ஒருவரும்
இல்லையே!
என்ன செய்வேன்?
பசந்தாள் இவளென்பதல்லால் இவளைத்
துறந்தார் அவரென்பார் இல்
(கக அ அ)

—"அவரே நல்லவரானல், என் மேனி பசந்தே ஒழி
யட்டும்.—இந்தப பிரிவின கொடுமை, அறியா
திருநதேன. இருநத என்னை இதற்கு உடபடுத்
திப பிரிந்தார். அவர் நன்மையிலே நிற்பவர்.—
தவறிலலாதவா—ஆகவே வேண்டுவது! என் மேனி
யும பசப்பும யாது செய்தாலும் என்ன?"

பசக்கமற் பட்டாங்கென் மேனி நயபபித்தார்
நன்னிலைய ராவா எனின. (கசஅக)

இவ்வாறு தோழியோடு பிணங்கிய தலைமகள்
தலைமகனிடத்திருந்து தூது

வரக்காணுமல் மனம்

நொந்து பேசுகின்முள்.

த-ள்:—"என் காதலரைப்பற்றி யாதொரு சொல்லும்

எனக்கு இனிமையே தரும். என்னை விரும்பப்

படும் அவரிடமிருந்து வருகின்றது எவ்வகைப்

பட்ட சொல்லானலும், அதைக் கேட்கவே

நான் விருமபுகின்றேன். நான் விரும்பி என்ன

பயன்? ஒரு சொல்லும்பெற இல்லையே! பெருமலே

பிரிவாற்றி உயிர்வாழ்கின்றேனே! நானே கொடிய

வள். என்னைப் போன்ற பெண்கள் உலகத்தில்

உண்டா? இல்லை; இலலை.

வீழ்வாரின் இன்சொல் பெருது உலகத்து

வாழ்வாரின் வன்கணர் இல் .

(கககூஅ)

—"அவர்—எ ன்னல்

விரும்பப்பட்டவர்—என்மேல்
அன்பில்லாதவர் ஆனாலும் ஆகட்டும்.
அதனால்
என்ன? அவரிடமிருந்துவருகின்ற
யாதொரு சொல்
அறப்பிரிவு—ந. பகைதணி வினை—௪. ௧௧ந

லும் என் செவிக்கு இனியதே! 'வாரேன்'
என்று .
சொல்லி அனுபபினாலும் அதுவும் எனக்கு இனிதா
யிருக்கும். ஆனால், அதுதானும்
வரக்காணேனே!
என்ன செய்வேன ?

நசைஇயார் நல்கார் எனினும் அவர்மாட்டு
இசையும இனிய செவிக்கு.
(௧௧௯௯)—(தன் நெஞ்சை நோக்கி) "என்
நெஞ்சே! அவர்
தூது வர இல்லை என்று நீ அவருக்குத்
தூது
அனுப்ப எண்ணுகின்றாய். நீ
சொல்லப்போவதோ,
அளவில்லாத நோயாகும். அதைக்
கேட்பவரோ,

உன்னோடு உறவில்லாதவராகும். இது
முடியும்
காரியமா? முடிந்தாலும் பயன் இல்லை.
இதில்
முயலாமல் விடு. முயலாமல் விட்டு,
உனக்குத்
துயரம் செய்கின்ற கடலைத் தூர்க்க முயனு.
அது
உனக்கு எளிதாகும்."
ஊர்க்கு உறுநோய் உரைப்பாய் கடலைச்
செறாய் வாழி நெஞ்சு.
(கஉ00)

---

## மூன்றும் ஆண்டு

அறப்பிரிவு—௩.; பகைதணிவினை—௪.

களம்:—தலைமகன் தங்கியுள்ள பாசறை.
காலம்:—முன்பனியில் ஒரு பகல்.
கூத்தர்:—தலைமகன், பாங்கன்.
தலைமகனிடமிருந்து 'தூது இன்று வரும்; நாளை வரும்' என்று தலைமகள்

8

எதிர்பார்த்திருந்தாள்.

பார்த்திருந்த பலநாளும் கழிந்தது. ஒரு சொல்லும் வர இல்லை. அவளுக்குத் துன்பமே வளர்ந்தது. கடைசியில், 'இத்துன்பம் இனி வளர்ந்தால் இவள் உயிர் வாழமாட்டாள்' என்னும்படி அவ்வளவு மிகுந்தது. மிகுந்த துன்பத்தைத் தாங்கமாட்டாத தலைமகள் தனது நோயை அறிவித்து வரும்படி பாங்கனைத் தலைமகனிடம் அனுப்பினாள். அனுப்பப் பட்ட பாங்கன் தலைமகனைப் பாசறையில் சென்று கண்டு தூது உணர்த்தி நிற்கின்றான்.

த-ன்:—(பாங்கனை நோக்கி) "ஏல! காதல் மிகவும்

இனிது! தேனைப் பார்க்கினும் இனிது! தேன்

உண்டபோது அல்லது மகிழ்ச்சியைத் தராது.

காதலோ, கூடியிருந்து உண்கின்ற காலத்தும்

இன்பம் செய்யும்; பிரிந்த காலத்தும் முன் உண்ட

இன்பத்தை நினைந்தாலும் அதுபொழுது பெற்றாற்

போலவே நீங்காத பெருமகிழ்ச்சி செய்யும்.

இதோ! நான் தனியே இருக்கின்ற இப்பொழுது

முன் உண்ட இன்பத்தை இடைவிடாது நினைத்தே

இன்னும் உயிர்வாழ்கின்றேன்.

உள்ளினும் தீராப் பெருமகிழ் செய்தலால்
கள்ளினும் காமம இனிது.

(கஉ0க) —"நம்மால் விரும்பப்பட்டவரை நாம் பிரிந்தால்

துன்பம் வருமாமே இது உண்மையா? ஏடீ! அவர்

மேல் காதல் இருந்தால், அவரை நாம் மறப்

போமா? மறவாமல் நினைக்கின்ற நமக்குப் பிரிவி

னல் வருகின்ற துன்பமும் உண்டாகுமா? ஆதலால்,

காதலே எப்படியும் இனிது! அது
கூடியகாலத்தும்
இனிது; நீங்கிய காலத்தும் இனிது.
எனைத்தொன்று இனிதேகாண் காமம்தாம்
வீழ்வார் நினைப்ப வருவதொன்று இல்.
(கஉ0உ)

———

மூன்றும் ஆண்டு

அறப்பிரிவு—ரு. பகைதணி வினை—ரு

களம்:—தலைமகன் இல்லத்தைச்சார்ந்த ஒருபொழில். காலம்:—முன்பனியில் ஒரு மாலை. கூத்தர்:—தலைமகள், தோழி.

பாங்கனைத் தலைமகனிடம் தூது அனுப்பிய தலைமகள், சிலநாள் மனம் தேறி இருந்தாள். பின்பு தலைமகனிடமிருந்து ஒரு சொல்லும் வரக் காணுமல வருத்தம் மிகுந்து வாடிப் புலம்பினள். தோழி, அவள் அருகே இருந்து வற்புறுத்துகின்றுள். தோழி:—(தலைமகள் கண்ணைத் துடைத்து) "அம்மா!

நீ அழுகின்றதால் பயன் என்ன? உன்
இன்னுயிரும்

கழிகின்றது. நீ பிரிவு ஆற்றவேண்டும்.”
த-ள்:—“எடி! அவர் பிரிந்ததற்கா நான் அழுகின்
றேன்? என்னடி!—முன்பெல்லாம் ‘நாம் இருவரும்
வேறல்ல’ என்று சொல்வார். அவ்வளவு அன்
புடையவர் இன்று என்னைத் துறந்து விட்டாரே!
‘பின் வருகின்றேன்’ என்று பிரிந்தார்; பிரிந்தவர்
இன்னும் வர இல்லை; வாராவிட்டாலும் ஒரு சொல்
லாவது அனுப்பினாரா? இப்படி அவர் அன்பில்



லாத குணத்தை நினைக்க நினைக்க என் உயிர் கழி
கின்றது அதுவன்றி வேறல்ல.
விளியும்என் இன்னுயிர் வேறல்லம் என்பார்
அளியின்மை ஆற்ற நினைந்து.

—(வானத்துள்ள மதியை நோக்கி)

''நிலாவே! நான்
ஒன்று வேண்டுகின்றேன்.—அவர்
என் நெஞ்சிலே
இடைவிடாமல் இருக்கின்றார்.
இருந்தே, என்னை
விட்டுப் போயினார். அவரைக
காணவே எனக்கு
விருப்பம் மிகுகின்றது. ஆகையால,
நீ மறையாமல்
காய வேண்டும். நீ காய்வாயானல்,
அவா கன்
உன்னைக் காணும், என்
கண்ணும் உன்னைக்
காணும். அப்பொழுது எங்கள்
இருவர் கண்ணும்
உன்னிடத்தே சேரும். இவ்வாறு
நான் என் கண்
அளவாவது என காதலரை
எதிர்ப்படும்படி நீ
மறையாதொழிய வேண்டும்.''

விடாது சென்றாரைக் கண்ணினல்
காணப்

படாதி வாழி மதி.

(கஉகo).

இவ்வாறு காதல் மிருதியினல் உண்டான கை
கடந்த துன்பத்தோடு தலைமகனை
நினைந்து புலம்பிய
தலைமகள் கண் அயர்ந்து சிறிது
நேரம் உறங்குகின்
றாள். அவ்வுறக்கத்திலே தலைமகன்
தூது வந்ததாக
ஒரு கனவு காணுகின்றாள்.
கண்டவுடனே கண் விழி
த்து எழுகின்றாள்.

தலைவி:—"ஆ! என் கனவுக்கு என்ன
விருந்து செய்வே
ன்?—நான் வருந்துகின்றதையும்
அறிந்தது. அந்த



வருத்தம் தீர என் காதலரிடம்
சென்றது.சென்று,
அவர் அனுப்பிய தூதையும் ஏற்று என்னிடம்
வந்

தந்து! இந்தக் கனவுக்கு விருநதினருக்குச் செய்யும்
உபசாரம் யாது செய்யலாம்? ஒன்றும தெரிய
இல்லையே!"
காதலர் தூதொடு வந்த கனவினுக்கு
யாதுசெய் வேன்கொல் விருந்து
(சஉகக)

இவ்வாறு கனவு கண்டு களித்த தலைமகள், நனவிலே இருந்த நினைவின் மிகுதியே கனவாகத் தோன்றியது என்றும், தலைமகனிடத்திருந்து மெய்யே தூது 'வர இல்லை என்றும் தெளிகின்றாள். தெளிந்து அவனுக்குத் தூது விடுமபடி கருதுகின்றாள். த-ள்:—"என் கண்கள்—முன்னே கயல்போலும அழ
காய் மை எழுதியிருககுமே!—இந்தக் கண்கள்
நான் இரந்து கேட்டுக்கொண்டால் உறங்குமோ?—
உறங்குமானால், கனவிலே காதலரைக் காண்பேன்.
கண்டால், அவாக்கு நான் ஆற்றியிருக்கிறேனென்
பதை நானே விரிவாகச்

சொல்லுவேன்.—தூத
ரிடத்தே சொல்லாமல் அடக்கியதையும், சுருங்கச்
சொல்லியதையும்எல்லாம் நன்றாக விரித்துச்சொல்
லுவேன். ஐயோ! இனி இந்தக் கண்களும் உறங்
காது; நானும் சொல்லமாட்டேன்.
கயல்உண்கண் யான்இரப்பத் துஞ்சின்
கலந்தார்க்கு உயல்உண்மை சாற்றுவேன் மன். (கஉகஉ)
இவ்வாறு அழுது தலைமகள் கண்ணும் தோளும் முதலிய உறுப்புகள் அழகு அழிகின்றாள்.



தோழி:—(தலைமகள் வேறுபாட்டைக் கண்டு)"அம்மா!
உன் கண்கள் எவ்வளவு ஒளி இழந்துபோயின;
பார். காதலர், துன்பமெல்லாம நமக்கே வைத்தார்.
தாம் தூரத்தே சென்றார். அவரையே நீ நினைந்து
அழுகின்றாய்.—முன்னே நறுமலர்கள்

உன் கண்ணை
நோக்கி நாணும். இன்று, அம்மலர்களை நோக்கி
உன் கண்கள் நாணிவிட்டன. ஐயோ! இதைக்
கண்டவர்கள் காதலரைக் கொடுமை கூறுவாரே!
சிறுமை நமக்கொழியச் சேட்சென்றார் உள்ளி
நறுமலர் நாணின கண்.
(கஉ௲க) —"மேலும், உன் கண்கள் பசந்து விட்டன. அன்றி,
நீரையும் சிந்துகின்றன. ஐயோ! இப்படி செய்வது
காதலர் கொடுமையைப் பிறருக்குத் தூற்றுவது
போலிருக்கின்றதே! இது நமக்குத் தகுமா?
நயந்தவர் நல்காமை சொல்லுவ போலும்
பசந்து பனிவாரும் கண்.
(கஉ௲உ) —"அன்று—காதலர் நம்மை மணந்த நாளிலே—
இன்பம் மிகுதியால் உன் தோள்கள் பூரித்தன;
இன்று—அவர் நம்மைப் பிரிந்த நாளிலே—இதோ
இவ்வாறு பிரிவை அறிவிப்பதுபோல

மெலிந்து
கிடக்கின்றன. அன்று பூரித்து இன்று மெலிந்தால்
இரண்டையும் கண்டவர் இரக்கமின்றி அவரைக்
கொடுமை கூறமாட்டாரா ? இனி, நாம் ஆற்ற
வேண்டும்!
துணந்தமை சால அறிவிப்ப போலும்
மணந்தநாள் வீங்கிய தோள். (கஉ௩௩)

அறப்பிரிவு—௩. பகைதணி
வினை—ரு ககக

—"அம்மா! உன் தோள்கள் அன்று—துணைவர் நீங்
கியபோது—அவரால் பெற்ற செயற்கை அழகும்
இழந்தது; பழைய இயற்கை அழகும் இழந்தது.
அவர் அன்பில்லாமல் பிரிந்தாரென்று

எல்லோருக்

கும் உணர்த்திவிட்டது. இன்று, அதற்கு மேலே

தம் பெருமையும்
இழந்தது—மெலிந்துபோயிற்று.

வளையும் கழன்றது. அவர் சொல்லிப்போன பரு

வத்தில் திரும்பி வாராத பொய்யரென்று உணர்த

லுகின்றது. இவை இப்படி செய்யலாமா?
பணைநீங்கிப் பைந்தொடி சோரும் துணைநீங்கித்
தொல்கவின் வாடிய தோள்.
(கஉ௩ச) —"அம்மா! உன் தோள்கள், ஆ! மிகவும் கொடியது!

'தழுவின கை தளர்ந்தாலும் தரியாள் இவள்;

நெடுங்காலம் நீங்கினால் கலங்குவாள்' என்று நினை

யாத கொடியர் ஆனாலும், அவர் கொடுமையை

அவருக்கே உரைக்கின்றதே! வளைகளும் கழன்றது,

பழைய இயற்கை அழகும் இழந்தது. அவரோடு

கலந்த இந்தத் தோள்களே அவரைப் பழிப்ப

தானால் அயலாரைச் சொல்ல வேண்டுமா? நாம்

மறைப்பது எப்படி? ”

கொடியார் கொடுமை உரைக்கும் தொடியொடு
தொல்கவின் வாடிய தோள்.
(கஉநடு)

இவ்வாறு 'உன் அவயவங்கள் எல்லாம் அழகு அழிந்து தலைமகனுடைய கொடுமையைத் தூற்றுகின்றன; அவை அப்படி தூற்றாதபடி நீ ஆற்றவேண்



டும்' என்று தோழி தலைமகளை வற்புறுத்திக்கூறினாள். அது கேட்ட தலைமகள்,

தனக்குப் பற்றுக்கோடாகிய நெஞ்சோடு தன ஆற்றுமை தீரும் வகை நாடுகின்றுள்.

த-ள்:—"நெஞ்சே! இந்த நோய் ஒன்றினுலும் தீராது.
தீரும் மருந்தாவது ஒன்றை இதுவரையும நான்
தேடியும தெரிந்திலேன். நீ நினைநதறிந்து ஒன்
றைச் சொ ல்லாயோ? அது எபபடிப்பட்டதாறு
லும — யாதொன்றுனுலும — உயிரினும சிறந்த
நாணத்தை விட்டுச செய்வதேபானுலும, நோய்
தீர்வதானுல் செய்கின்றேன்.
நினைத்தொன்று சொல்லாயோ நெஞ்சே
ன்றும்,—எவ்வநோய் தீர்க்கு மருநது.

---

நான்காம் ஆண்டு
அறப்பிரிவு—௬. துணை

களம்:—தலைமகன் இல்லம்.

காலம்:—வேனிலில் ஒரு காலை.
கூத்தர்:—தலைமகன், தோழி.
தலைமகனுடைய நண்பனாகிய ஒரு

எனைத்தொ
(கஉசக)

வேந்தனைப்
பகை வேந்தர் எதிர்த்துத் துன்பம் செய்தனர். அது கேட்ட தலைமகன, தன நண்பனுக்குத் தான் துணையாகச் சென்று அவன் துன்பத்தை ஒழிக்க வேண்டுவது தனக்குக் கடமையென்றும்; அவன், தனது உற்ற நண்பன் ஆகையினால் தானே செல்ல வேண்டு



வது தகுதி யென்றும் எண்ணித் துணிந்தான். துணி
ந்தவன், தன் கருத்தைத் தலைமகளுக்குத் தெரிவித்தால், அவள், தன்னை நீங்கிப் போகாமல் தடுக்கவும் கூடுமென்று அஞ்சினன். அஞ்சி,

அப்படி செய்யாமல், தோழியைத் தனிமையில் கண்டு ' நங்காய்! நான் இப்பொழுது என் நண்பனுக்கு உற்றிடத்து உதவியாகச் செல்லவேண்டும்; சென்றாலும், சில நாளிலே வினை முடித்து விரைவிலே திரும்பிவிடுவேன்; நீட்டித்து நில்லேன். நான் வருமவரையும், உன் தோழியை நீ ஆற்றிக்கொண்டிரு' என்று சொல்லி அவள் விடை பெற்றுப் போயினன். போக, அவன் பிரிவைத் தலைமகளுக்குத் தக்கபடி உணர்த்தி அவளை ஆற்றிக்கொண்டிருந்தாள் தோழி.

......ஒருநாள், முன்னெல்லாம் தானும் தலைமகனும் ஓடியும் ஆடியும் உலாவிப் பழகிய பொழிலிடத்தே தலைமகள் வந்து புகுந்தாள். புகுந்து, முன்னே அவனுடன் இருந்து கண்டதும் உண்டதுமாகிய எல்லாவற்றையும் நினைந்து, கவலை வளர்ந்து புலம்புகின்றாள். உடன் இருந்த தோழி, அவளுக்குத் தேற்றுமொழி சில சாற்றுகின்றாள்.

தோழி.—(தலைமகள் வருந்துவதை நோக்கி) "அம்மா!

மகளிரைக் காதலர் அறநோக்கிப் பிரிவார். பிரிந்த

போது அம்மகளிர் பலரும் பிரிவாற்றி இருப்பார்.

உலகில் இது வழக்கம். தோழி!

நீ மட்டும அப்
படி செய்ய இல்லை.—''
த-ள்:—“ஆமடி! நீ சொல்லுகின்றது மெய்யே!
காத
லா 'பிரிகின்றே ன்' என்றால
அதற்கு உடன்படு



வார். பிரிகின்றபோது, உண்டாகும் அல்லலையும் அடக்கிக்கொள்வார். பிரிந்தால், அப்பிரிவையும் பொறுத்துக்கொள்வார். பின்னும் தனியே இருந்து உயிர்வாழ்வார். இவ்வகையான பெண்கள், உலகத்துப் பலர் உண்டு!—எடி! இது ஒன்றும் என்னால் ஆகாது!—பிரியும் முன்னே மற்றை நாளைவிட அதிகமாக என்னை அவர் பாராட்டுகின்றார். அந்த இன்பத்தை அடைந்து, உடனே அதை துன்பம் அடையும்படி பிரிவுக்கு உடம்படுவேனா? பிரிகின்ற போது 'இவர் செலலுகின்ற நாட்டிலே இவருக்கு என்ன உண்டாகுமோ? இவர் வரும்வரையும் நாம் எப்படி பொறுத்திருப்போம்? இவர் வருவது

தான் எந்நாளோ?' என்று இவ்வாறு என்மனத்தே பிறக்கின்ற அல்லலுக்கு ஓர் அளவில்லை. பிரிந்தால், என் உள்ளத்தைக் காதல்நோய் வருத்துகின்றது! உடம்பைச் சந்திரன் சுடுகின்றது; தென்றல் எரிக்கின்றது; குயிலும் குழலும் கொடுமைசெய்கின்றது! இத்தனையும் பொறுத்துக்கொண்டு எப்படி பிழைப்பது? இனி, நான் உயிர் வாழமாட்டேன்!''
அரிதாற்றி அல்லல்நோய் நீக்கிப் பிரிவாற்றிப்
பின்னிருந்து வாழ்வார் பலர்.

(ககசுO). தோழி:—''என்னடி! உன்னைப்போன்ற மகளிர் காதற் கடலில் அழுந்துவார்களா? அழுந்தினாலும், அதை எற்ற புணைகொண்டு நீந்தி ஏறுவார்களே! நீ அது--'' தலைவி:—''அடி! அவை இரண்டும் யாவர்க்கும் உண்டு. ஆனால், எனக்கு உண்டாகின்றது காதற் கடலே!



இதை நீந்தும் புணையும் எனக்கு இல்லை. புணையாக

வேண்டிய நீயும் தூதுவிட்டுத்
துணைசெய்கின்றாயா?

இல்லையே!"

காமக் கடல்மன்னும் உண்டே அதுநீந்தும்
ஏமப் புணைமன்னும் இல்.

(ககசுச) தோழி:—"நானே துணையாக வேண்டும்? உன் நிறை

யைப் புணையாகவைத்து அதை நீந்தக்கூடாதா?"

தலைவி:—"நான் நீந்ாதவளா? அந்தக் காதலாகிய மிகுந்த கடலை நீந்தியிருக்கின்றேன். நீந்தியும், அதற்கு ஒரு கரை காணேன். கரை காணாக் காலம் எது தெரியுமா? எல்லாரும் உறங்குகின்ற பாதியிரவு. அந்தப் பாதி யிரவிலே அதற்கு ஒரு துணையும் இல்லை. நீயும் இல்லையே? நான் ஒருத்தியே

துணையாயினேன்! ஆகியும் இறந்துபட்டுப் பிழைத்

துப் போகாமல், இன்னும் இருக்கின்றேன்! இந்தப்

பாவத்தின் பயனைப் பார்த்தாயா?"

காமக் கடும்புனல் நீந்திக் கரைகாணேன்

யாமத்தும் யானே உளேன்.
(கககூஎ)

தோழி:—"அம்மா! அவர் கொடுமையை நாம் மறைக்க

வேண்டாமா? நீ ஆற்றவேண்டும் அல்லாவிட்டால்,

அவரை இவ்வூர் பழித்துவிடும்!"

க-ள்:—"அடி! நான் என்ன செய்வேன்? என் கண்

கள் அவரைக் காண விரைகின்றதே! அவர் கொடு

மையை நான் மறைத்தாலும் இவை தம்பட்டம்

கொட்டு கின் றதே!—வெளி ப்படுத்துகின்றதே! இப்



படிப்பட்ட கண்ணையுடைய எனக்கு என் நெஞ்

சிலே எதையும் அடக்கமுடியுமா? என் அகத்தி

ழுள்ளதை இவ்வூரார்க்கு அறிவது அரிதல்ல!"
மறைபெறல் ஊரார்க் கரிதன்றல் எம்போல்
அறைபறை கண்ணார் அகத்து.
(கக அ0)

இவ்வாறு என்ன சொல்லியும் தலைமகள் ஆற்றாளாயினள். ஆகவே, அவளை ஆற்றுவித்தற்பொருட்டாகத் தோழி, தலைமகனுடைய உயர்ந்தகுணங்களைப் பழித்துப் பேசுகின்றாள். தலைமகள் அதை—அந்தப் பழிப்பேச்சை—செவி பொறுககமாட்டாமல் வருந்துகின்றாள்.

த-ள்:—(தலைமகளைப் பழித்த தோழியை நோக்கி)

"ஏடி! அவர் வர இல்லை என்று நான் வருந்துகின்

றேன்?—நான் ஆற்றியிருந்தாலும், என் தோள்

மெலிகின்றது — அதனால் வளையல் சரிகின்றது.

அதைக் கண்டு, நீயும் அவரைக் 'கொடியவர்' .

என்று கூசாமல் தூற்றுகின்றாய். நான்

அது

பொறுக்கமாட்டாமலே என் |உள்ளே நோகின்

றேன். வேறென்னடி?''
'தொடியொடு தோள்நெகிழ நோவல் அவரைக்
கொடியர் எனக்கூற நொந்து.
(கஉ௩௬)

[பின்னும் தலைமகனைத் தோழி பழிக்கின்ருள்.] ரு-ள்:—(தோழியோடு பிணங்கி)
''அன்று என்மேல்

வைத்த காதலால் உன்னோடு அவர் நட்பு பூண்

டார். தமது குறை கூறி, உன்னை
வேண்டிக் அறப்பிரிவு—ச. துனே கஉ௫

கொண்டார். உன்னுடைய உதவிபெற்று என்னைக்

கூடினர். அவ்வளவு அன்புடையவர் இன்று அற

நோக்கிப் பிரிந்திருக்கின்றார். அவரை நீ.—அவ

ோடு நட்புடைய நீ—தூற்றுதலாகுமா?

என்னை
'இவள் தேமல் படர்ந்தாள்' என்றுமல 'தேமலே
ஆயினுள்' என்றாலும் அதைக் கேட்டுக் கொள்
வேன்—என்னை எவ்வளவு பழித்தாலும் பொறுத்
துக்கொள்வேன். அவரையும் பழிக்க மனம்
தாளேன!

பசப்பெனப் பேர்பெறுதல் நன்றே நயப்பித்தார்
நல்காமை தூற்றார் எனின்.
(ககக௦)

—"ஆ! என் காதலர், என் நெஞ்சை விட்டு நீங்காமல்
நிலைத்திருக்கின்றார். நான் உறங்கும் பொழுது,
என் தோள்மேல் வந்து துயிலுகின்றார். நான்
விழிக்கும் பொழுது பழையபடி என் நெஞ்சிலே
ஓடி நிலைக்கின்றார்.—ஒருகாலும் என்னை விட்டுப்

பிரிந்தறியாதவரை, ஐயோ! இப்படியும் நீ நோவத் தகுமா?

துஞ்சுங்கால் தோள்மேலர் ஆகி விழிக்குங்கால்
நெஞ்சத்தர் ஆவர் விரைந்து.

(௧௨௧௮) —"என் காதலர் எல்லாரும் காண நனவிலே வருகின்றவர் அல்ல. யாரும் அறியாமல் என் கனவிலே வந்து என்னைக் கண்டு பாராட்டுகின்றார். நீ கொடுமை கூறலாகுமா? உனக்கும் ஒரு காதலர் இருநதால் அவரை நீ கனவிலே காணலாம். அப் ௧௨௧௯



பொழுது என் காதலர் என்னை நனவிலே வந்து பாராட்ட இல்லையென்று அவரை நீ நோவமாட்டாய்.

நனவினால் நல்காரை நோவர் கனவினால்
காதலர்க் காணா தவர்.

(௧௨௧௯) —(தோழியோடு பின்னும் பிணங்கி அவளை வேறாகக்
கருதி) "ஐயோ! இவ்வூர் மகளிர்க்குக் கண் இல்லை
யா? 'நனவிலே நம்மை நீங்கினார்; நீங்கினார்'
என்று என் காதலரைத் தூற்றுகின்றார்களே! அப்
படி தூற்றுகின்றவர்கள், கனவிலே அவர் நீங்கா
மல் வருகின்றதைக் கண்டறிவாரோ? நானென்
றும் தானென்றும் வேற்றுமை இல்லையானால் நான்
கண்டதை அவரும் கண்டறிவார். வேற்றுமை
உள்ள இவர் அவர் வருவதைக் காணமுடியுமா?

நனவினால் நம்நீத்தார் என்பர் கனவினால்
காணார்கொல் இவ்வூ ரவர். (௧௨௨௦)

—(தன் நெஞ்சைநோக்கி) "நெஞ்சே! 'கொடியவ
ரென்று இவ்வூரார் கூறுகின்றவரிடம் செல்லு·

சென்று, என் தோளினால்
விளைகின்றஆரவாரத்தை
எல்லாம் சொல்லு.—என்னுடைய
தோள்கள்
தாமே மெலிகின்றதையும், அதை நோக்கி
அய
லார் பழிக்கின்றதையும், மேலும் அதனால்
ஆற்
றாமை மிகுகின்றதையும் ஒன்றும் விடாமல்
அவ
ருக்குச் சொல்லு. உன் சொல்லைக்
கேட்டவுடனே
அவர் இங்கே வருவார். வந்தால், இவை
முழுதும் அறப்பிரிவு—ச. துணை கஉஎ
நீங்கும். நீங்கி, நீ தகுந்த காலத்தில் செய்த
நன்
றியை நான் தப்பாமலே பெறுவேன்! நீ
அதன்
பயனெல்லாம் அடைவாய்! ”
பாடு பெறுதியோ நெஞ்சே கொடியார்க்குஎன்
வாடுதோள் பூசல் உரைத்து
(கஉ௯எ) தோழி:—(பிணங்கியிருக்கும் தலைமகளை
நோக்கி)

"அம்மா! நீ தெய்வக் கற் புடையவள். ஆமாம்.
நான் காதலரைப் பழிக்கின்றேனென்று அவர்
கொடுமையை எனக்கும் மறைக்கின் றாயே? இந்தக்
குணம் யாருக்கு வரும்?—உன்னைப் போன்ற கற்
புடையவர் உன்னை மேலாக மதிப்பார்—கொண்
டாடுவார்! உனக்கு வேறென்ன வேண்டும்?"
த-வி:—"எடி! அவர்—கற்புடையவர்—என்னை மதித
தும் எனக்கு என்ன உண்டு? நான் ஒரு பாவி!
நான விரும்புகிற காதலரே என்னை விரும்ப
இல்லை! கணவரால் விழையப்படாத மகளிர் யாவ
ரால் எது பெற்றும் பெற்றவராவாரா?"

வீழப் படுவார் கெழீஇலர் தாம்வீழ்வார்
வீழப் படாஅ ரெனின்.

(கககூச) தோழி:—"அம்மா! அவர்மேல் அளவற்ற ஆசையுடை
யவள் நீ! அதனால்தான், அவர் மனம் அறிந்து
மகிழ்ந்திருககின்றாய்!"
த-வி:—"ஆமாம்! நான் அவர்மேல் ஆசையுடையேன்.
அதனால் நான் பெற்றது என்ன? துன்பம் தானே!



நாம் அவரை ஆசைபபடுவதுபோல அவரும்
நமமை ஆசைப்படாவிட்டால நமக்கு என்ன செய்
யப போகிறா? ஆசையிலலாதவர் நமக்கு என்ன
உபகாரத்தைச் செய்வார்?'
நாமகாதல் கொண்டார் நமக்கெவன் செய்பவோ
தாம்காதல் கொள்ளா ரகடை.
(கககூரு)

—'. ஆ! காதல் ஆணிடத்தும் துன்பம்!
பெண்ணிடத்தும் துன்பம்! ஒரிடத்தே மட்டும்
இருப்பதானால் அது துன்பமே
தரும்!—காவடித்தண்டின் இருமுனையிலும் பாரம
கலந்திருந்தால்— ஒத்திருந தால—சுமப்பவனுக்கு
இனிதாகும். அதுபோல ஆணிடத்தும்
பெண்ணிடத்தும் காதல் ஒரே அளவாக
ஒத்திருந்தால் அப்பொழுதே அது அவருக்கு
இனிதாகும்! பாரடி! என்னிடத்தில் உண்டாகிய
காதல் அவரிடத்திலும் உண்டானால் நான் இப்படி
துன்பம் அடையக் கூடுமோ?
ஒருதலையான் இன்னுது காமம்காப் போல இருதலை
யானும் இனிது (ககசுசு) —"எடி
! ஆணிடத்திலாவது பெண்ணிடத்திலாவது
விருப்பு வெறுப்பு இல்லாதவன் காமன்.—இரு
வரையும் ஒரு கண்ணுகப் பார்ப்பவன். ஐயோ!
இன்று, அவனும என்னிடததே வேறு பட்டான!
என்னிடத்தேயே நின்று போர் புரிகின்றுன். என்
பசப்பின் துயரத்தையும் பாரான். என் தனிமை
யின் துயரத்தையும் பாரான். எனக்குத் துன்பத்

தையே செய்கின்றான். இனி, நான் பிழைப்பது
எப்படி?"

பருவரலும் பைதலும் காணான்கொல் காமன்
ஒருவர்கண் நின்றொழுகு வான். (கககூஎ)



நான்காம் ஆண்டு

அறப்பிரிவு—ச. துணை

களம்:—தலைமகன் தங்கியுள்ள பாசறை.

காலம்:—வேனிலில் ஒரு மாலை.

கூத்தர்:—தலைமகன்.

தனது நண்பனுக்குத் துணை செய்ய வேண்டிப் பிரிந்த தலைமகன், சில நாளிலே தன் நாட்டுக்குத் திரும்பிவிடலாமென்று எண்ணினான். எண்ணியபடியே அவன் செய்யக் கூடாதாயிற்று. அவன் எடுத்துக் கொண்ட கருமம் விரைவிலே முடிய இல்லை.

காலம் நீட்டித்தது. நீட்டித்தபோது, அவன் தனி
மையிலே இருந்து தலைமகளை நினைந்து தன்னுள்ளே
புலம்புவானாகின்றான்.
த-ன்:—(பொழுதுமறைந்து மாலை வருகின்றதை நோ
க்கி) "ஏ! மாலைப்பொழுதே! நமது நண்பனாகிய
வேந்தன் போர்செய்து விரைவிலே வெல்ல வேண்
டும். நாம் எடுத்து வந்த வினை இன்றே முடிய
வேண்டும். அப்பொழுது நாமும் நம் மனைவியைச்
சென்று கூடுவேம். அவ்விடத்தே வருகின்ற உன
க்கு விருந்தும் செய்வேம்!

9



வினைகலந்து வென்றீக வேந்தன் மனைகலந்து

மாலை அயர்கம் விருந்து.
(கஉகூஅ) —"ஐயோ! 'நமது காதலர் நெடுந்தூரம் சென்றார்.
அவர் என்றைக்கு மீண்டு வருவார்? அவர் திரும்பி
வருவதாகக் குறித்துப்போன நாள் என்று வரும்?
என்று வரும்?' என்று அந்த நாளையே மனத்திலே
வைத்து ஏங்கிக்கொண்டிருப்பார். அது வரும்
வரையும் உயிர் தாங்கி வாழ்வார். பாவம்! அப்படி
வருந்துகின்ற மகளிர்க்கு ஒருநாள் பலநாள் நெடி
தாகக் காட்டுமே? அவர் எப்படி ஆற்றுவார?
ஒருநாள் எழுநாள்போல் செல்லும்சேட்சென்றார்
வருநாள் வைத்தேங்கு பவர்க்கு
(கஉகூகூ) —" நமது காதலி நம் பிரிவினை ஆற்றாமல் உள்ளம்
உடைந்தால் இறந்துபடுவாள். இறந்து பட்டால்
நம்மைப் பெறுவதாலும் என்ன? அல்லது

பெற்
றாலும் என்ன? அல்லது மெய்யுறக் கலந்தாலும
என்ன? இவை ஒன்றாலும் அவளுக்குப் பயன்
இ ல்லை அவள் இறந்துபடுமுன் நாம் செல்லவேண்
டும்! ''

பெறின்என்னும் பெற்றக்கால்என்னும்
உறின்என்னும் உள்ள ம உடைந்துஉக்கக் கால். (கஉஎ0)

இவ்வாறு வருந்தியிருந்த தலைமகனுக்கு வினை முடிந்தது. வீட்டிற்குத் திரும்பவும் எ ண்ணினன் . எ ண் ணி, முன்னொருகால் தலைமகளிடம் நிகழ்ந்ததை
நினைத்துத் தன்னுள்ளே சொல்லுகின்றான்.



—“ஒரு நாள் என் காதலியை உடம்பு இரண்டும்
ஒன்றாகும்படி இறுக முயங்கி இருந்தேன். இப்படி

இருந்தால் இவளுக்கு நோகுமே என்று எண்ணித்

தழுவிய கையைச் சற்றே அவிழ்த்தேன். அவ்வ

ளவு நெகிழ்ச்சியும் அவள் பொறுக்க இல்லை.

பாவம்! பைந்தொடிப் பேதை உடனே அவள்

நெற்றி பசந்தது. அத்தன்மையாகிய நெற்றி இந

தப் பிரிவுக்கு என்ன செய்யுமோ?
முயங்கிய கைகளை ஊக்கப் பசந்தது
பைந்தொடிப் பேதை நுதல.
(கஉ௩அ) —"அவ்வாறு என் தழுவிய கை சிறிது வழுவிய

போது எங்கள் இருவா உடம்பும் சற்றேவிலகியது;

இடையே சிறுகாறறு நுழைந்தது. அந்த மென்

காற்று புகுநததும் அவள் பொறுக்க

இல்லை.

பாவம்! பேதை அவள்! உடனே அவள் குளிர்ந்த

கண் பசந்தது. அத்தன்மையாகிய பெரிய கண்களை

இந்தப் பிரிவுக்கு என்ன செய்யுமோ? நான் காடும்

நாடும் மலையும் கடந்து வந்திருக்கிறேனே?

முயக்கிடைத் தண்வளி போழப் பசப்புற்ற
பேதை பெருமழைக் கண்.
(கஉ௩௬)

—"அவள் நெற்றிப் பசப்பைக் கண்டு அவள் கண்

பசப்பானது துன்பமுற்றது. 'தழுவிய கைகள்

நழுவிற்று; இரண்டு மெய்யும் நீங்கிற்று; சிறு

காற்று இடையே நுழைந்தது. இதுவரையும் நான்

பசந்திலேன்.' என் நெஞ்சே வன்னெஞ்சு!

முயங

கிப கை நெகிழ்ந்ததும் நெற்றி பசந்ததே!
அதுவே



மென்மையுடையது!' என்று நெற்றிப்
பசப்பை
நோக்கி கண் பசப்பு வெட்கம் அடைந்தது.
முயங்
கிய அன்றே அவள் உறுபபுக்கள் இப்படி
ஆயின
வே! பிரிந்த இன்று அவை ஒன்றுக்கு ஒன்று
முற்
பட்டு அழகு அழியாதா? ஆகையால் நாம்
விரை
ந்து சென்று அவளைச் சேரவேண்டும்!"
கண்ணின் பசப்போ பருவரல் எய்தின்றே
ஒள்நுதல் செய்தது கண்டு.
(சஉசா)

ஐந்தாம் ஆண்டு

பொருட்பிரிவு—க. பொருள்

களம்:—தலைமகன் இல்லம்.

காலம்:—முன்பனியில் ஓர் இரவு.

கூத்தர்:—தலைமகள், தோழி.

"இம்மை இன்பமும் மறுமை இன்பமும் எளிதாக அளிக்கத் தக்க பலவகைப் பொருளும் நான் படைத்திருக்கின்றேன். படைத்தும் என்ன பயன்? இது என் இன்பத்திற்குத் துணையாகுமன்றி அறத்திற்கும் ஆகுமோ? முன்னோர் தொகுத்துவைத்த பொன்னால் புரியும் காரியங்களைப் பொன்னுலகத்தாரும் தென்னுலகத்தாரும் கொள்ளாரே! அவர் கொள்ளாரானால் நாம் செய்யும் பூசனை எத்தனையாயினும் எள்ளளவும் பயன் தருமோ? ஆகையால், இன்றே சென்று எனது முயற்சியால் பொருள் தேடி வரு

வேன்!" என்று தலைமகன் எண்ணினான். எண்ணி,
தலைமகளிடம் தன் விருப்பத்தை உரைத்தான். அவ
ளும், அறத்திற்குத் துணையாவதே கற்புடையவர்
கடமை ,என்று கருதி உடம்பட்டாள். தலைமகன்
அவள் விடைபெற்றுப பிரிந்து போயினன். போக,
தலைமகள் அவன் பிரிவினால் துன்பம் அடைந்தும், அத்துன்பத்தையே எப்பொழுதும் நினைந்தும் மெலி கினாள். தோழி அருகே இருநது ஆற்றுவிக்கின்
றாள்.

முன் இரவு

தோழி:—"அன்னாய்! உன் காதல் நோயை இப்படி நீ
வெளிப்படுத்தலாமா? இது உன் நாணத்திற்குத்
தகாது!"

த-ள்:—"எடி! நான் வெளிப்படுத்துகின்றேன்?—இந்த

நோயை அயலார் அறிவதற்கு நான் நாணுகின்
றேன். நாணி, மறைக்கின்றேன். மறைத்தாலும்,
பயன் என்ன? என் நாணத்தின் அளவிலே நிற்கின்
றதா, இது? நீர் வேண்டுமென்று இறைப்பவர்க்கு
ஊற்று நீர் மிகுவதுபோல மிகுகின்றதே! இனி
இதற்கு மருந்து நீயே தேடவேண்டும்."
மறைப்பேன்மன் யான்இஃதோ நோயை இறைப்
பவர்க்கு,—ஊற்று நீர் போல மிகும்.
(ககசுக) தோழி:—"அம்மா! துன்பம் முடிவிலே இன்பம்
உண்டு. இன்பம் முடிவிலே துன்பம் உண்டு. நீ
முன்னே காதலர் இன்பம் உண்டாய். இன்று,



அதனாலாகிய துன்பம் வந்தது. அதைப் பொறுக்க

வேண்டாமா?"

த-ள்:—"அடி! உண்ட இன்பத்தோடு ஒத்து வந்தால்

பொறுக்கலாம்—காதலானது, கூட்டத்தை இன்

பம் செய்கின்றது; அந்த இன்பம் கடல் போலப் பெரியதே! அக்காதலே பிரிவினால் துன்பம் செய்

கின்றது; அந்தத் துன்பம் அந்தக் கடலினும் பெரி

தாகின்றதே! முன் உண்ட இன்பத்தைவிட இன்று

வரும் துன்பம இரட்டித்து இருந்தால் எப்படி

பொறுப்பது?"

இன்பம் கடல்மற்றுக் காமம் அஃதடுங்கால்

துன்பம் அதனில் பெரிது.
(ககசுசு)

—தோழி நீங்குகின்றாள்.

நடு இரவு

த-ள்:—(இரவின் கொடுமை எண்ணி) "ஏ! இந்த இர

வின் அன்பே அன்பு! உலகத்தில் உள்ள மன்னு
யிரை எல்லாம் தானே உறங்கப் பண்ணிற்று. என்
னையே உறங்காமல் வைத்தது.--இப்போது என்னை
யன்றி வேறு துணை இல்லை. துணையோடு சேர்
கின்ற உயிர்களை எல்லாம் விட்டது—துயிலப் பண்
ணிற்று. நான் சாகும் எல்லையேன். என்னையே
தேடித் துணையாகக் கொண்டதே. ஓ! இதன்
அறிவை என்ன சொல்வேன்?
மன்னுயிர் எல்லாம் துயிற்றி அளித்துஇரா
என் அல்லது இல்லை துணை.
(கககூஅ)

பொருட்பிரிவு—க. பொருள் கஙரு

—"என் காதலரே என்னுடைய ஆற்றாமை கருதாமல்
பிரிகின்ற கொடியவர்! அக்கொடியவர் கடி

திலே
வாராத கொடுமையும் உடையவர். அவர் கொடு
மைக்கு மேலே இந்த இரவும் கொடுமை செய்கின்ற
தே!—அவரோடு இன்புற்ற முன் நாளிலே இது
ஒரு நாழிகையாகப் பறந்தது. அவரைப்பிரிந்திருக்
கின்ற இந்த நாளிலே ஒரு ஊழியாகக் கழிகின்ற
தே! இதற்கும் கண்ணோட்டம் உண்டா?"

கொடியார் கொடுமையின் தாம்கொடிய இந்நாள்
நெடிய கழியும் இரா.
(௧௧௬௯)

—தோழி சார்கின்றாள்.

## பின் இரவு

தோழி:—"அம்மா! இன்னும் நீ உறங்க இல்லையா!
இது உனக்கு ஆகாது. நீயும் ஆற்ற வேண்டும்;
உன் கண்ணும் உறங்கவேண்டும்".

த-ள்:—"என் கண்களா? அடி! அவை

எஞ்ஞான்றும்
உறங்குவன அல்ல. காதலர் வாராத நாளில்
'அவர்
வருவார், வருவார்' என்று வழிபார்த்து
உறங்கா.
அவா வந்த நாளில் 'ஐயோ! இவர்
பிரிவாரே!'
என்று அச்சங்கொண்டு உறங்கா. அவர்
என்னை
நீங்கியிருந்தாலும் கூடியிருந்தாலும் என்
கண்ணுக்
குப் பொறுக்கமுடியாத துன்பமே உண்டு.
அவை
உறங்குதல் இல்லை.

வாராக்கால் துஞ்சா வரின்துஞ்சா ஆயிடை
ஆரஞர் உற்றன கண்.
(கஎகக)



—(தான் முன்னே பிரிவுக்கு இசைந்த
பிழையை
எண்ணி, தன் பசப்பினை நோக்கி)

''என் காதல
ருக்கு அப்பொழுது பிரிவை
உடம்பட்டேன்.
அதை ஆற்றுமல் இப்பொழுது
பசக்கின்றேன்.
என் குணத்தை யாருக்குச்
சொல்வேன்?—'இவள் உடம்பட்டால்
பிரிவோம்; அல்லாவிட்டால் ஒழி
வோம்' என்று கருதிப் பிரிவை
உணர்த்தினர்.
அவர் அன்புடையவரே! பாவி
நான் அன்று
இசைந்தேன். நான் இசையவே
அவர் மேலும்
மேலும் பிரிவைச்செய்கின்றார். அ
வரைக் கூடுதல்
எனக்கு அரிதாகின்றது. அதனல்
ஆற்றுமல்
இன்று பசக்கின்றேன். முன்பு
இசைதலும் பின்பு
பசத்தலும் பிறர் செய்த பிழையா?
நானே செய்து

கொண்ட துன்பத்தினை யாரிடம்
நோவேன்? இதை
வெளியிடுவதும் பழியே அல்லவோ?"

நயந்தவர்க்கு நல்காமை நேர்ந்தேன்
பசந்தஎன்
பண்புயார்க்கு உரைக்கோ பிற.
(ககஅக)

---

ஐந்தாம் ஆண்டு

பொருட் பிரிவு—க. பொருள்

களம்:—தலைமகன் இல்லத்தைச் சார்ந்த
ஒரு கானல்.

காலம்:— முன்பனியில் ஒருபகல்.

கூத்தர்:—தலைமகள், தோழி.

கழிக் கரையில நாணற் புதரும்
தாழைப்புதரும்
நெருங்கியுள்ளது. தலைமகள் மணல்
மேட்டின்மேல்
புன்னை நிழலில்
உட்கார்ந்திருக்கின்றாள். அவள்

கன்னத்தில் ஊன்றிய கைவழியே கண்ணீர் வழிகின்றது. அவள் ஏதோ எண்ணத்திலே ஆழ்ந்து ஏங்கியிருக்கின்றாள். உடன் இருந்த தோழி அவள் ஆழ்ந்த எண்ணத்திலே அமிழ்ந்து கிடப்பதைக் கண்டு, அவளைத் தெளிவிக்கின்றாள்.

தோழி:—"அம்மா! அந்த நாள் இன்பத்தை எல்லாம்

நினைக்கின்றாய். அதனால் உனக்கு அல்லல் விளை

கின்றது. அதை நீ மறக்கவேண்டும்."

த-ள்:—"ஏடி! அதை மறந்தால் நான் உயிர் வாழேன்.

அவரோடு கூடிய நாளின் இன்பத்தை நினைக்கின்ற

படியால் இந்தத்துன்ப வெள்ளத்திலும் நான் உயிர்

வாழ்கின்றேன். அதுவும் இல்லையானால் எனக்கு

வேறு துணை ஏது? அவர் தூது வருகின்றதா? அல

லது, என் தூது செல்கின்றதா? அந்த

நினைவும்
இல்லையானால் வேறு எத்தால் நான் உயிர் வாழ்
வேன்?
மற்றுயான் என்னுளேன் மன்னோ அவரொடுயான்
உற்றநாள் உள்ள உளேன்.
(கஉ0௬) —"அந்த இன்பத்தை நான் மறந்தறியேன். மறவா
மல் இன்றும நினைக்கின்றேன். இருந்தும், பிரிவு
என் உள்ளத்தைச் சுடுகின்றதே! அவ்வாறு பிரி
வாற்றாத நான், மறந்தால் என்ன ஆவேன்? உயிர்
வாழ்வேனா? இறந்து படுவேன்!
மறப்பின் எவனாவன் மற்கொல் மறப்பறியேன்
உள்ளினும் உள்ளம் சுடும்.
(கஉ0௭)



தோழி:—"இந்தத் துன்பம் அறிந்து அவர்

வருவார்.
வந்து, உனக்கு இன்பம் செய்வார்.
அன்னாய்!
வருந்தாதே!"
தலைவி:—"ஆமடி! இன்பம் செய்வார்!—அவரை
நான்
எவ்வளவு மிக நினைத்தாலும் அதற்கு
வெகுள
மாட்டார்—அதற்கு உடம்பட்டு என்
நெஞ்சிலே
நிற்பார். என் காதலர் எனக்குச் செய்கின்ற
இன்
பம் அவ்வளவு தானே? வேறென்ன?
இதுவே
எனக்குச் சிறந்த இன்பம்!
எனைத்து நினைப்பினும் காயார் அனைத்தன்றோ
காதலர் செய்யும் சிறப்பு.
(கஉ0அ) —(தான் கண்ட கனவை நினைந்து
ஆற்றாளாகி) "என்
னைப் பிரிந்து போய் இன்னும் திரும்பி
வாராத
கொடியவர்! ஒருநாளும் கனவிலே வந்து
இன்பம்

செய்யாக் கொடியவர்! ஐயோ! நாளதோறும் கனா
விலே வருகின்றார். வந்து, நம்மை வருத்துகின்றார்.
இது எதுபற்றியோ? நனவில் இல்லாதது கனவி
லும் இல்லையாமே, இதுமெய்யா?"
நனவினால் நல்காக் கொடியார் கனவினால்
என்எம்மைப் பீழிப் பது.
(கஉகா)
" 'காதலர் வந்து இன்பம் செய்வார்' என்றேன்; அதை இகழ்ந்து பேசினாள். கனவை நினைந்து கலங்குகின்றாள். ஐயோ! இனி இவள் ஆற்றாள். நான் தேற்றுவது எப்படி?" என்று இவ்வாறு தோழி கவலையுற்று வாடுகின்றாள்.

## பொருட்பிரிவு—க. பொருள்

கஙஎ

த-ள்:—(தோழி கவலையைக் கண்டு) "ஏடி! நீ என்
வருந்துகின்றாய்? கனவு என்னை வருத்துகின்றது
என்றா?—என் காதலர் நனவிலே வந்து

இன்பம்

செய்யார். ஆயினும், அவரைக் கனவிலே பல

காலும் காண்கின்றேன். அந்தக் காட்சியாலே

தான் என் உயிர் உளதாகின்றது. நீ கவல

வேண்டா?

நனவினான் நல்கா தவரைக் கனவினாற்
காண்டலின் உண்டென் உயிர்.

(கஉகந) —"தானே இயல்பாக வந்து இன்பம் செய்யார்.

அவர் சென்ற இடத்தை அறிந்துசென்று அவரைக்

கொண்டு வந்து தருகின்றது கனவு! அந்தக் கன

விலே எனக்கு இன்பம் உண்டாகின்றது. ஆதலால்

நான் ஆற்றுவேன்.

கனவினால் உண்டாகும் காமம் நனவினால்

நல்காரை நாடித் தரற்கு.

(கஉகச) —"அடி! முன்னே நனவிலே அவரைக் கண்டு உண்ட

இன்பமும் அது கண்ட போதே இனிதாயிற்று.

முன் நான் பெற்றதும் இவ்வளவே—எனக்கு

இரண்டும் ஒத்திருக்கின்றது. இன்னும் அதுபெற்று

நான் ஆற்றேனா?

நனவினால் கண்டதும் ஆங்கே கனவுந்தான்

கண்ட பொழுதே இனிது.

(கஉகரு)

—"ஓ! நனவு மிகவும் கொடியது! அந்த ஒரு பாவி

இல்லையானால் கனவிலே வந்து கூடுகின்ற காதலர்



என்னைப் பிரிவாரா? பிரியார் அது நடுவே புகு

ந்து கனவைப் போக்குகின்றது
—அவரைக் கன
விலே பெற்றே நான் ஆற்றுகின்றேன். அடி
எனக்
காக நீ கவலைப்படாதே!"
நனவென ஒன்றில்லை யாயின் கனவினுல்
காதலர் நீங்கலர் மன்.
(கஉகசு)

---

ஐந்தாம் ஆண்டு
பொருட்பிரிவு க பொருள்
களம்:—தலைமகன் இல்லத்தைச்சார்ந்த
ஒருபொழில்.
காலம்:—முன்பனியில் ஒரு மாலை.
கூத்தர்:—தலைமகள், தோழி.
பொழிலின் மேற்புறத்தே ஓர் ஓடை
வடக்கு
நோக்கி ஓடுகின்றது. அதன் கீழைக்கரை புல்
முளைத்
துப் பச்சைப் பசேரென்று
அழகாயிருக்கின்றது.
அதன்மேல் தலைமகள் சாய்ந்து கிடக்கின்ருள்.
தோழி

அவள் முன்னே, உட்கார்ந்திருந்து மகிழமலர் நோக்
கின்றாள். கதிரவன் மேற்கடல் குளிக்கத் தாழ்கின்
றான். மாலைப் பொழுது வருகின்றது. அதைக்
கண்டு தலைமகள் இரங்குகின்றாள்.

த-ள்:—(பொழுதொடு புலந்து)

காதலரும் நானும் கூடியிருந்த

"பொழுதே! என்
நாளில் வந்த மாலை
யோ நீ அல்ல; அல்ல. அந்நாள் காதலரை மணந்
திருந்தேன். நீ இன்பம் செய்தாய். இன்று அவ
ரைப் பிரிந்திருக்கின்றேன். என் உயிரை உண்
ணும் இறுதி நாளா யிருக்கின்றாய்—வேலைப்
போலத் துன்பம் செய்கின்றாய்.

மாலேயோ அல்லே மணந்தார் உயிருண்ணும்
வேலேநீ வாழி பொழுது.
(கஉஉக) —(தனது மனத்துயரத்தை அதன்மேல் வைத்து)
மயங்குகிற மாலேப் பொழுதே! எனக்கும் துன்
பம் செய்தாய்; நீயும் இன்பம் அடைந்தாயில்லே.
என்னேப்போல ஒளி இழந்தும் கிடக்கின்றாய். என்
துணேவரோ கொடியவர்! உன் துணேயும் கொடுமை
யுடையவர் தானே? சொல்லு?"

புன்கண்ணே வாழி மருண்மாலே எங்கேள்போல்
வன்கண்ணே தோரின் துணே.
(கஉஉஉ). தோழி:—(அழுகின்ற தலேமகளே நோக்கி) "அன்
ணய்! இந்த மாலேப்பொழுது கலக்கமே தரும்.
ஆயினும் நீ ஆற்ற வேண்டும்."
தள்:—"எடி! இதை ஆற்றுவது எப்படி? அவர்

கூடிய
நாளெல்லாம் இது குளிர்ந்து இருந்தது; என்
முன்னே நடுங்கிக்கொண்டும் வந்தது. இந்த நாளில
அப்படி வருகின்றதா?—என் உயிர் வாழ்க்கை
யில் வெறுப்பு தோன்றும்படி வருகின்றது. இந்த
வெறுப்பாக வரும் துன்பமும் நாளுக்கு நாள் வள
ரும்படி வருகின்றது. நான் என்ன செய்வேன்?
பனியரும்பிப் பைதல்கொள் மாலை துனியரும்பித்
துன்பம் வளர வரும்.
(ககஉ௩). —"அவர் உள்ளபொழுதெல்லாம் இது எனக்கு நட்
பாகி இன்பம்செய்து வந்தது. அவர் இல்லாத
இப்பொழுது நட்பு ஒழிந்து நிற்கின்றது.—அது

மட்டுமா? படுகளத்தில் அருளொன்று மில்லாதார்
வருகின்றதுபோல என் உயிரைக் கொள்ள வரு
கின்றது. பகையாகித் துன்பம் செய்து வருகின்
றது. இனி ஆற்றுவது எப்படி?
காதலர் இல்வழி மாலை கொலைக்களத்து
ஏதிலர் போல வரும். (கஉஉ
௪) —"அடி! காலையும் மாலையும் பழமைபோலன்றிஇன்று
மாறுபட்டு வருகின்றதே!—அன்று—அவர் கூடிய
நாளில்—காலை, 'பிரிவார்' என்று என்னை அஞ்சப்
பண்ணிற்று இன்று—அவர்பிரிந்தநாளில்—அதை
விட்டது. கங்குல் வெள்ளத்திற்குக் கரையாய் வரு
கின்றது. நான் இந்தக் காலைக்குச் செய்த நன்றி
என்னவோ? கூடியநாளில் மாலை, எனக்கு இன்பம்

செய்து வந்தது; இன்று அதை விட்டது. அளவில்
லாத துன்பம் செய்கின்றது. நான் இதற்குச்
செய்த தீமை என்னவோ?

காலைக்குச் செய்தநன்று என்கொல்
எவன்கொல்யான் மாலைக்குச் செய்த பகை.
(கஉ௫) தோழி:—"அம்மா! இன்று இப்படி வருந்துகின்றாயே!
அன்று அவர் பிரிவுக்கு என உடம்பட்டாய்?"
த-ள்:—"அடி! முன்னெல்லாம் இந்த மாலை எனக்கு
நட்பாகி இன்பம் செய்து போந்ததே. இன்று
பகையாகித் துன்பம் செய்கின்றது. இது இப்படி
வேறுபடு மென்பதை காதலர் பிரிதற்கு முன்னே
நான் அறிந்திலேன். அறிந்தேனானல் அவர் பிரி
விற்கு உடம்படுவேனா? மாட்டேன்"

சஙு

மாலைநோய் செய்தல் மணந்தார் அகலாத
காலை அறிந்த திலேன்.

(கஉஉரு) தோழி:—"அன்னாய்! மாலையில் மட்டும் இவ்வாறு
ஆகின்றாயே, மற்றை நேரம் உனக்குத் துன்பம்
செய்ய இல்லையா?"

த-ள்:—"இல்லை. அடி! காலைப் பொழுதிலே இந்த
நோய் அரும்புகின்றது; பகற் பொழுதெல்லாம்
பேரரும்பாக முதிர்கின்றது; மாலைப் பொழு
திலே அலர்ந்துவிடுகின்றது.—உறக்கம் விட்டு எழு
ந்த காலை நேரத்தில் கனவிலே காதலரைக் கண்ட
நினைவே நிற்கின்றது. ஆகையால், காலையில் நான்

வருந்துவது இல்லை. பின் பொழுது போகப் போக
அந்த நினைவு மறக்கின்றது. அவர் பிரிவை நினை
ந்து வருநாதுகின்றேன். ஆயினுய பசல், அவ்வளவு
கொடியரு அல்ல. மாலை நேரதில் மக்களும்
மாககளு ம் எலலாம் , தமது துணைவரை நினைநது . தேடி இருபபிடம சேர்கின்றனா. அதைக்காணும்
போதே நான் முன்னே உண்ட இன்பத்தை நினை
நது வருத்தம் மிகுகின்றேன். அதனல், இந்த மாலை
நேரமே கொடியது!

காலை அரும்பிப் பகலெல்லாம் போதாகி
மாலை மலரும்இந் நோய்.

(கஉஉ) —"அடி! முன்னெல்லாம் ஆயன் குழல் எவ்வளவு
இனிதாய் வரும. இப்பொழுது அது இநத மாலை
க்கு ஒருதாதும் ஆயிற்று—இது வருவதை

அது
முன்னமே வந்து உணர்த்துகின்றது. இது வந்து



என்னைக் கொல்லும்போது இதற்கு அது கொல்
லும் படையும் ஆகின்றது. தானே சுடவல்லது
இந்த மாலை. இது ஒரு துணையும் பெற்றால் என்ன
செய்யாது?
அழல்போலும் மாலைக்குத் தூதாகி ஆயன்
குழல் போலும் கொல்லும் படை.
(கஉஉஅ) —"இந்த மாலை கொடியதாயிற்று! எனக்குக் கூற்ற
மே ஆயிற்று! இனி இதைக் கண்டவரும் 'இது
மாலையா?' என்று மதிமருளுவார்! இதுவரையும்
நான் ஒருத்தியே இதனால் மயங்கி நோய் அடைந்

தேன். இனி இது வரும் பொழுது, இதன் கொடு

மையால் நான் இறந்து படுவேன்! இந்த ஊரெல்

லாமும் மயங்கி நோய் அடையும்!
பதிமருண்டு பைதல் உழக்கும் மதிமருண்டு
மாலை படர்தரும் போழ்து.
(கஉஉக) —ஏடி! காதலர் பொருள் முடித்து வரப்போனார்.

அவர் குறித்த பருவமும் கழிந்தது. நம்மை நினை

த்து வரவும் இல்லை. தாம் சொல்லிய சொல்லும்

தவறினார். அப்பொருள் இயல்பே தம் இயல்பாயி

னார்.—இந்த மாலையோ கொடியதாயிற்று; கலங்

கச் செய்கின்றது. இந்நாள் வரையும் அவர் பிரி

வைப் பொறுத்து இறந்துபடாது இருந்த என்

உயிர், இன்று இந்த மாலையிலே இறந்து படுகின்

றது. தோழி ! இனி, நீ சொல்லுவதால் பயன்
இல்லை!"

---

இன்பப்பிரிவு—க. பரத்தை

கசரு

## ஆறாம் ஆண்டு

### இன்பப்பிரிவு—க. பரத்தை

களம்:—தலைமகன் இல்லம்.
காலம்:—பின்பனியில் ஒரு பகல்.
கூத்தர்:—தலைமகள், தோழி.

தலைமகனுடைய உருவையும் திருவையும் குணத்தையும் குலத்தையும் கண்டு அவனிடம் வேட்கைமிகுந்து அவனை மணந்துகொண்ட மங்கையரும் இருந்தார். ஆடலும் பாடலும் ஊடலும் கூடலு மாகிய பெண்மை நலத்தில் உயர்ந்த பெண்டிரை, தலைமகனை மணப்பதற்கு முன்னும் பின்னும், தலைமகன் மணந்தும் இருந்தான். அவர்களுக்குத் தனது முகம் காட்டி மகிழ்வித்தற் பொருட்டும்; இன்பம் ஊட்டு தற்பொருட்டும், அவன் தலைமகளைப் பிரிந்து போயினான். அதை அறிந்த தலைமகள் 'ஏடி!

என்னை வெறுத்து என் தங்கைமாரிடம் சென்றார் கணவர்.. இன்று அவர் அன்பு இருந்தபடி கண்டாயா? அவர் தோளையும் மார்பையும் அயலாரும் தோயலாயிற்று. நாளை அவர் நம்மை நினைந்து வந்தாலும், அந்த எச்சிலான மார்பை நான் இச்சியேன்—தீண்டக் கூசுகின்றேன்! அவர் வரவு நோக்கி !வாழ்த்துவேனோ?'' என்று தோழியோடு சொல்லிப் பிணங்கியிருந்தாள். சில நாள் செல்ல தலைமகன் திரும்பி வந்தான். அவனைக் கண்டதும், தலைமகள் பிணங்கியே இருக்கமாட்டாமல் எதிர் ஓடி எற்றுக்கொண்டு கூடிக் குலாவினள். இவ்வாறு





மகளைத் தனியே கண்ட தோழி மறுநாள் நகையாடுகின்றாள்.

தோழி:—''கணவர் வந்தால் கலக்க மாட்டேனென்று

இத்தனை நாளும் வீம்பு பேசினையே, அடி! நேற்று

அவரோடு புலந்துகொண்டாயா? வந்ததே

வாரிக்
கொண்டாயே!—"
த-ள்:—(சற்று நாணம் அடைந்து புன் நகை செய்து)
"ஏடி! எம்மால் விரும்பப்பட்டவர் வந்து காமத்
தால் நாம் கருதியிருந்த—விரும்பிய—செய்கை
களைச் செய்கின்றார். செய்கின்றபோது 'இது பரத்
தையர் தோய்ந்த மார்பு' என்று அதைத தோய
நாணுகின்றோமா? அப்படிப்பட்ட நாணத்தை நாம்
கொஞ்சமும் அறிகின்றோமா? நிறை அழிந்து
மயங்கிவிடுகின்றோமே! அடி!—இது உனக்குத்
தெரியாதா?
நாணென ஒன்றோ அறியலம் காமத்தால்
பேணியார் பெட்ப செயின்.
(கஉருஎ) —"அவர் வந்தால் பிணங்கவேண்டும்; பிணங்கினல்

அவர் சொல்லாலும் செயலாலும் நம்மை வேண்
டிக்கொள்வார்; வேண்டிக் கொண்டாலும் நாம்
பிணக்கம் நீங்கர்திருக்க வேண்டும். என்று முன்
னே பலவாறு எண்ணிக்கொண்டிருந்தோம். அது
மெய்தான். ஆனல், அதையெல்லாம் மறந்து அவ
ரைச் சேரும்படியே நமமைச் செய்துவிட்டா
ரே! ஆ! அவர் பல பொய்களை வல்ல கள்வர். அவர்

இன்பப்பிரிவு—க. பரத்தை

களன்

சொல்லும் சொல்லோ, அத்தனையும் அன்பே உருவானது. அந்தத் தாழ்ந்த மொழிகள் அல்லவா நமது பெண்மை அழிக்கும் படையாகின்றது? அம் மாயக்கள்வருக்கு முன்னே—அவர் பணிமொழிக்கு முன்னே, நம் நிறை அழியாமல் என்ன செய்யும்? அடி!"

பன்மாயக் கள்வன் பணிமொழி அன்றோநம்
'பெண்மை உடைக்கும் படை.
(கஉருஅ)

—தோழி நகைக்கின்றாள்.

த-ள்:—"ஆமடி! நீ நகைப்பாய். இதைக் கேள்—
காதலர் வந்தார், அப்பொழுதே 'பிணங்க வேண்
டும்' என்று எண்ணி அவர் முன் நில்லாமல்
வேறோர் இடம் போயினேன். போயும், என்
நெஞ்சம் நிறையிலே நின்றதா? திடம் அழிந்தது.
அவரோடு கலக்கவே தொடங்கிற்று. அதை நான்
அறிந்து 'இனி முடியாது' என்று அவரைப் புல்லி
னேன். புலக்க வேண்டிய நெஞ்சமே கலக்க
வேண்டினர். நான் என்ன செய்வேன்? அடி!

புலப்பல் எனச்சென்றேன் புல்லினேன் நெஞ்சம்

கலத்தல் உறுவது கண்டு.
(கஉருகூ)

—"சில் மகளிர் தம்முடைய காதலரைக் கண்டால்,
அப்பொழுதே நிறை அழிவார். நிணத்தை நெருப்
பிலே இட்டால் உருகுவதுபோல நெஞ்சம் உருகு
வார். அவ்வகையான மகளிர் 'காதலர்
எதிர்ப் கசஅ திருக்குறள் நாடகம்

பட்டாலும் நாம் ஊடியே இருப்போம். அவர்
உணர்த்தினாலும் உணராமல் அப்படியே நிற்
போம்' என்று எண்ணமுடியுமா? முடியாது.
அடி! நானும் அம்மகளிரில் ஒருத்தி. எனக்கும்
நிறை அழியாதிருக்க முடியாது."
நிணம்தீயில் இட்டன்ன நெஞ்சினார்க்கு உண்டோ
புணர்ந்தூடி நிற்பேம் எனல்.

## ஆறும் ஆண்டு

### இன்பப்பிரிவு—௧. பரத்தை

களம்:—தலைமகன் இல்லம்.
காலம்:—பின்பனியில் ஒரு மாலை.
கூத்தர்:—தலைமகள், தோழி.

தலைமகளைக் கலந்து வாழ்ந்திருந்த தலைமகன், சில நாளைக்குப் பின்பு, பின்னும் அவளைப் பிரிந்து பரத்தையரிடம் போயினான். அதுகண்ட தலைமகள் அவன் கொடுமை நினைந்து நெஞ்சம் புழுங்கி வாடினாள். ஒருநாள் தோழியை நோக்கி 'அடி! என் தங்கையர்மேல் வைத்த காதலால் கணவர் என்னைக் கையகன்றுபோயினார். அம்மங்கையர், அன்பில் மிக்கவரோ? அழகில் உயர்ந்தவரோ? ஐயோ! அவர் முன்னே நான் சூடிக் கழித்த சூட்டுமாலை ஆனேனே! என் வினையே!' என்று மானம் சுடுதலால் மனம் வெதும்பி வருந்துகின்றாள். உடன் இருந்த தோழி அவளை நகையாடுகின்றாள்.

தோழி:—(நகைத்துக் கொண்டே) "அம்மா! அவர்
பிரியக் குறித்தபோதே நீ பிணங்கிக் கொண்டிருக்
கவேண்டும். அப்படி பிணங்கிக் கொண்டால், உன்
பிணக்கத்திற்கு அஞ்சியாவது அவர் பிரியாமல்
இருப்பார்! அன்று ஏனடி நீ பிணங்க இல்லை?"

த-ள்:—"அடி! நான் பிணங்குவது எங்கே? காதலை
யுடைய நான் பிணங்குவது எங்கே? முடியுமா?
காதலுக்கு உள்ள குணம் கள்ளுக்கும் இல்லையே?
காதல், தன்னை நினைத்தாலே (உணர் வழியாத)
களிப்பைத் தருகின்றது. கண்டாலே, (உணர்

வ்ழிந்த) மகிழ்ச்சியையும் தருகின்றது.
கிளைத்தா
லே, களிக்கச் செய்யுமா கள்ளு? அல்லது,
கண்
டாலே மகிழச் செய்யுமா? உண்டால்தானே
செய்
யும்? இப்படிப்பட்ட காதலை யுடையவள்
நான்,
நான் பிணங்குவது எங்கே? அடி!
உள்ளக் களித்தலும் காண மகிழ்தலும்
கள்ளுக்கில் காமத்திற் குண்டு.
(கஉஅக)
—"பெண்டிருக்குக் கணவர்மேல் வைத்த
காதலா
னது பனையளவாக—
மிகுதியாக—உண்டாயிருக்க்
லாம். இருந்தாலும், அப்பெண்டிர் தமது
காதல
ரோடு பனையளவும் பிணங்கலாகாது. ஆம்,
சிறிதும்
பிணங்காமல் இருக்கவேண்டும்.
தமே மிகும்!
பிணங்கினல், வருத்

தினைத்துணையும் ஊடாமை வேண்டும்
பனைத்துணையும்
காமம் நிறைய வரின்.
(கஉஅஉ)

II



—"அவர் நம்மை பேணவும் இல்லை. அடி! தாம்
வேண்டியவற்றையே செய்கின்றார்.—என்னைப் பிரி
ந்து பரத்தையரிடம் போகின்றார். இப்படி யெல்
லாம் செய்தாலும், என் கண்ணானது அவரைக்
காணமல் இரேன் என்கின்றதே!—காணவே விரை
கின்றதே! அப்படிப்பட்டவரோடு நான் எப்படி

பிணங்குவது? அடி!
பேணாது பெட்பவே செய்யினும் கொண்கனைக்
காணாது அமையல கண்
(கஉ அரு) —"தோழி! என் நெஞ்சின்
செய்கையைக் கண்
டாயா? காதலரைக் காணுமுன்னே அவர்
செய்த
பிழையை எல்லாம் இதற்கு எடுத்துச்
சொல்லி வைத்தேன். இதனோடு
நினைத்திருந்தேன். அவர்
வந்தபோது, அவரோடு பிணங்குதற்கே
நான்
சென்றேன். ஆனால், இது அவரைக்
கண்டதும்
நான் சொல்லியிருந்ததை முழுவதும்
மறந்தது;
திடம் அழிந்தது; கூடுதற்கே சென்றது.
நான்
என்ன செய்வேன்? என் னால்
பிணங்கமுடியா

தாயிற்று!

ஊடற்கட் சென்றேன்மன் தோழி அதுமறந்து
கூடற்கட் சென்றதென் நெஞ்சு
(கஉஅச)

—"அடி! நமது கண்ணும் நாமும் ஒருவிதத்தில் ஒத்

திருக்கிறோம், கண்டாயா? எழுதும்முன்னெல்லாம்

கண்ணனது அஞ்சனக் கோலினது கருமை கண்

டிருக்கின்றது. ஆனால், எழுதுகின்றபோது அக்

கோலினது இயல்பைக் காணமாட்டாதாகின்றது.

இன்பப்பிரிவு—க. பரத்தை

நாமும் கொழுநரைக் காணுதபோதெல்லாம், அவர்
பிழையை எண்ணி யிருக்கின்றோம்: அவரைக்
காணுகின்றபொழுது அதை முழுதும் மறந்துவிடு
கின்றோம். இந்தத் தன்மையில் இருக்கின்றோம்
நாம். இனிமேலும், பிணங்க முடியுமா?
எழுதுங்கால்கோலகாணுக்கண்ணேபோல்கொண்க
ண் பழிகாணேன் கண்ட விடத்து
(கஉஅரு) —"காதலரைக் காணுத காலத்தில் அவருடைய
தவறு மட்டுமே நான் கண்டிருந்தேன்—அவர்
பிழையையன்றி வேறு ஒன்றும் எனக்குத் தெரிய
இல்லை. உன்ஞேடும் சொல்லிக் கொண்டேனே!
இன்று, அவரைக் காணுகின்ற காலத்தில், அவர்
பிழையில் ஒன்றும் நான் காண்கின்றிலேன். எல்

லாம் நன்ருகவே தோன்றுகின்றது. ஆகையால்,
நான் பிணங்க இல்லை. அடி!
காணுங்கால் காணேன் தவருய காணுக்கால்
. காணேன் தவறல் லவை .
(கஉஅகூ) —"தோழி! என்னைப் பிணங்கச் சொல்லுகின்ருயா?
பிணங்கினுலும், பயன் என்னடி ? என்ருல் கடைசி
வரையும் பிணங்கியே இருக்க முடியாதே! ஓடு
கின்ற வெள்ளத்தில் பாய்ந்தால் அது நம்மை ஈர்த்
துக்கொண்டு போய்விடும் என்று அறிந்திருந்தும்
பாயலாமா? பாய்ந்தால், அடித்துக் கொண்டே
போய்விடும். நான் பிணங்கினுல், பிணங்கியே
இருக்க முடியாது. ஆகையால், அந்தச் செய்கை
யால் பயன் இல்லை. அடி!"

உய்த்தல அறிந்து புனல்பாய் பவரேபோல்
பொய்,நதல் அறிந்தென் புலநது.
(கஉஅஎ)

---

## ஆறும் ஆண்டு
### இன்பப்பிரிவு—க. பரத்தை

களம்:—தலைமகன் இல்லம்.
காலம்:—பின் பனியில் ஒரு பகல்.
கூத்தர்:—தலைமகன், தலைமகள், தோழி.

பரத்தையிடம் பிரிந்திருந்த தலைமகன் சிலகாலம் சென்று தன் இல்லம் திரும்பி வந்தான். வநதவன், தலைமகளிடம் நேரே செல்ல இல்லை. ஏனென்றால், தன்மேல் அவள் பிணக்கம் கொண்டிருக்கின்றபடியால், தன்னை எதிர்கொண்டு ஏற்றுக்கொளளாமல் மறுக்கவும கூடும் என்று அஞ்சினான். அவளுடைய பிணக்கத்தை ஒழித்து வரும்படி தோழியை முன்னதாக அனுப்ப எண்ணியிருந்தான்.... .இவன் இவ்வாறாக, தலைமகள், தன்னைப் பிரிந்துபோன கொடுமை எல்லாம் நினைந்து மிகவும் பிணங்கி இருந்தாள். ஆயினும், அவன்

வருகை அறிந்ததும் அவள் நெஞ்சம் அவன் பிழை முழுதும் மறந்தது. பிணக்கமும் ஒழிந்தது. அவனைச் சேரவே விரைந்தது. அது கண்ட தலைமகள் தன்னுடைய நெஞ்சத்தோடு புலந்து கூறுகின்றாள்.

த-ள்:—"நெஞ்சே! அவர் நெஞ்சு நம்மை நினைக்

கின்றதா? அவருக்கே ஆகி நிற்கின்றதே!—அவர்

இன்பப்பிரிவு—க. பரத்தை கருரு

எண்ணப்படிக்கே இசைகின்றதே! நீ மட்டும் ஏனோ எனக்காக நிற்க இல்லை? அவரிடம் குற்றம் கண்டும் அவரோடு பிணங்காதொழிகின்றாய். அவரையே நினைக்கின்றாய்.—ஒரு காரியத்தை நீயாகச் செய்யா விட்டாலும் செய்வாரைக் கண்டாகிலும் செய்ய லாகாதா?—அவர் நெஞ்சைக் கண்டு அதுபோல நீ செய்யலாகாதா? அதுவும செய்ய இல்லையே!

அவர்நெஞ்சு அவர்க்குஆதல் கண்டும்
எவன்நெஞ்சே நீஎமக்கு ஆகா தது.

(கஉகக) —"என் நெஞ்சே! அவர் இப்போது

நமமேல் அன் புடையவர அல்ல. இந்த உண்மையை நீயும் அறிந் திருக்கின்றாய். இருந்தும், அவருடைய பழைய விருப்பத்தை எண்ணி, 'நாம் சென்றால், அவர் வெகுளார்' என்று அவரிடம் செல்கின்றாய்! இது என்ன மடமை! நீ எண்ணியது முடியுமா?

உறுதவர்க் கண்ட கண்ணும் அவரைச்
செறாரெனச் சேறிஎன் நெஞ்சு.
(கஉகூஉ) —"நெஞ்சே! என்னைவிட்டு அவர்பின் செல்வதை நீ
முன்னமே பழகியிருக்கின்றாய். இன்றும், என்
னிடம் நீ நிறகமாட்டாய். நீ விரும்பியபடியே
அவரிட ம் செல்கின்றாய். இதற்குக் காரணம் 'இவள்
மானம் அழிந்தாள்; இவள் நட்பால் நமக்கு என்ன
வரும்?' என்று எண்ணியோ? அல்லது உன் இயல்
போ? சொல்லு —கெட்டார்க்கு நட்டார் உலகத்
தில் இல்லை. தளர்ந்த காலத்திலே

தாழ்ந்தவர். இன்று, அவர் உறவே ஆயிற்று உன்
உறவும்!
கெட்டார்க்கு நட்டார்இல் என்பதோ நெஞ்சே நீ
பெட்டாங்கு அவர்பின் செலல்.
(கஉகூரு) —"நெஞ்சே! முன்னெல்லாம் பிணங்குவதாக எண்ணி
இருக்கின்றாய். அவரைக் கண்டபொழுதே இன்
பம் உண்ண எண்ணிவிடுகின்றாய். அவர் பிழை
யை நோக்குகின்றாயா? முன்னே புலவியை உண்
டாக்கி, அதனை அளவோடும் அறிந்து, பின்னே
இன்பம் உண்ணமாட்டாய். இனிமேல் அப்படிப்
பட்டவற்றை—பிணங்கும் விதங்களை—உன்னோடு
எண்ணுவார் யார்? நான் அதைச் செய்யேன்!"
இனியன்ன நின்னொடு சூழ்வார்யார் நெஞ்சே
துனிசெய்து துவ்வாய்காண் மற்று.

(கஉகூச).

இவ்வாறு தலைமகள், தனது நெஞ்சத்தோடு புலந்துகொண்டு இருக்கின்றாள். அப்பொழுது அவளை ஊடல் தீர்த்துவரும்படி தலைமகனால் அனுப்பப்பட்ட தோழி அங்கே வருகின்றாள்.

த-ள்:—(தோழி செவியில் விழும்படி) "ஐயோ! என் நெஞ்சு எக்காலத்தும் நீ வகாத துன்பமே உடைய தாயிற்று. என்ன செய்வேன்? அவரை அடையாத போது, 'அடைய இல்லையே!' என்று அஞ்சுகின்றது.—அண்மையில் உள்ள காதலரை அணையாதுவிடுதல் அழகல்ல என்று நினைக்கின்றது. அவ



ரை அடைந்தபோது, 'இன்னும் பிரிவரே!' என்று அஞ்சுகின்றது—'முழுதும் இன்பம் உண்ண முடியாது; இவர் பிரிந்து போவார்; என்ன

செய்
வோம்?" என்று ஏங்குகின்றது. இப்படியே இதை
யும் அதையும் . இடைவிடாது நினைத்து எந்நாளும்
துன்பமே அடைகின்றது.

பெருமை அஞ்சும் பெறின்பிரிவு அஞ்சும்
அரு இடும்பைத்தென் நெஞ்சு.

(கஉகரு) —"அவர் பிரிந்துபோனார். என் நெஞ்சு என்னிட
மே இருந்தது. என்னைவிட்டுப் பிரிய இல்லை. ஏதன்
பொருட்டு இங்கே இருந்தது தெரியுமா? அவர்
கொடுமைகளை எனக்கு நினைவூட்டி ஆற்றாமையை
விளைக்கவே! ஆம். வேறென்ன?—அன்று என்
காதலரைப் பிரிந்திருந்த நான், அவர் கொடுமை
களை இந்த நெஞ்சோடு நினைத்தேன் . அவ்வளவை
அறிந்து, இது என்னைத் தின்பதுபோலத் துன்பம்

செய்தது.—இன்றைக்கு அந்தக் கொடுமைகளை
நோக்கி அவரோடு பிணங்குவதற்கா இருந்தது?

இல்லை. இல்லை! என்னைத் துன்பம் செய்யவே!
தனியே இருந்து நினைத்தக்கால் என்னைத்
தினிய இருந்ததென் நெஞ்சு. (கஉ கூசு)

—"ஆ! என் நெஞ்சு! தன்னை மறந்த காதலரைத்
தான் மறக்கமாட்டாதது!—ஒரு நினைவில்—நிலை
யில் நில்லாதது! அவர் கொடுமைகளை, அவரைக்
காணாதபோது, நினைந்து கண்டபோது மறக்கும்



தவறுடையது; அந்தக் கொடுமைகளை அவரைக் காணுதபோது, மறந்து கண்டபோது நினைந்து பிணங்கும் அறிவற்றது! அவரைக்கண்டபொழுதே கூட்டத்திற்கு விரைவது! இப்படிப்பட்ட மடநெஞ்சுடனே கூடி, ஐயோ! என் நாணத்தையும் மறந்

தேனே!—என் உயிரினும் சிறந்த நாணத்தையும் மறந்து விட்டேனே! ஆ!

நாணும் மறந்தேன் அவர்மறக்க அல்லாஎன்
மாணா மடநெஞ்சில் பட்டு.
(கஉஎள)

—"இந்த நெஞ்சு உயிர்மேல் காதலை உடையது! இனி
விற்கும் அஞ்சுகின்றது! ஆகையால், கூடவே கருதுகின்றது.—'நம்மை எள்ளிச் சென்றாரென்று நாமும் அவரை எள்ளலாமா? அவருக்கு வாயில் மறுக்கலாமா? மறுத்தோமானால், வழிபடாமை என்னும் பழியும் எம்மைச் சேரும். பிரிவாற்றாமையும் பிறக்கும். நாணும் நிறையும் முதலிய குணங்களை இழத்தலும் வரும். இவ்வளவு இளிவும் உண்டாகும்' என்று கருதி அவர்திறத்தினையே நினைக்கின்றது.—அவருக்கு வாயில் நேருகின்றது; அவர் வரவும் உடம்படுகின்றது. இவ்வாறு இளிவிற்கும் அஞ்சி இறக்கவும் மாட்டாமல் கூடவே கருதுகின்ற நெஞ்சத்துடனே நான் என்ன செய்ய முடியும்?"

எள்ளின் இனிவாம்என் றெண்ணி அவர்திறம்
உள்ளும் உயிர்க்காதல் நெஞ்சு.
(கஉகூஅ)

## இன்பப்பிரிவு—க. யாத்தை

கருள்

இவ்வாறு தலைமகள், தன்னுடைய நெஞ்சம் தலை மகனைக்கூட விரைகின்றதையும் தான் அவனோடு புலக்க விரும்புகின்றதையும் தோழி கேட்கப் பேசுகின்றாள். அதுகேட்ட தோழி, தலைமகள் வழியே நின்று அவளை ஊடல் தீர்க்கவேண்டி இப்படி சொல்லுகின்றாள்.

தோழி:—(நகையாடிக் கொண்டு) "அம்மா! நீ அவரை விரைந்து சென்று புல்லாதே! இந்தத் தொழிலையே

நீ மலிட்டுக்கொண்டிரு.
பிணங்கிக்கொள்ளு. விரை

வாக இணங்கிவிடாதே. ஆமாம்.
அப்படி பிணங்

கிஞலே, காதலர் அடையும் அல்லல்
நோயை நாம்

சிறிது காணலாம்.—துன்பத்தைச்
செய்யும் காத

ஞெயினல் அவர் படுகின்ற
பாட்டை நாம் சிறிது

பாாக்கலாம்!

புல்லாது இராப் புலத்தை அவருறும்
அல்லல்நோய் காண்கம் சிறிது (க
௩0௧)

—"ஆனல், நீ நெடுநேரம் பிணங்கியிருக்கக்
கூடாது ;

கூட்டத்தை இன்பம் செய்வதற்குப்
புலவியும் சிறி

து வேண்டியதே;—உண்ணும்
உணவிற்கு வேண்டு

மளவாக உப்பு இட்டால், அது
இன்சுவை ஆக்கும்.

அளவில் சிறிது விஞ்சிவிட்டால்
அப்பண்டம் கசப்

பேறிக் கெட்டுவிடும். அதுபோல, இப்புலவியை

நீயும் அளவில் சிறிது மிகவிட்டால், கூட்டமானது

இன்பம் அழிந்து விடும்.—அளவு அறிந்து உணரா மல் பிணங்கியே இருந்தால், காதலருக்குக் கூட்



டத்தின்மேல் எழுந்த குறிப்பு அடங்கி விடும்.

அப்பொழுது புலவி, இன்பம் ஆகுமா? ஆகை

யால், சிறிதும் நீள விடலாகாது."

உப்பமைந் தற்றால் புலவி அதுசிறிது
மிக்கற்றால் நீள விடல். (க
கூ0உ)

இவ்வாறு தோழி சொல்லக் கேட்ட தலைமகள், தான் கொண்டிருந்த புலவி ஒழிந்தாள். ஒழிந்து, கூட்டத்திற்கே விரைந்து வாயில் நேர்ந்தாள். அது கண்ட தோழி,

தலைமகனிடம் திருமபி வந்து, நகை முகத்தோடு நின்று, தலைமகள் வாயில் நேர்நதனைத் தெரிவிக் கின்றாள்.

தோழி:—(நகைத்துக் கொண்டே) "ஏ! கள்வரே!

உங்கள் மார்பு எங்களுக்குக் கள்ளே காணும். குடி

யர் கள்ளை வெறுப்பாரா? விடுவாரா? தன்னை

உண்டு களித்தாருக்கு அது இளிவரத்தக்க இன்னா

தனவற்றையே செயயும்!—நாணம் குறைக்கும் ;

நிறை கெடுக்கும்; ஒழுக்கம் அழிக்குமெ; உணர்வு

ஒழிக்கும்.—இவை எல்லாவற்றையும் செய்தாலும்

குடியர் அதை விடவே மாட்டார்; மேன்மேலும்

விரும்புவார். அதுபோல அல்லவோ உங்கள் மார்பு

எங்களுக்கு? எவ்வளவு கொடுமையைச்

செய்தா
  னும் அதை விடாமல் விரும்புகின்றோம்
நாங்கள்.
  நீங்கள் வஞ்சகர் அல்லவோ?—உங்கள் வரவை
எற்
  றுக்கொண்டாள் என்தோழி!"
இளித்தக்க இன்னா செயினும் களித்தார்க்குக்
கள்ளற்றே கள்வநின் மார்பு.
(கஉஅஅ)

இன்பப்பிரிவு—க. பரத்தை கடுகூ இவ்வாறு சொல்லக் கேட்ட தலைமகன் உள்ளம் களித்துத் தலைமகளிடம் செல்லுகின்றான்.



ஆறும் ஆண்டு

இன்பப்பிரிவு—க. பரத்தை

களம்:— தலைமகன் இல்லம்.

காலம்:—பின்பனியில் ஓர் இரவு.

கூத்தர்:— தலைமகன், தலைமகள்.

பரத்தையிடம் பிரிந்திருந்த தலைமகன் சிலகாலம் சென்று தன்னுடைய இல்லிடம்

திரும்பி வந்தான்.

வந்தானைத் தலைமகள் வரவேற்றுக் கொள்ளாமல்

பிணங்கியே இருந்தாள். அவள் பிணக்கத்தைப்

போக்கி வரும்படி தோழியை அனுப்பினான். தோழி

அப்படியே தலைமகளிடம் சென்று "அம்மா! நாம்

போகப் பெண்களோ? கற்புடைமகளிர மனையில இரு

ந்து கணவரை வழிபடுவார். மக்களை வளர்ப்பார்.

விருந்து ஊட்டுவார். அன்றி, ஊடலும் துனியும்

கொள்வாரோ?—வண்டை ஒபபார ஆடவர்; பூவை

ஒப்பார் பெண்கள். நம் கணவர் போம்பொழுதுபுறம்

தொழுது, வரும்பொழுது முன்தொழுது அவரை

எற்றுக் கொண்டு வழிபடுதல் அல்லது எதிர்த்துக

கொண்டு வழிமறுத்கல ஆகுமோ? இது நமக்கு நன் றல்ல. அவரை வருந்தச் செய்து நமககு வருகின்றது என்ன?’ என்று பலகாரணமும் காட்டினாள். காட்ட, தலைமகள் பிணக்கம் நீங்கினாள். நீங்கியதைத் தோழி

வழியாக அறிந்த தலைமகன், தலைமகளிடம் சென்று



பள்ளியிடத்தே இருந்தான். அவனைக் கண்டதும், தலைமகளுக்கு உள்ளே இருந்த சினம் பொங்கிற்று; கண் சிவந்தது; நுதல் வேறுபட்டு வேர்த்தது. அவள் சிவப்பு ஆற்றுதற்காக, தலைமகன் சில குளிர்ந்த மொழி கூறினான். அது கேட்ட தலைமகள் மனம் வெதும்பி, முகம் திரும்பியிருந்து மொழிகின்றாள்.

த-ள்:—(கடுகடுத்து) “இங்கே வந்துவிட்டீர்களே!

ஐயோ! பாவம்! அங்கே உங்கள காதலிமார் எல
லாம் உங்களேக் காணுமல் கலங்கியிருப்பார்! போங்
கள்! இனி, ஆற்றமாட்டார்! உங்களேப் பெருமல்
புலநத மகளிரைப் புலவு நீக்கிப் புல்லவேண்டா?
புல்லாவிட்டால், முன்னமே துன்பமுற்று அழிந
தாரை அதன்மேலும் மிக்க துன்பத்தைச் செய்வ
தே ஆகும். போங்கள்; அவ்விடம் போங்கள்.

அலந்தாரை அல்லல்நோய் செய்தற்றல் தம்மைப்
புலந்தாரைப் புல்லா விடல்.
(கங0ங)

—"எங்களே ஊடல் உணர்த்தல் வேண்டா!
நீங்கள வேறிடத்தே போயிருந்தாலும், எங்கள்
புதல் வரைக் கண்டு நாங்கள் ஆற்றியிருப்போம்!
உங்க ளோடு ஊடுதற்கு உரியமோ நாங்கள்?

அவர்களே அதற்கு உரியவர்! உங்களோடு ஊடிய காதலி மாரை ஊடல் உணர்த்திக் கூடாவிட்டால், முன்னமே நீரைப் பெறும்மல் வாடிய கொடியை அடியிலே அறுப்பதே ஆகும்! போங்கள். அவர் ஊடலை நீக்க அவ்விடம் போங்கள். இங்கே வேண்டா!"

இன்பப்பிரிவு—க. பரத்தை

கஉகூ

ஊடி யவரை உணராமை வாடிய
வள்ளி முதல்அரிந் தற்று.
(௩௩௦௪)

இவ்வாறு தலைமகள் புலந்து பேசக் கேட்ட தலைமகன், அவளை ஊடல் உணர்த்துவானாயினன். அவன உணாத்த உணர்த்தவும், அவள் உணராது புலந்தே இருந்தாள். அது கண்ட தலைமகன் மனம் வாடி இவ்வாறு சொல்லிப் புலம்புகின்றான்.

த-ன்:—(தலைமகள் கேட்கும்படி) "காமத்தின் மென்மையை எல்லாரும் அறிவாரா? அது மலரைக் காட்டினும் மெல்லியது

ஆயிற்றே!—குறிப்பும் வேட்கையும் நுகர்ச்சியும் இன்பமும் ஒரு காலத்திலேயே ஒத்து நுகர்தற்கு உரியார் இருவர் அதற்கேற்ற இடமும் காலமும் உபகரணங்களும் பெற்றுக் கூடியே காம இன்பம் நுகரவேண்டும்! இவற்றுள் யாதேனும் ஒன்றினால் சிறிது வேறுபட்டாலும் அவ்வின்பம் வாடிவிடும்.—எல்லாவற்றினும் மெல்லியதாகிய மலரும், தொட்டாலன்றி மணச்செவ்வி மாறாது ஆகையால், காம இன்பம் மலரைக் காட்டினும் மெல்லிதாயிருக்கும். அப்படி மெல்லிதாயிருத்தலை அறிந்து அதன் செவ்வியைப் பெறுவார் உலகத்துச் சிலரே ஆவர்! இவள் குறிப்பு வேறுபட்டிருக்கின்றபடியால் நானும் அது பெறுகின்றேனா?

மலரினும் மெல்லிது காமம் சிலர்அதன்
செவ்வி தலைப்படு வார்.

11

(கஉஅகூ) ககூஉ திருக்குறள் நாடகம்

—"ஓ! இவள் என் காதலி அல்ல!—முன் ஒரு நாள்

புல்லல் விதப்பினால் சென்றேன். சென்ற

என்
ஞேடு அவள் கண் சிவந்தாள். ஆயினும்,
ஊடி
ஒரு சொல்லும் உரைத்திலள். சி
வந்திருந்ததும்
சில நேரமே! புல்லுதலை என்னினும்
அதிகமாக
விரும்பினுள். ஆதலால, அச்சிவப்பையும்
அப்
பொழுதே மறந்து கூடிவிட்டாள். அதனுல்,
நான்
இத்தன்மையேனுகவும் விருப்பின்றி
ஊடிநிற்கின்ற
இவள் அவள் அல்ல அவளே ஆனுல்
இப்படி
ஊடல் நீடி உணராதிருப்பாளோ?
கண்ணிற் றுனித்தே கலங்கினுள் புல்லுதல்
என்னினும் தான்விதுப் புற்று.
(கஉ-கூ0) —(கூட்டத்தில் விரும்புகின்ற தன்
நெஞ்சைப் பழி
த்து) "ஐயோ! எனக்கு உரித்தாகப் பெற்ற
நெஞ்
சமும் எனக்குத் துணையாகின்றதா? இவளை

அண
பிலலாதவள் என்று விட்டுவிடாமல்
கூட்டத்திற்கே
விரைகின்றதே! என்ன செய்வேன்?
ஒருவருக்குத்
துன்பம் வந்தபோது அது நீக்குதற்கு
அவர்
நெஞ்சமே துணையாக வேண்டும். அது
துணையாகா
விட்டால், துணையாவார் வேறொருவர்
உண்டா?
எனக்குத் துணையாவார் யாரும் இல்லை.
ஆதலால்,
இன்பத்தைப் பட்டே ஆகவேண்டும்.
துன்பத்திற்கு யாரே துணையாவார் தாம்உடைய
நெஞ்சம் துணை அல் வழி.
(கஉகக) —"ஒருவருக்கு உரித்தாக உடையது
நெஞ்சமே.
அது அவருக்குத் தமராகவேண்டும்.
அதுவே உற.

இன்பப்பிரிவு—க. பரத்தை

வல்லாத போது அயலார்
அவருக்கு உறவல்லர்
ஆதலைச் சொல்லவேண்டுமோ?
இவள் ஒருத்தியைக்
காதலி என்று கருதி என்
நெஞ்சமே என்னை
வருத்துகின்றதே! இவள் என்னோடு
புலந்து என்னை
வருத்துகின்றது புதுமையோ?''
தஞ்சம தமரல்லர் ஏதிலார்
தாம்உடைய
நெஞ்சம் தமர்அல் வழி.
(கூ00)
இவ்வாறு தலைமகன் மனம்
நொந்து வருந்தி ஞன். அது கண்ட
தலைமகள் மனம் இரங்கி ஊடல்
தீர்ந்தாள். தீர,அவன் அவளோடு
இன்பம் உண்டான்.
உண்டு, அவ்இன்பத்திற்கு ஏதுவாகிய
புலவியை விய
ந்து கூறுகின்ருன்.
த-ன்:—"ஆ! எவ்வகைப்பட்ட
தலைவருக்கும் அழகா

வது யாது? பூப்போன்ற
கண்ணுருடைய—காதலி
மாருடைய நெஞ்சினிடத்து நிகழும்
புலவி மிகுதி
அல்லவோ? நறகுணமுடைய
நலலாருக்கும-தவறே
இல்லாதவருக்கும்—புலவி மிகுதி
இல்லாவிட்டால்
இன்பப்பயனை எய்தலாகுமோ? பு
லவி இல்லாவிட் டால் இன்பம்
இது !
புல்லென்று போகும். உண்மை
நலத்தகை நல்லவர்க்கு ஏர் புலத்தகை
பூவன்ன கண்ணார் அகத்து.
(கூ0டு) —"ஆமாம்! முதிர்ந்த
கலாமாகிய துனியும் வேண்
டும்! இளைய கலாமாகிய புலவியும்
வேண்டும்! இந்த
இரண்டும் இல்லையானல்,
காமமானது பழுத்தனி
ந்த கனியைப்போல
உண்ணுவார்க்கு மிகவும்

இனிமையாகிவிடும், அல்லது பழுக்காத
கருக்
காயைபபோல இனிமையே இராது.
ஆகையால்,
துனியும் புலவியும காதலருக்கு மிகவும்
வேண்டும.
துனியும் புலவியும் இலலாயின் காமம்
கனியும் கருக்கையும் அற்று
(கஙOரு) —"இப்படி வேண்டப்படுகின்ற
ஊடலினிடத்தும்,
ஒ! ஒரு துன்பம் உண்டு—'இனிப் புணர்ச்சி
நீட்டி
க்குமோ, அல்லது நீட்டியாதோ?' என்று
காதலர்
கருதுகின்றார் . கருதுகின்றபடியால் அ
வர்கொண்ட
ஊடலே கூடலில விரைகின்றது, அதலால்
இன்
பத்திற்கு இன்றியமையாத ஊடலினிடத்தும்
ஒரு
துன்பம இலலையா?"

ஊடலின் உண்டாங்கோர் துன்பம் புணர்வது
நீடுவது அன்று கொல் என்று.
(கூகூ0எ)

---

## ஆறும் ஆண்டு

### இன்பப் பிரிவு—க. பரத்தை

களம்:—தலைமகன் இல்லத்தைச் சார்ந்தஒருபொழில் காலம்:—பின்பனியில் ஒரு பகல்.

கூத்தர்:— தலைமகன், தோழி.

தலை மகள் பிணக்கத்தைத் தணித்தற் பெ ாருட் டாகவே தலைமகன் சிலகாலம் பரத்தையிடம் பிரிந்து செல்லாமல் தலைமகளோடு கூடி வாழ்ந்திருந்தான்.

இருந்தும், தலைமகள், தான் கொண்ட ı ]லவிக்குறிப்

பினை மாறவில்லை. அது கண்ட தோழி, 'இதற்குக் கார ணம் இவளைக் கேட்டறியலாகாது' என்று தலைமகனை



நாடிச் சென்றாள். சென்று அவனைப் பொழிலிடத்தே

தனிமையில் கண்டு, சார்ந்து வலங்கொண்டு நின்று, "ஐய! என் தோழியோடு நீங்கள் கூடி வாழ்கின்றீர். வாழ்ந்தும், அவள் புலவிக் குறிப்பைப் போக்காதிருக் கின்றாள். இதற்குக் காரணம் யாதோ?" என்று வின வினாள். இவ்வாறு வினவப்பட்டதலைமகன்மறுமொழி கூறுகின்றான்.

• த-ன்:—"நங்காய்! உன் தோழி புலக்க ஒரு காரண
 மும் வேண்டுமோ? அன்று ஒரு நாள் மாலையை
 வளையமாகச் சூடினேன். அதைக்கண்டு கடுகடுத்து
 நோக்கி, 'ஓ! நீங்கள் காதலிக்கின்ற ஒருத்திக்கு
 இப்பூஅணி காண விருப்பம்போலும்! அவளுக்குக்
 காட்டவேண்டியே இம்மாலையை இப்படி சூடிக்
 கொண்டீர். இது நான் அறியேனா?' என்று காய்ந்
 தாள்.—பின்னொருநாள், இந்த நிலத்தில் இல்லாத
 வேறு நிலத்துக் கோட்டுப் பூவைச் சூடி னேன்.

அதைக் கண்டு முகம் சுளித்து, 'இவ்விடத்தே உங்
கள் காதலிமார் பலர் இருககின்றார்கள். அவருள்
ளே யாருக்கு இந்த வேற்றுப்பூஅணி காண விருப்
பம்? இது யாருக்குக் காட்டவேண்டிச் சூட்டிக்
கொண்டீர்?' என்று வெகுண்டாள். இப்படிப்பட்ட
உன் தோழிக்கு என்ன காரணம் வேண்டும்?
'கோட்டுப்பூச் சூடினும் காயும் ஒருத்தியைக்
காட்டிய சூடினீர் என்று.
(கரு கரு)
—''ஒரு நாள் 'எல்லாரைக் காட்டினும் நாம் மிக்க
காதலையுடையோம்' என்றேன்.
அவ்வளவுதான். ககூகூ திருக்குறள்
நாடகம்

அதைக்கேட்டதும உன் தோழி கண்சிவந்து நோக்கினள். 'எல்லாரைக் காட்டினுமா? எல்லாரைக் காட்டினும் என்னிடத்தில் மட்டுமா மிக்க காதலை

யுடையீர்? ஆயின், உங்களுக்குக் காதலிமார் பலர் இருக்கின்றார்கள்! அவர்கள் எல்லாரிடத்திலும் நீங்கள் வைத்த காதலைக்காட்டிலும், என்னிடத்தில் நீங்கள் வைத்துள்ள காதலே மிகுதி யென்றல்லவோ சொல்லுகின்றீர்கள்? ஆ! ஆ! நன்றாய் இருந்தது உங்கள் காதல்!' என்று நகைத்துப் புலந்தாள். கண்டாயா? நங்காய்! 'காமம் உண்ணுதற்கு உரியவர்கள், ஆடவரும் மகளிருமாகிய இருவரே. அவர் யாவரைக் காட்டினும் நாம் இருவரும் மிக்க காதலையுடையோம்' என்னும கருததோடு என் அன்பு மிகுதியால் சொன்னேன் நான். அதை அவள் கருத்து வேறுபடக் கொண்டாள். கொண்டு, அதுவே காரணமாகப் புலந்தாள். அவள் புலவிக்கு வேறு காரணமும் உண்டோ?

யாரினும் காதலம் என்றேனா ஊடினாள்
'யாரினும் யாரினும் என்று.

(கஉகச)—"நங்காய்! ஒருநாள், என் காதல் மிகுதியால் 'இம்மையாகிய பிறப்பிலே—இப்பிறப்பிலே—நாம் ஒருவரை ஒருவர் பிரியோம்' என்றேன். இதில் என்ன குற்றம்? இப்படி சொல்லி நான் வாய் மூடுமுன்னே அவள் கண் நிறைய நீர வந்தது.—'இப்பிறப்பில் மட்டும் தானா? மறுபிறப்பில் என்னை விட்டுப் பிரியவா நினைக்கின்றீர்கள்? என்னைப் பிரிந்து யாரோடு.

கஙள்'

வாழப்போகின்றீர்கள்? மறுபிறப்பிலே பாவிநான்

உங்களோடு வாழத் தகுதியில்லையோ?' என்று

கலகல என்று கண்ணீர் சிந்திக் கலங்கிளுள். நான்

வெள்ளையாகப் பேசினேன். அதை அவள் என்

உள்ளத்திலே கள்ளம் வைத்துக் குறிப்பாகப் பேசி

யதாகக் கொண்டாள். நான் என்ன செய்வேன்?

என்னிடம் பிழை உண்டா?
இம்மைப் பிறப்பில் பிரியலம் என்றேனு
கண்நிறை நீர்கொண்ட னள்.
(கஙகரு) —“மற்றொரு நாள் நடந்ததைக் கேள்!—பிரிந்திருந்த

காலத்தில் உன்னையே இடைவிடாது
நினைந்தேன்

என்னும் கருத்தால் 'உள்ளினேன்'
என்றேன்.

அதைக் கேட்ட உன் தோழி
உலைவாய்போலக்

கொதித்தாள் —'என்னை உள்ளினீரா?
மற்று

யாரை மறந்தீர்? உங் கள காதலிமாரில்
யாரையா

வது அன்று மறந்திருந்ததற்கு இன்று
மனம்

வருந்துகின்றீரா?—அல்லது, 'உள்ளினேன்'
என்

றீர்; ஒருகால் மறந்ததை அல்லவோ,
பின்னும்

உள்ளவேண்டும்? ஆதலால், என்னை மறந்தும்
இரு

ந்தீர் ; அப்படி மறந்திருந்தபோது யாரை
நினைந்

திருந்தீர்? எவ்வளவு காலம் நினைந்திருந்தீர்? என்று

சொல்லி, என்னைப் புல்ல வந்தவளும் புல்லா

தொழிந்து புலந்து கொண்டாள். நான் ஒன்று

சொலலத் தான் ஒன்று கொண்டாள்.

கண்டாயா? உள்ளினேன் என்றேன்
மற்றுஎன்மறந்தீர் என்றென்னைப்,—புலலாள்
புலத்தக் கனள். (கூகசு)



—"உன் தோழியும் நானும் கூடி இருந்தோம். அப்

போது எனக்குத் தும்மல வந்து தும்மினேன்.

தும்மிய என்னைத் தன் இயற்கைபோல வாழ்த்தி

னள். அப்படி வாழ்த்தியவள் தானே, மறுபடியும்

புலந்தாள்.—'உங்களைப் பிரிந்து
வருந்துகின்ற மக
ளிர் பலர் உண்டு. அவருள்ளே யாவரோ
உங்களை
நினைக்கின்றார்கள். உங்கள்மேல்
அன்புடையவர்
நினையாவிட்டால் உங்களுக்குத் தும்மல்
தோன்றி
யிருக்குமோ? யாவரோ நினைத்தலாலே நீர் தும்மி
வீர்!' என்று சொல்லிப்
புலந்தழுதாள்—இலதாகிய
மகளிரவ ழுக்கையும்உளதாகக் கருதிப்
புலக்கின்றாள்

உன் தோழி! நான் என்ன செய்வேன்?
நங்காய்!
வழுத்தினள் தும்மினே னக அழித்தழுதாள்
யார்உள்ளித் தும்மினீர் என்று.
(கஉகள)

—"பின்னும் எனக்குத் தும்மல் வந்தது.
தும்மினல்,

உன் தோழி புலப்பாள் என்று அஞ்சி அந்தத்
தும்மலை அடக்கினேன். அப்படி அடக்கியதைக்
கண்டும்புலந்தாள்.—'உங்கள் காதலிமார் யாவரோ
நினைத்தார். உங்களுக்குத் தும்மல் வந்தது, அத்
தும்மலை எனக்கு மறைக்க எண்ணினீரோ? அடக்கி
விட்டீரே? ஆமாம், உங்களோடு ஒன்றும் உறவில்
லாத நான் அதை அறியலாகாது!' என்று சொல
வித் தேம்பி அழுதாள்.—நங்காய்! உன் தோழிக் குத் தும்மினாலும், குற்றம்; தும்மாமல் ஒழிந்
தாலும் குற்றம். இரண்டும் குற்றமானால், என்ன
செய்யலாம்?

தும்முச் செறுப்ப அழுதாள்
நுமர்உள்ளல்
எம்மை மறத்திரோ என்று.
(கரு௬அ)

—"நான் தும்மலை அடக்கியபடியால்
ஊடிய உன்
தோழியை எவ்வாறு
உணர்த்தலாம் என்று ஆரா
ய்ந்தேன். 'இவள் என்ன
சொன்னாலும் தெளியாள்;
நம்மேல் ஏற்றிய குற்றத்தை
ஒத்துக்கொள்வதே
தக்கது! என்று துணிந்தேன்.
துணிந்து, என்மேல்
சுமத்திய பிழையை உடம்பட்டுப்
பணிந்தேன்.
அதைக்கண்டதும் அவள்
வெகுண்டாள்—'உங்கள்
காதலிமார் பலர் உள்ளார்.
அவர் உங்களிடம்
பிழை கண்டு
பிணங்குவார்—பிணங்கியபோது

என்னைப் பணிந்து உணர்த்தியதுபோல அவரையும் பணிந்து உணர்த்தமாட்டீரோ?' என்று சொல்லிக் காய்ந்தாள். உணர்த்துதலும் புலத்தற்குக் காரணமானால், இவளிடம் செய்யதக்கது என்ன?

தன்னை உணர்த்ினும் காயும் பிறர்க்குநீர்
இந்நீரர் ஆகுதிர் என்று. (கூஉகக)

—"ஒன்றைச் சொன்னாலும் பிழையாகின்றது; ஒன்றைச் செய்தாலும் பிழையாகின்றது. எதையும் செய்யாமல் இருப்போம் என்றுவாளா இருந்தேன். இருந்தபோது, அவள் அவயவங்கள் ஒன்றை ஒன்று ஒவ்வாமல் அழகாயிருப்பதை நினைந்து அவற்றை நோக்கினேன். அது கண்டு, அவள்

கண் சிவந்தாள்.—"எல்லாம் பார்த்து ஆயிற்று?

நான், எல்லா அவயவங்களாலும் ஒருத்தியோடு

ஒத்திருக்க முடியாது! ஒவ்வொரு அவயவத்தால் .



ஒவ்வொருத்தியை ஒத்திருப்பேன்! ஆகையால், என் பல உறுப்பையும் நீங்கள் பார்த்தபடியால் உங்கள் காதலிமார் பலரையும் நினைத்திருக்கவேண்டும்! யாரையாரை உள்ளி என் எந்தஎந்த உறுப்பை நோக்கினீர்கள்? சொல்லுங்கள்' என்று புலந்தாள். நான் வாளா இருப்பதும் குற்றமாயிற்று. நங்காய்! இவள் புலக்க ஒரு காரணமும் வேண்டுமோ?"

நினைத்திருந்து நோக்கினும் காயும் அனைத்துநீர்
யார்உள்ளி நோக்கினீர் என்று.
(க௩௨௦).

---

ஆறும் ஆண்டு

இன்பப் பிரிவு—க. பரத்தை

களம்:—தலைமகன் இல்லம்.
காலம்:—பின்பனியில் ஒரு பகல்.
கூத்தர்:—தலைமகள், தோழி.

தலைமகனிடம் புலத்தற்கு ஒரு காரணமும் இல்லாதிருந்தும் தலைமகள் புலக்கின்றாள் என்பதைத் தோழி கேட்டறிந்தாள். அறிந்து, அவ்வாறு காரணம் இன்றியும் புலத்தற்கும் ஒரு காரணம் இருக்கவேண்டும்! என்று எண்ணி, தலைமகளை வினவித் தெளிதற்காக அவளிடம் சென்றாள். சென்ற தோழியைத் தனியே இருந்த தலைமகள் மலர்ந்த முகத்தோடும் கைநீட்டி ஏற்று, தன் அருகே இருக்கச் செய்தாள். பின்பு பள்ளியிடத்துத் தானும் தலைமகனும் கூடியிருந்ததும், அதுபோது அவனிடம் ஊடுதற்கு ஒருகார

## இன்பப்பிரிவு—க. பாத்தை



ணமும் இல்லையாகவும் காதல் கைமிகுதலால் நண் ணியதோர் காரணத்தை உண்டாக்கிக் கொண்டு, அதை அவன்மேல் ஏற்றித் தா ன்

ஊடியதும், அவ் வாறு ஊடியதனுல் தான அடைந்த இன்பமும், எல் லாம் நினைந்து, தோழியோடு மொழிகின்றுள்.

த-ள்:—"தோழி! இதுகேட்டாயா? நேற்று என் நாய

கரும் நாஹும பள்ளியிடத்தில் இருந்தோம். அப்

போது அவரோடு ஊடிஉரையாடாது இருந்தேன்·

உடனே அவர் ஒன்று செய்தார்—என்ன? தும்மி

ஞர். எதற்காகத தெரியுமா?—தும்மிஞல், 'நீடு

வாழ்க' என்று நான் வாழ்த்துவேன் ; வாழ்த்தும்

போது அவரோடு பேசுவேன். ஊடலும் நீங்கு

வேன் என்று இவ்வளவும் எண்ணித் துமமிஞர்.

அவர் கள்ளத்தைக் கண்டாயா? அடி!"

ஊடி இருந்தோமாத் தும்மிஞர் யாம்தம்மை

நீடுவாழ்கு என்பாக் கறிந்து.
(கருகஉ)

.

தோழி:—"என்னடி! அவருக்கு
இயல்பாக—இயற்கை
யில், தும்மல் வந்தே தும்மியிருக்கலாம்.
உன்
ஊடலை ஒழிக்கவா தும்மினர்? உன் குணம்
எனக்
குத் தெரியுமே! காரணம் இல்லாமலே
புலந்து
கொள்வாய்.—ஏனடி அப்படி வீணே
செய்
கின்றாய்?"
த-ள்:—"ஆமடி! அவரிடம் தவறு
இல்லாதிருந்தும்
நான் ஊடுகின்றேன்! அதறகுக் காரணம்
தெரியு
மா? அவர் என்னைப் பாராட்டும் விதம்
தான்!—
அவருடைய அன்பான பாராட்டை நான்
பெறு

கின்றேன். அந்த அருமையான பாராட்டினாலே
எனக்கு அளவிறந்த இன்பம் விளைகின்றது.
அதைக் கண்டதும் இப்படியே வேறு மகளிரும்
பெறுவாரே என்று எண்ணுகின்றேன். உடனே
பொறாமை பிறக்கின்றது. அதனால், ஊடல் உண்
டாகின்றது. வேறென்ன? அடி!''

இல்லை தவறவர்க்கு ஆயினும் ஊடுதல்
வல்லது அவ ரளிக்கு மாறு. (கங உக)

தோழி:—"ஊடாவிட்டாலும் அவர் பாராட்டை நீ
பெறக்கூடாதா? அப்படி இருந்தும் நீ ஊடி

ஊடி
வருந்துவது என்ன? அம்மா!"
த-ள்:—"அது வருந்துவது ஆகுமா? அடி!
ஆகாது
காதலரிடம் தவறில்லாமலே உண்டாகின்ற
ஊடல்
விரைவிலே நீங்கும். அதனல் உண்டான
துன்ப
மும் நில்லாது. அந்தத் துன்பத்தினலே
காத
லர் செய்யும் பாராட்டும் வாடாது.
வாடுமாயினும்
பின்னே பேரின்பம் பயவாதோ? அதனல்,
அது
வருத்தமெனப்படுமா?
ஊடலிற் றோன்றும் சிறுதுனி நல்லளி
வாடினும் பாடு பெறும்.
(கஉஉஉ) —"நாங்கள் நிலத்தோடு நீர்
கலந்தாற்போலிருக்கின்
றோம். நிலத்தோடு இயைந்த நீரானது அந்த
நிலத்

தின் இயல்பாகவே மாறும், எம்மோடு ஒறறுமை
யுடைய காதலரும் எம் இயல்பாகவே ஆயினர்.
அதுபற்றி அவரோடு புலவி நிகழ்கின்றது. அப்
புலவி பின்னே பேரின்பத்தை விளைவிக்கின்றது

இன்பப்பிரிவு—க. பரத்தை கண்டு

இந்த இன்பத்தைப்போல நமக்கு இன்பம் தருவ
தாகிய ஒரு விண்ணுலகமும் உண்டா? இல்லை.
அடி!"
புலத்தலி ன் புத்தேள்நாடு உண்டோ நிலத்தொடு
நீர் இயைந் தன்னாரகத்து.
(ககூஉங)
தோழி:—"ஆமம்மா! நீ சொல்லுகிறபடி அப்புலவி,

இன்பமே ஆகட்டும். ஆயினும், அது
எதனுல் நீங்
கும்?"

த-ள்:—"புலவி எப்படிப்பட்டது என்று
தெரியுமே?'
காதலரைப் புல்லிக் கொள்ளவும்
செய்யும்; பின்
விடவும் ஒட்டாது. இவ்வளவு
நன்மையைச் செய்
கின்ற அதனிடத்தே என் உள்ளத்தை
உடைக்கும்
படை உண்டாகின்றது; எப்படி
தெரியுமா? நான்
ஊடியிருக்கும்போது என்னை
காதலர் பணிந்த
மொழியாலும் தணிந்த செயலாலும்
பாராட்டு
கின்ருர். அந்த வணக்கமும்
வார்த்தையும் எனது
ஊடிய நெஞ்சத்தை
உடைத்துவிடுகின்றது. இப்

பொழுது, புலவியை நீக்குவது எதுஎன்று கண்டா

யா? அடி!"

புல்லி விடாப் புலவியுள் தோன்றுமென்
உள்ள ம் உ டைக்கும் படை.
(கருஉச)

---



ஆறும் ஆண்டு

இன்பப்பிரிவு—க. பரத்தை

களம்:—தலைமகன் இல்லம்.
காலம்:—பின்பனியில் ஓர் இரவு.
கூத்தர்:—தலைமகன், தலைமகள்.

தலைமகன் மறுபடியும் பரத்தையர் சேரியில் உலாப்போய் வந்தான். அதனை அறிந்த தலைமகள், அவனிடம் அளவில்லாத ஊடலை அடைந்தாள். அவ் ஊடலை, அவன், தோழியைக்கொண்டு பல காரணங் காட்டித் தெளிவித்தான். அவ்வாறு தெளிவிக்கப் பட்ட

தலைமகள், ஒரு பள்ளியில் இருவருமாகக் கூடியிருந்தபோது, காதல் மிகுகின்றபடியால் அவனுடன் புலந்துகொள்கின்றாள்.

த-ள்:—“ஐய! நீங்கள் பரத்தையர் நேயம் படைத்தவர். அவரோ நாணமும் கற்பும் முதலிய நற்குணங்கள் ஒன்றும் இல்லாதவர். பெண் இயற்கைமட்டும் உள்ளவர். அவர் யாவரும், நீங்கள் அவருடைய சேரியில் சென்றபோது, உங்களைக் கண்ணால் பொதுவாக உண்டிருப்பாரே! முறை இல்லாமல் ஒரு காலத்து ஒருங்கே நோக்கி இன்புற்றிருப்பாரே! அப்படி கண் எச்சிலாகிய உங்கள் மார்பை நான் நண்ணேன். தீண்டாதீர்.

விடுங்கள்;
 விடுங்கள்!"

பெண்ணியலார் எல்லாரும் கண்ணிற்
பொதுவுண்பர் நண்ணேன் பரத்தநின் மார்பு.
(கங்கக)

இன்பப்பிரிவு—க. பரத்தை

களரு

இவ்வாறு சொல்லிப் புலந்துகொண்ட தலைமகளைத் தலைமகன் கைகூப்பித் தாழ்ந்தான்; தலை தாழ்த்தி வணங்கினன்; குளிர்ந்த மொழி கூறினன். எது செய்தும், அவள் ஊடல் உணர இல்லை; அது கண்டு, அவன் மனம் நொந்து மொழிகின்றான்.

த-ன்:—"ஓ! இவள் என் காதலி அல்ல.
அவளாயின்,
 என் நோவை அறிந்திருப்பாள்.—'இவர் நம்
 பொருட்டாக நொந்தார்' என்று ஊடலை

இனிது
உணர்ந்திருப்பாள். என் நோவை அறியாத இவ
ளோடு புலக்கின்றதனால் பயன் என்ன? அன்புடை
யாரைப் பெறுதபோது ஒருவர் நோகின்றதனால்
பயன் உண்டோ? இல்லை.
நோதல் எவன்மற்று நொந்தாரென்று அஃதறியும்
காதலர் இல்லா வழி.
(கஉ0அ) —"உயிருககு இன்றியமையாத நீரும் நிழலிடத்திருந்
தால குளிர்சசி மிகுநது தாகம் தணிக்கும். அது
வே இனிதாகும்! வெயி லிடத்துள்ளதும் இனிது
ஆகுமோ? அதுபோலக் கலவிக்கு இன்றியமையாத
புலவியும் அன்புடையாரிடத்தே இனிதாகும். அவ
ரே ஆற்றுமைக்கு நோவார். கூட்டத்தில் வேட்

கையுடையாரும் ஆவார். ஐயோ! இவள் என்னிடத்தில், அந்த இரண்டும் இல்லாமையால் இப்புலவியும் துன்பமாகின்றதே!

நீரும் நிழலதினிதே புலவியும்
வீழுநர் கண்ணே இனிது.
(௧௩௦௯)



—"ஐயோ! என் நெஞ்சம் ஊடலில் இருந்துகொண்டு மெலிகின்றது. 'இவள் அன்பும் அருளும் இல்லாதவள்; விட்டிருக்கத தக்கவள்; இவளோடு கூட்டம் முடியாது' என்று எண்ண இல்லை. இவளை அன்பும் அருளும் உடையவளாகக் கருதி இவளோடு கூடுதற்கே முயலுகின்றதே! இப்படி முயலுகின்றதற்

குக் காரணம் என்ன? இதன் அவா அல்லது வேறு
உண்டா?"
ஊடல் உணங்க விடுவாரோடு என்நெஞ்சம்
கூடுவோம் என்பது அவா.
(கங௯௦)

இவ்வாறு தன்னைத்தானே
நொந்துகொண்ட தலைமகனைக்கண்டு தலைமகள், தான் கொண்ட ஊடல் நீங்கினள். நீங்கியவளை அவன் அன்போடு முயங்கினன். முயங்கி, பேரின்பம் அடைந்தான். பின்பு, தான் அடைந்த இன்பத்தைத் தன்னுள்ளே சொல்லுகின்றான்.

த-ன்:—"ஓ! ஊடலில் உண்டாகின்ற இன்பத்திற்கு
ஓர் அளவுண்டா?—மகளிரை ஆடவர் மட்டின்றி
விரும்புவார். ஆனல், மகளிரோ 'நீர் தவறு உடை
யீர்; உம்மைத் தீண்டோம்' என்று அடிக்கடி
ஊடிக்கொள்வார். அப்போது அம்மகளிர் மெல்

விய தோளே மேவப் பெருமல் ஆடவர்
பெரிதும்
அழுவார். அப்படி அழுகின்றதிலும் அவ்
ஆட
வருக்கு ஓர் இனபம் உண்டு. அதை
இப்படிப்
பட்டதென்று சொல்ல முடியுமோ? ஆடவர்
பிழை
யுடையாளுல் தாம் உண்ட
இன்பத்தோடுமேலும்·



ஓர் இன்பம் அடைவர். பிழையிலராளுலும் அவ
ருக்கும் ஓர் இன்பம் வரும். என்மேல் பிழை இல்
லாதிருந்தும் இவள் ஊடியது எனக்கு இன்பமே
ஆயிற்றே!

தவறிலர் ஆயினும் தாம்வீழ்வார் மென்தோள்
அகறிலின் ஆங்கொன்று உடைத்து. (க
கூஉடு) —"ஆமாம் கூடுதலேக் காட்டிலும் ஊடுதலே
இனிது! இதுவே பசித்து உண்பவன்
சுவைபோலப் பெரிதும் இன்பமதரும். ஒருவன்

மேன்மேலும் உண் டால, நே ரயே அடைவான். பசித்து உ ண்டால் அதிகமும் உண் ணுவான்; உண் ணும் உணவும் இன் சுவையாயிருக்கும், அதுபோல, மேன்மேலும் கூடுதலைப் பார்க்கினும் ஊடிக் கூடுதலே உருசியா கும்! ஊடியிருந்து பின் கூடும கூட்டம் எத்தனை இன்பம் உடையது என்னைப்போல அதை உண்ட வரே அறிவார்!

உணலினும் உண்டது அறல்இனிது காமம்
புணா தலின ஊடல் இனிது.
(கக உ ௬)

—" இன்பம் உண் ணுதற்குரிய இருவருள்ளே ஊட லில் தோற்றவரே வென்றவராவா. அது அப் பொழுது அறியப்படாது. பின்னே கூட்டத்தி லே அவரா லே அறியப்படும்!—முன்னே இவள் என்னை முயங்காமல் ஊடிக்கொண்டாள். இவளு க்கு எதிர் நிற்க முடியாமல் அப்பொழுது இளைத்



துப் போனேன். ஆயினும், இப்போது நானே

வென்றவன் ஆயினேன். ஏனென்றால்,
நானே
பேரின்பம் பெற்றேன்.
ஊடலின் தோற்றவர் வென்றார் அதுமன்னும்
கூடலிற் காணப் படும்.
(கcongruent) —"ஓ! இன்னும் ஒருதரம்
இப்படிப்பட்ட இன்பம்
எனக்கு அடையலாகுமோ? ஆ! இவள்
நெற்றியும்
வெயர்த்தது. எனக்கு இனிமையும்
எய்திற்று.
கண்டும் கேட்டும் உண்டும் தீண்டியும்
மோந்தும் அறிதலாகிய எல்லா இன்பமும்
ஒருங்கே
அடைந்தேனே! இவ்வகையான இனிமையை
இன்
னும் ஒருகால் இவள் ஊடவும் நான் பெறவும்
வல்
லேனோ? இல்லை! முடியாது!

ஊடிப் பெறுகுவம் கொல்லோ நுதல்வெயர்ப்பக்
கூடலில் தோன்றிய உப்பு.
(கஉஅ) —"ஒளியிழையே! இன்னும் ஒருமுறை
நீ ஊடிக்

கொள்ளாயோ? ஊடிக்கொள்.
ஊடிக்கொள்.
உன்னை வேண்டிக்கொள்கின்றேன்.
அப்பொழுது
இரவே! நீ விடியாமல் நெடுநேரம் நீட்டி
க்கவேண்
டும். ஆம்! நீ நீட்டிக்கவேண்டும். நீ விரைவிலே
விடி
ந்துவிட்டால், இவள் நெடுநேரம் என்னோடு
ஊடி
நிற்கவும் முடியாது; அதை
உணர்த்தவேண்டி
இவளை நெடுநேரம் நான் இரந்து நிற்கவும் முடி
யாது.
ஆதலால், இரவே! நீ நீட்டிக்க வேண்டும்.

இன்பப்பிரிவு—க. பரத்தை

கஎ௧

ஊடுக மன்னோ ஒளியிழை யாம்இரப்ப
நீடுக மன்னோ இரா.
(௧௩௨௯)

—"காமநுகர்ச்சிக்கு இன்பம் யாது? அக்காமத்தை உண்ணுதற்கு உரிய இருவரும் ஆராமைபற்றித் தம்முள் ஊடுதல் அல்லவோ? அந்த ஊடுதற்கு இன்பம் யாது? அவ்வூடலை அளவறிந்து நீக்கித் தம்முள் கூடி முயங்குதல் கூடுமானால், அம்முயக்கம் அல்லவோ?—ஊடலில் ஒத்த அளவினராக வேண்டும். முதிர்ந்த தனியானால் துன்பம் பயக்கும். முதிராத புலவியானால் கலவி இன்பம் பயவாது. இரண்டற்கும் இடையாகிய அளவறிந்து நீங்குதலே காதலர் கடமை; அதுவே ஊடுதற்கு இன்பம். ஓ! இவ்விரண்டு இன்பமும் என்னைப், போல பெற்றவர் யாவர்?

ஊடுதல் காமத்திற்கு இன்பம் அதற்கின்பம் கூடி
முயங்கப் பெறின். (கடக0)

கற்பியல் முற்றும்.

திருக்குறள் நாடகம் முற்றுப் பெற்றது.

இப்புத்தகம் கிடைக்குமிடம்:—

மயிலை. க. மாணிக்கவேல் முதலியார்

'கலாசிந்தாமணி' நிலையம்,

4, மல்லீஸ்வரன் கோயில் தெருவு, மயிலாப்பூர் போஸ்டு,

மதராஸ்.